பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

# ஹாமீர்முஜ் கதை.

நாகூர், மஹா, கனம்

## மு. ஆ. சுல்த்தான் மரைக்காயர்.

அவர்களின் வேண்டுகோளுக் கிணங்க,

நாகூர், தளவாய்

## ம. சின்னவாப்பு மரைக்காயர்,

ஹிந்தி பாஷையிலிருந்ததை,

தமிழில் மொழிபெயர்த்து,

சிங்கப்பூரில் அச்சிட்டு ரிஜிஸ்ட்டர் செய்திருந்ததை

வாணியம்பாடி.

அ. கா. முஹம்மது காசிம் சாஹிபு,

அவர்கள் ஷெயார் அவர்களுக்கு ரிஜிஸ்டர் ஹக்கை

கொடுத்து கிரயத்திற்கு வாங்கி,

சென்னை திருவல்லிக்கேணி,

ஷாஹுல்ஹமீதிய்யா அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை, 1912. ரூ. 1—8—0

# அறிக்கை.

———::———

இதனால் சகல கனவான்களுக்கும் தெரிவிப்பதாவது இப்புத்தகம், ம-ள-ள-ஸ்ரீ மகாசனம் நாகூர் வித்துவசிரோமணியாகிய தளவாய் ம. சின்னவாப்பு மரைக்காயர் அவர்களாற்செய்து அச்சிட்டு ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருந்த ரிஜிஸ்ட்டரை நாம் கிரயம் கொடுத்து வாங்கி அச்சிட்டிருக்கிறபடியால் நம்முடைய உத்திரவன்றி யாதாமொருவர் அச்சிடாமலிருக்கும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்.

இங்ஙனம்,

**வாணியம்பாடி,**

அ. கா. முஹம்மதுகாசீம் சாயபு.

———:*:———

## இப்புத்தகம் தேவையானவர்கள்.

(1-வது) மதராஸ் திருவல்லிக்கேணி, பள்ளப்பன் தெரு, நெ. 93. ஷாஹுல்ஹமீதிய்யா அச்சியந்திரசாலையிலும்:—

———

(2-வது) சிங்கப்பூர், அறபு ஸ்ட்ரீட், ஹாஜீலேன், நெ. 11. முஹம்மதிய்யா கித்தாபு கடையில், அ. கா. முஹம்மதுகாசீம் சாஹிபு அவர்களிடத்திலும் பெற்றுக்கொள்ளலாம்.

# முகவுரை.



சர்வலோக ஆதீனஸ்தனும், சர்வஜீவ ரக்ஷகனும், தனக்குத் தானே, ஒப்பாய் விளங்கி நிற்பவனும், ஆதியும் அந்தமும், பெண்டிரும், பிள்ளையு மில்லாதவனும், (அல்லாஹ்) என்னும் அரிய பெரிய திருநாமத்தை உடையவனுமாகிய, கடவுளைப் புகழ்ந்தபிறகும், அவனது உண்மைத் தீர்க்கதரிசியாயும், அஞ்ஞானமென்னும் அந்தகாரத்தை அறுத்தொதுக்க, மெய்ஞ்ஞான சூரியனாய் உலகுதித்து, நம்மனோர்க்கு இன்றியமையாத (வஹ்தானியத்து) ஒரே கடவுளுண்டென்பதை யெண்பித்துக் காட்டி நம்மை யீடேறச்செய்யும் விசுவாசபோதகராயும் விளங்கிநிற்கும், நபினாயகம் (முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அவர்கள்மீதும் அவர்களின் கிளையார்மீதும், (ஸஹாபா) அவர்களின்தோழர்கள் மீதும், (ஸலவாத்து) வாழ்த்தல் (ஸலாம்) கீழ்ப்படிதலைச் சொரிந்தபிறகும், நம் திராவட நண்பர்களிடத்தில் செய்துக்கொள்ளும் விக்ஞாபனம் என்னவெனில். ரோமாபுரியில் மனுநீதி வழுவாது நியாயபரிபாலனஞ் செய்து அட்டாங்க யோகத்தையும் பெற்று (கோடி கோடி யளவினதாகிய பொருளைப்பெறினும், உயர்குடிப் பிறந்தார் குன்றுந்தொழிலைச் செய்யாரென்பதிற்கிலக்காய்) தன் பிரஜைகளிடத்தில் அன்புடைமையாற்சிறந்து விளங்கிய, அலக்ஜாண்டர் சக்கரவர்த்தியின் தவப்புத்திர ரத்தினமாகிய ஹூர்முஜ் இளவரசரினதும், கூஜான்தேசத்தரசரின் தவப்புத்திரி, அழகிற்சிறந்த "குல்" கமலமென்னும், இளவரசியினதும், சரித்திராலங்காரத்தை, சிலபதிற்றுண்டுகளின் முன்னர், (உர்து) ஹிந்திபாஷையில் புத்தகமாக்கப் பட்டிருந்ததை ஹிந்திபாஷையறியாத, திராவிட நண்பர்களும் அறிந்தானந்திக்குமாறு, தமிழில் மொழிபெயர்த்துத் தரவேண்டுமென்று எமது அத்தியந்த நண்பராகிய, நாகூர், மு. ஆ. சுல்தான் மரைக்காயரவர்கள், பண்

முறை, எம்மை வற்புறுத்திக் கேட்டுநின்ற நிமித்தம்பற்றி, ஹிந்திபார்ஷையில் அதிக தேர்ச்சியில்லாத, யாம், அச்சரிதத்தை, ஒருவாறு, இனிய, தமிழ்வசன நடையில், முப்பது அத்தியாயங்களாய்ப் பிரித்து எழுதிமுடித்தோம்.

இச்சரிதம், எப்புத்திமானையும் தன்னில் சுவரச்செய்யும் இயல்பினையுடைய தென்பது வாசித்தறிந்தார்க்கன்றி ஏனையோர்க்குப் புலப்படமாட்டாது. இதின் சிலபாகம், காதலர்களின் காதலையும் பெண்மணிகளாகிய கண்மணிகளுக்கு முக்கியம்வேண்டிய கற்புடைமையையும் வரையறுத்துப் போதிக்கும். சிலபாகம், போர்த்திறத்தைப் பூட்டும். சிலபாகம், தளரா முயற்சியைத் தருமென்பதை ஸ்திரப்படுத்தும். சிலபாகம், பில்லிசூனியப்பிடறுக்கும் வழியைக்காட்டும். சிலபாகம், தந்திரோபாயத்தையும், சமைபத்தறுவாயில் பிரயோகிக்கவேண்டிய சமர்த்தையும், கற்பிக்கும். சிலபாகம், துன்புற்றவன், இன்புறுவானென்பதை யெடுத்துக்காட்டும். இச்சரிதத்தின் அருமை பெருமை யினத்தென வரையறுத்துக் காட்ட எம்போல் வார்க்கியன்றதன்றுகலின் ஒருவாறு சுருக்கிக்கூறினம்

இச்சரிதம், ஆரம்பத்தில், ஆச்சரியத்தையும், அடுத்தாமையாக இன்பத்தையும் அதற்கடுக்க, கிலேசத்தையும், கடைசியில் பேரானந்தத்தையும் விளைத்து நிற்குமென்பதில் எவ்வித ஆக்ஷேபனையுமில்லை. அன்றியும் இதில், சாதிபேத, மதபேதவிஷயங்கள் ஒன்றேனுமில்லை. ஆகையால், எச்சாதியினரிடத்தும், இக்கதையிருக்கப் பெறுமாண்புடையதேயாம். ஆகவே. ஒப்பற்ற, ஏகடவுளின் நற்கருணையையும், இதிகாசாசிரியர்களின் பேரன்பையும், வேண்டிநிற்கின்றேம்.

ஆக்கியோன்,

தளவாய். ம. சின்னவாப்பு மரைக்காயர்.



# ஹுர்முஜ் சரித்திரம்.

—:(*):—

## 1-ம் அதிகாரம்.

### (ஹுர்முஜ் அவதரித்தது.)

நீர்வளம், நிலவளம் சிறந்தோங்கிய, "ரூமாபுரியில் முற்காலத்தில் அலெக்ஜாண்டரென்னும் பெயர்பூண்ட ஒரு அரசரிருந்தார். அவரின் நீதியும், நற்குணமும், இப்பூவுலகின் பலபாகங்களிலும் பரவியிருந்தன. அவருடைய நீதியின் கூர்மையால் இடிவிழுந்து புல் கரியாதிருந்தது. மேகம் சூரியனையும், சந்திரனையும் எக்காலத்திலும் தேவைக்குமேல் மறைக்கிறதேயில்லை. இடியின் சப்தமே அவருடைய ஆளுகைத் தேசங்களி லில்லாதிருந்தது. ஆயிரக்கணக்கான பட்டணங்களும், தீவுகளும், அவரின் ஆக்கினைக்குள்ளடங்கியிருந்தன. பலதேச அரசர்கள் அவருக்குக் கீழ்ப்படிந்து கப்பங்கட்டி வந்தார்கள். அவரின் ஆக்ஷி பூமிகளிலுள்ள சகல பிரஜைகளும் மஹா ஐக்கியமுடையவர்களாயிருந்தார்கள்.

அவ்வரசர், சமயா சமயங்களில் தேவையாகும் சகல வஸ்துக்களும் போதுமானமட்டுக்கு மேற்கொண்டு தயார்ப்படுத்தி வைத்திருந்தார். அவருக்கு விரோதிகளென்பதே யெத்திக்கிலும்உண்டாயிருக்கவில்லை. அவருடைய அரசாட்சி காலத்தில் எவ்வித மான குழப்பமுமிருந்ததில்லை. சகல பட்டணங்களிலும் இரவும், பகலும் பெருநாள் போன்றிருந்தன. மனமகிழ்ச்சியென்னு நதி

கள் எத்திசையிலும் ததும்பிக்கொண்டிருந்தன. ஆரோக்கியத்தின் அலைகள் பல பாகங்களிலும் மோதிக்கொண்டிருந்தன. சந்தோஷமென்னுங்கடை வீதிகளில் கொண்டாட்டமென்னுங் குடிப்புகள் மலிந்திருந்தன.

அவருடைய ஆக்ஷி பூமியின் எவ்விடத்திலும் கஷ்டமென்னும் வார்த்தையே நடமாடியதில்லை. அவரை நீதமுடைய அரசரென்று கூறுதார் ஒருவருமில்லை. அவர் சந்தோஷத்துடனும், ஆரோக்கியத்துடனும் காலங்கடத்திவந்தார். தேசங்கள் செழித்திருந்தன. ஆனல் அவருக்குப் பிறகு அவருடைய சிம்மாசனத்தில் வீற்றிருந்து செங்கோ லோச்சக்கூடிய சந்ததியற்றவராயிருந்தார். அவ்வெண்ணம் அவருடைய மனதிலுண்டாகும் போதெல்லாம், சஹித்தற்கியலாக் கவலையால் கசங்கிய புட்பம் போன்று நிறப்பேதகமடைவார். அனேக சமையங்களில், அதே கவலையில் மூழ்கி, சுவரிலெழுதிய சித்திரம்போன்றிருப்பார். மந்திரி, பிரதானிகளிடத்தில் தன் கவலையின் காரணத்தையும் அதனல் சம்பவித்திருக்குங் கைசேதத்தையும் முறையிடுவார். அரசரின் மந்திரி, பிரதானி முதலானவர்கள், எஜமானே! தாங்கள் மனக்கலக்கங் கொள்ளாதிருங்கள். கடவுள், தங்களின் நாட்டத்தை நிறைவேற்றுவிப்பார். நம் முன்னோர்களின் நாட்டங்கள் நிறைவேற்றப்பட்டன்றே? நாம் உதித்திருக்கிறோம். ஒரு சொல்லால் உலகங்களையும் படைத்த கடவுளுக்குத் தங்களுடைய நாட்டத்தை நிறைவேற்றுவிக்க எவ்வளவு நேரம் பிடிக்கப்போகிறது. எந்தக்கருமமும் காலத்தை யெதிர்பார்த்து நிற்கும். அதன் முடிவை அறிய யாராலாகும். தாங்கள் கடவுளிடத்தில் ஆதரவு வைத்திருங்கள். எங்களுடைய வுபதேசத்தைக் கைக்கொண்டிருங்களென்று பல விதமான தேறுதல் கூறிவருவார்கள்.

அரசர், அவர்களின் உபதேசங்களைக் கேட்டபோது சற்று மனத்திடனுற்று சர்வசிருஷ்டி கர்த்தரிடத்தில், தன்னுட்டத்தை

முறையிடுவார். அளவறுந்த நேர்ச்சிகளும் செய்துவருவார். பல முறைகளில், ஆ கடவுளே! நீர் சீமான். நான் ஏழை. நான் தேடுகிறவன். நீர் கொடுக்கிறவர். மொக்குகள் உம்முடைய கட்டளையைக் கொண்டே மலருகின்றன. சகல வஸ்துக்களும் உம்முடைய வுதவியைக்கொண்டே உற்பவித்திருக்கின்றன. நீர் சகலவற்றின் சக்கரவர்த்தியாயிருக்கின்றீர். நான் இப்பூவுலகத்தில் சக்கரவர்த்திப்பட்டத்தைச் சூட்டிக்கொண்டிருக்கிறேன். இருந்தும் என்ன பிரயோஜனம்? பிள்ளையில்லை யென்னுங் கவலையால் பிணம் போன்றிருக்கிறேன்.

ஆகையால் உம்முடைய கிருபையென்னுங் கண்ணாலென்னைப்பார்த்து, என்னுடைய நாட்டமென்னுந்தருவில் தேட்டமென்னுங் கனிகளைக் கனியச் செய்வீராகவென்று, கடவுளைப் புகழ்ந்து பாடுவார். சுருக்கிக் கூறுவோம். அரசருக்கு, பிள்ளையில்லையென்னுங் கவலையே நாளடைவில் அதிகரித்தது. சில சமையங்களில் அலறியழுவார்.

கடைசியில் படிப்படியாக மனப்பதறுதல் மீறி, என்னவிருந்தது, என்ன போயிற்றென்பதை அறியாதவராகி பயித்தியங் கொண்டவர் போலானார். பூரணமான கவலைக்கடலுள்ளாழ்ந்து, அரசாக்ஷி விஷயத்தில் பார்வை செலுத்தாமலும், பிரஜைகள் பேரில் நெறி நீதி நடத்தாமலும், பிரியாது முதலான மனுக்களை நோட்டமிடாமலும், யாவற்றையும் விட்டொழித்து, தனித்திருப்பதையே தகுதியாகக் கண்டு, இராஜ சபைக்கு வராமலும், சமுகங் கொடுக்க வருபவர்களைச் சந்திக்காமலும், தனித்த அறையொன்றில் புகுந்து மறைந்திருந்தார்.

இதைக்கண்ட, மந்திரி, பிரதானி முதலான சகலபணிவிடைக்காரர்களும், அரசரின் ஏறுக்கு மாறான செய்கையால் மிகக்கலங்கி, ஒன்று சேர்ந்து, ஆ, கடவுளே! இதென்ன விபரீதம்? அரசர் கொலுக்கூடத்துக்கு வருகிறாரில்லையே. அரசாக்ஷிக் கருமங்களை நோட்டமிடுகின்றாரில்லையே. நீதியின் தீர்ப்பு எவ்வாறு நடைபெ

னும்?.காகிதத்தாற் செய்தகப்பல் கடலோடிச் செல்லுமா? என்று பலவாறு புலம்பி ஆலோசித்தார்கள். கடைசியாக, சகலரும் அரசருக்கு மனுவெழுதிக் கொள்வதே நலமெனத் தீர்மானித்து, ஒரு காகிதத்தில், எங்கள் நாயகமே! தாங்கள் கொலுக்கூடத்துக்கு வராமலும், தங்களின் பிரகாசமான முகத்தை யெங்களுக்குக்காட்டாமலுமிருப்பதால் எங்களுக்குள் மிகுந்த கலக்கமேற்பட்டிருக்கிறது. தங்களுக்கு எங்களாலாகவேண்டிய விஷயங்கள் ஏதேனுமிருந்து தாங்கள் கட்டளையிட்டால் நாங்கள் கட்டாயஞ்செய்து முடிக்கக் கடமையுடையவர்களாயிருக்கிறோம்.

தாங்கள் கொலுக்கூடத்துக்கு வராதிருப்பது எங்களுக்கு யுக முடிந்தது போலக் காணப்படுகிறதுமல்லாமல் ஆயிரக்கணக்கான அபாயங்களுக்கும் இடம்பாடாகிறது. தாங்கள்இன்னமும் கொலு மண்டபத்திற்கு வராதிருந்தால் கடப்பான ஆலோசனையுங் கலக்கமும் எங்களைக் கொன்றுவிடும்போலிருக்கிறது. ஆகாயம் நிறப் பேதசமுறும். அடக்கத்திலிருக்கிற நம்முடைய இரகசியங்கள், நான்கு திசையிலுமுள்ள விரோதிகளுக்கு விளக்கமாகிவிடும். தூக்கணாங்குருவி யிருந்த தலத்தில் ஆநதை குடியிருக்க நேரிடும். ஆகையால் தாங்கள் எங்களுடைய விண்ணப்பப் பத்திரத்தை அங்கிகரித்து, எங்களுடைய வுபதேசங்களைப் பெரிதாக மதித்துக் கொலுக்கூடத்துக்கு வரவேண்டும். அதினால் நாங்கள் மனநிலைப்பாடு பெறவேண்டும். இல்லங்களில் களிப்பாட்டமுண்டாகவேண்டும். புறம்பேசுவோர் தட்டழிய வேண்டும். நான்கு திக்கிலும் காவற்பாடு பரவவேண்டும். எங்கள்பேரில் விதியானவைகளைத் தெரிந்தமட்டில் தெரிவித்துவிட்டோம். அதற்குமேல் தங்களுடைய இஷ்டம் என்றெழுதி அரசருக்கனுப்பினார்கள்.

அரசர், அவ்விண்ணப்பப் பத்திரத்தை வாசித்தோர்ந்து அவர்கள்பேரிற் கிருபையுடையவராகி, இறகைக் கையிலெடுத்து அப்

பத்திரத்தின் பிற் பக்கத்தில், ஆ! கவலையுடைய பிரஜைகளே!! உண்மையாக நீங்களெனக்கு நன்றி செய்தீர்கள். நான் வயது சென்ற கிழவனுகியும் என்னுடைய சிம்மாசனத்திலிருந்து எனக்குப் பகரமாய்ச் செங்கோலோச்சக்கூடிய புத்திரபாக்கிய மற்றவனுயிருக்கிறேன் அப்படிப்பட்ட எனக்கு இவ்வரசாக்ஷியில் என்ன இன்பமிருக்கிறது? என்ன பிரயோசனமிருக்கிறது? என்னுடைய வயதும் எண்பதைக் கடக்க முடுகிற்று. இத்தளர்ச்சி காலத்தில் எதற்காக நான் கஷ்டத்தை யனுபவிக்கவேண்டும்? என்னத்திற்காக என்னை நானே கல்திரிகையிலாக்கிக் கொள்ளவேண்டும்? இவ்வுலக வாழ்க்கையைக் கைநெகிழ விடுவதே எனக்கு நலமாகத்தெரிகிறபடியால் மீதி வாணுளையுங் கடவுள் வணக்கத்திற் கழிக்கத் தீர்மானித்து விட்டேனென்றெழுதி, கையொப்பமிட்டு, பிரதான மந்திரிக்கனுப்பினுர்.

பிரதானமந்திரி, அக்கடிதத்தை வாங்கி, கண்ணிலொத்திமுகந்து, பிறகு வாசித்தறிந்து, பூரணக் கவலையடைந்து, அப்போதே மிகவும் தேர்ந்த விவேகிகளை அரசாக்ஷி மண்டபத்தில் வரவழைத்திருத்தி யுபசரித்து, அவர்களைப் பார்த்து, சினேகிதர்களே! மஹான்களாகிய வுங்களுக்கு நான் கஷ்டத்தை யுண்டாக்கியதற்கு எங்களுக்குண்டாயிருக்கும் சஞ்சலமே, காரணமாகிறது. நம்முடையஅரசர், பிள்ளையில்லாக்கவலையால் மனமுடைந்து, அரசாக்ஷி விஷயங்களை அடியோடே கைநழுவ விட்டு கொலுக்கூடத்திற்கு வராமலும், மனு முதலானவைகளில் பார்வை செலுத்தாமலும் தனித்தவிடத்தில் தரித்திருக்கிறுர். ஆகையால், நாம் அவருடைய கவலை தீரும்படிக்கான முயற்சியைச் செய்யவேண்டும். அவர் பழைய நிதானத்தில் வரவேண்டும். இல்லாதுபோனுல் அரசாக்ஷி விஷயத்தில் குழப்பங்களேற்பட்டு பட்டணம் அழிந்துபோகும். சத்ராதிகள் மிகைத்துக்கொள்ளுவார்கள். நீங்களும் நாங்களும் அவர்களால் வேட்டையாடப்படுவோம். நம்முடைய பெண்சாதி பிள்ளைகள் சிறைவாரப்படுவார்கள். இதற்கென்ன ஆலோசனை கூறுகிறீர்களென்று கேட்டார்.

அவர்களடங்கலும் பல திக்கிலும் யோசனையைச் செலுத்திக் கவலித்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுள் 100-வயது நெருக்கமாகவுடையவரும், முக்கால நிதானங்களை அறியுஞ்சக்திபடைத்தவரும், மஹா யூகமும், கல்வித் தேர்ச்சியுமுடையவருமான ஒருவ ரெழுந்து நின்று பிரதான மந்திரியைப்பார்த்து, தங்களைக் கடவுள் ஆசிர்வதிப்பாராக. இந்த ஏழையடிமையின் கேவலப் புத்தியில் இலேசான யோசனையொன்று தட்டப்படுகிறது. உத்திரவானால் என்னுடைய நன்றியறிதலை வெளியாக்குகிறேன். ஒருக்கால் நம் மரசரின் நாட்டம் அந்த யோசனையால் நிறைவேறவுங்கூடும். பகல் போய் இரவு வருமென்ற ஒரு சுலோஹமுமிருக்கிறதல்லவா? என்று விடுத்துக் கூறினர்.

பிரதான மந்திரி, அளவிலா மகிழ்ச்சிபூண்டு அவ்விருத்தரைப் பார்த்து, விருத்தரே! கடவுளின் திருநாமத்தைக் கூறியவராக, அதிசீக்கிரம் உம்முடைய யோசனையை வெளிப்படுத்தும். தேவையானல் வெகுமதி பெற்றுக்கொள்ளுமென்று விடை கொடுத்தார். அவ்விருத்தர், இங்கிருந்து இரண்டுநாள் பயண தூரத்தில், அச்சமற்ற காடென்றழைக்கப்படுகிற ஒரு வனமிருக்கிறது. அங்கே ஒரு தபோதனர், தனித்திருந்து கடவுளை வணங்கிக் கொண்டிருக்கிருர். அவர் கடவுள் வணக்கத்தில் பரிபூரணமடைந்தவர். யாராகிலுமொருவர், அவரிடத்துச்சென்று தன்னுட்டத்தை முறையிட்டால், அவர் கடவுளை வேண்டுகிருர். கடவுள், அதை நிறைவேற்றிக் கொடுக்கிருர். ஆகையால் நம்முடைய அரசரும் அவரிடத்துச் சென்று தன்னுட்டத்தை முறையிட்டுக்கொண்டால், அவர் கடவுளை வேண்டுவார். நம்மரசரின் நாட்டம் கட்டாயம் கைகூடும். பிள்ளையில்லையென்னுங் கவலை அவர் மனதைவிட்டும் பறந்தோடுமென்று கூறினர்.

அங்கிருந்த சகலருக்கும் அவ்விருத்தர் கூறியவைகள் மிகுந்த சந்தோஷத்தையுண்டாக்கின. உடனே, பிரதான மந்திரி, விலையுயர்ந்த அருமையானவுடுப்பொன்று அவ்விருத்தருக்கு வெகு

மதியளித்து அவரைத், தன்னுடைய அந்தரங்க நேசர்களுள் ஒருவராக்கிக்கொண்டார். பின்பு, தபோதனருடைய சமாச்சாரத்தை விவரமாயெழுதி அரசருக்கனுப்பினர். அரசர் அடிக்கடிதத்தைக் கண்டவுடனே, ஆசையென்னு நெருப்பால் கரிக்கப்பட்டவராகி தரிப்பிடங் கொள்ளாமல் அன்றையத்தினமே, தன் பரிவார சகிதமாகப் புறப்பட்டு நடந்து அச்சமற்று காட்டிலிருக்கும் தபோதனரிடத்துக்கு வந்து சேர்ந்தார். அரசருடன் கூடச்சென்றவர்களிற் சிலர் ஓடோடியும் போய் அரசரின் வருகையைத் தபோதனருக் கறிவித்தார்கள். அவர் கேட்டவுடனே, கடவுளுக்கும், அவரின் தீர்க்க தரிசிக்கும்,அவர்களின் கட்டளைகளுக்கும், நாம் வழிபடவேண்டுமென்று கூறி ஆசனம் விட்டெழுந்து அரசரை யெதிர் கொண்டழைக்க வெளியில் வந்து முன்வாசலில் சந்தித்து வந்தனங்கூறி கைலாகுகொடுத்துக் கட்டித் தழுவி வீட்டுக்குள் அழைத்துச்சென்று ஆசனத்திருத்தி, அரசர் நாயகமே! என் தாங்கள் இவ்வளவு கஷ்டத்தையடைய வேண்டும்? கட்டளையானல் தங்களடிமை வரமாட்டாஞ? தங்களுடைய ஏவலுக்கு மாறு செய்யமாட்டானேயென்று வணக்கத்துடன் கூறினர்.

அதற்கு அரசர், தபோதனரே, என்னுடைய வயது எண்பதுக்கு மேலாய் விட்டதைத் தாங்களறிந்திருக்கிறீர்கள். என்னுடைய உறுப்புகளில் சோர்வுண்டாகி விட்டது. மரணத்தின் காலஞ்சமீபித்து விட்டது. பார்வையின் ஒளி மழுங்கிவிட்டது. கிழத்தனம் மேலாடிவிட்டது. இப்படிக்கிருந்தும் இதுவரையில் சந்தானமற்றவனகவேயிருக்கிறேன். எனக்குப் பின்னல் என்னுடைய ஆக்கினையை ஒப்புக்கொண்டு நடத்தக் கூடிய புத்திரரில்லாத காரணத்தினலேயே நான் மிகுந்த கவலையும் கைசேதமுமடைந்தவனுயிருக்கிறேன். அக்கவலையினலேயே இவ்வரசாக்ஷியின் பேரில் எவ்விதமான பற்றுதலும் எனக்குண்டாகவில்லை. ஆகையால் தங்களுடைய பிரார்த்தனையால் என்னுடைய கோரிக்கை, கைகூடவேண்டுமென்று நாடி, தங்கள் சமுகத்தில் வந்திருக்கி

றேன். நம்பிக்கையற்ற இரவுபோய் உறுதி யென்னும் பகல் வரப் போதுமென்பதை நம்பியிருக்கிறேன். தாங்கள் நன்றி செய்தவர் களாவீர்கள். நான் சீவித்திருக்கும் வரையில் நன்றியறிதலுடைய வனுயிருப்பேனென்று வணங்கிக் கூறினர்.

தபோதனர், நாயகமே! தாங்களேன் அவ்விதஞ் சொல்கின் றீர்கள்? வெறுமனே இவ்வடிமையைக் குற்றவாளனுக்குகின்றீர் கள். தாங்களிடுங் கட்டளைபோல் நடக்க, கடவும் கிருபையால இதோ தங்களின் சிற்றடிமை தயாராயிருக்கிறன். என் கேவலப் புத்தியில் தட்டுப்படுகிறது என்னவென்றலோ, தாங்கள் வியாழக் கிழமை நோன்பு வைத்து வெற்று ரொட்டியால் நோன்பு திறந்து, குளித்து, தூயவுடை யணிந்து, துப்புரவான விரிப்பின் பேரிலுட் கார்ந்து நான் அறிவிக்கிற மந்திரத்தை ஆயிரமுறை ஜெபித்துக் கொண்டு படுத்துறங்கினல் "கடவுளின் கிருபையால் போர்க்கள த்தில் மரித்தோர்களின் ஆத்மாக்கள் தோற்றப்படும். முதலில் பச்சை உடைக்காரர்களும், நடுவில் கறுப்புடை யணிந்தவர்களும், கடைசியில் வெள்ளை யுடை யுடுத்தியவர்களும் வரிசை வரிசையாக வருவதைத் தாங்கள் கனவிற் காண்பீர்கள். இம்மூவகையாரும் போனபிறகு செவப்புடை யணிந்தவர்கள் அணியணியாய் வருவார் கள். அப்போது தளகர்த்தர் ஏறிவருங் குதிரையின் காலில் தங் களின் சிறப்பான சென்னியை வைத்துத்தங்கள் நாட்டத்தை அத் தலைவரிடத்தில் முறையிட்டு வணங்கி நின்றல், கடவுளுதவியால் தங்களின் நாட்டம் நிறைவேறத் தடையிராதென்கிற நம்பிக்கை யெனக்குண்டாயிருக்கிறதென்றர்.

— பறந்

அரசர், மெத்த நல்லது. அந்தப்படியே செ[illegible]கிறேன். ஆனல் அத்தலைவரை நான் எவ்விதத்திலறிவேன்? என்ன அடையாளத் தைக்கொண்டு கண்டுபிடிப்பேனென்றர். தபோதனர், நாயகமே! உண்மை சொன்னீர்கள். அனேகர் அவரைக்கண்டு பிடிக்கக் கூடா மையால்தான் துன்புறுகின்றர்களென்றர். அரசர், அத்தலைவ

முதலிய தேவைக்காகவும், அம்மடத்தில் விடுதிவிடுவார்கள். அப் பாதகர்கள் நெருப்பு முதலானது கொடுத்து அவர்களை உபசரித்து வார்த்தையாடி, சமயம்பார்த்துக் கொலை புரிந்து அவர்களின் பொருட்களை அபகரித்துக் கொள்ளுவார்கள். இந்தப்படிக்குச் சிலகாலம் நடந்து வந்தது. ஒருநாள் ஒருவாலிப வழிப்போக்கர் அவ்வழிப் போந்தார். அக்கொலைஞர்கள் வழக்கப்பிரகாரம் அவரையும் அழைத்தார்கள். அவர் அம்மடத்தில் விடுதிவிட்டு, புகை குடித்து, வுடை களைந்து, ஒரு மரத்தடியில் குளிர்ந்த காற்று வீசும்படிக்கானவிடத்தில் படுக்கை போட்டுப் படுத்துறங்கினர்.

இதைச்கண்ட அவ்விரு கொலைஞரும் நல்ல சமையம் வாய்த்ததென்றெண்ணி ஆயுதத்துடன் விரைந்துவந்து ஒருவன் அவ்வாலிபரின் நெஞ்சிலேறி யுட்கார்ந்துக்கொண்டான். மற்றொருவன் அவரின் இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டு தலைமாட்டிலுட்கார்ந்தான். அப்போது திக்கற்ற அவ்வழிப்போக்கர் பதறி விழித்துத் தடமாட்டத்திலாகி, மிகுந்த வணக்கத்துடனும் உருக்கத்துடனும் அப்பாதகர்களைப்பார்த்து, நாயகங்காள், என்னைக் கொல்லாதீர்கள். உங்களுக்கு என்னுடைய பொருட்களில் :தேவையிருந்தால் தடையின்றி யெடுத்துக் கொள்ளுங்கள். என்னை விட்டு விடுங்கள். கடவுள் பேரில் ஆணையாக, வுங்களுடைய கெட்ட செய்கையைக்குறித்து ஒருவரிடத்திலும் முறையிடமாட்டேன். மரிக்குந்தனிலும் உங்களுடைய அடிமைபோன்றிருப்பேனென்று கெஞ்சிக்கெஞ்சிக் கரைந்து வேண்டினர்.

அக் கல்மனக் கொலைஞர்கள் எங்கிருந்துவிடப் போகிறார்கள். கத்தி கையிற் பிடித்தபடிக்கே நெஞ்சைவிட் டிறங்கவுமில்லை. பிடித்த கையை விடவுமில்லை. அதைக் கண்ட வாலிபர் நம்பிக்கை யிழந்து கலக்கமுற்றுத் தியங்கிச் சப்தமிட்டழுதார். அவருடைய சப்தத்தைக் கேட்டு வுதவி புரிவார் ஒருவரும் அங்கில்லாததால் அச்சப்தம் அவலமாயிற்று. அவர் போட்ட கூச்சலால் அம்மரக்கிளையில் கூடு கட்டியிருந்த காட்டுப்புறு வொன்று

வெருண்டு பறந்துக்கொண்டிருந்தது. அக்கொலைஞன், அவ்வாலிப்ரின் கழுத்திற் கத்தியை வைத்தான். அவர், பறந்துக்கொண்டிருக்கிற காட்டுப்புருவைப் பார்த்து, ஏ, புருவே, நீ எனக்குச் சாக்ஷியாயிரு. எந்த விடத்தில் கேட்கப்படுவையோ, அந்த விடத்தில் விடை கொடுப்பாயாகவென்று கரைந்தழுதார். அப்பாதகன், அவருடைய கழுத்திற் பூட்டிய கத்தியைக்கொண்டு வேலையை முடித்துவிட்டு, இந்த மடையன் பேச்சறியாத காட்டுப்புருவை சாக்ஷி வைத்தானே. இவனைப் போன்ற ஒருவனை நாம் கண்டதுமில்லை. கேட்டதுமில்லையென்று நகைத்துவிட்டு, அவருடைய பொருட்களை யபகரித்துக்கொண்டார்கள். இவ்வாறு சிலகாலம் நடைபெற்று வந்தது. அவ்வழியின் இவ்வித குரூரச் செய்கை எங்கும் பிரஸ்தாபத்திலாய் விட்டதால் அவ்வழியில் பிரயாணிகளின் போக்குவரத்து தடைப்பட்டது. அவ்விரு பாதகர்களுக்கும், இதைத் தவிர வேறு வழியில்லாமையால் ஊண்தின் குடிப்புக்குக் கஷ்டப்பட நேர்ந்தது. வயிறுவளர்க்க வழி தேடிப் புறப்பட்டு ஊரூராய்த் திரிந்து சிலகாலத்தின் பிறகு ஒரு வூரிற் போய்ச் சேர்ந்தார்கள்.

அச்சமயம் அவ்வூரரசர் சவாரிபோகிற இரைச்சல் அவர்கள் காதில் விழவே, அவர்கள் விரைந்து முன்னேறி அரசருக்குத் தலை வணங்கினார்கள். அவர்களின் களைப்பாலும் கஷ்டத்தாலும் அவர்கள் பரதேசிகளா யிருக்கவேண்டுமென்று அரசர் கருதி, அவர்களைப்பார்த்து நீங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்களென்று கேட்டார். அவ்விருவரும் மிகுந்த வணக்கத்துடன் நாயகமே, தங்களுடைய திரு நாமத்தையும், நீதியையும் தயாள குணத்தையும், நாங்கள் கேள்வியுற்று, தங்களின் உதவியை ஆதரவு வைத்தவர்களாக வெகு தூரத்திலிருந்து வந்திருக்கிறோமென்றார்கள். அரசர் அவ்விருவரையும் தன் சொந்தப் பணிவிடையாளர்களாகச் சேர்த்துக்கொண்டார். அவர்கள் அரசரின் பணிவிடையில் பேணுதலுடையவர்களாகவும், அவர் சவாரி போகும் போது கூடவே போகிறவர்களாகவுமிருந்தார்கள். அவ்வரசர்,

வெளித்தேசங்களுக்குப் போவதிலும், வேட்டையாடச் செல்வதிலும், மஹா அபீஷ்டமுடையவராயிருந்தார். ஒருநாள் வேட்டையாடச் சென்றவிடத்தில் அழகான புள்ளி மானொன்றைக் கண்டு அதைப் பிடிக்கிறதற்காகத் தன் குதிரையை அம்மானுக்குப் பின் போக்கினர். அவ்விரு பணிவிடையாளர்களும் அரசரைப் பின்பற்றினர்கள். அப்படிக் கிருக்கும்போது, திடீரென்று அம்மான் காட்டுக்குள் மறைந்துவிட்டது.

அரசர் மனச்சோர்வுற்று, கடைசியில் பசியாலும் தாகத்தாலும் களைத்து ஒரு மரத்து நிழலில் உட்கார்ந்து, பணிவிடையாளர்களைப் பார்த்து, இந்நேரம் எனக்குப் பசியுந் தாகமும் பலமாயிருப்பதால் என்னுடைய சீவனைக் காப்பாற்றக் கூடியவுணத்தேடும் விஷயத்தில் நீங்கள் பின்னிற்கக் கூடாதென்று கூறினர். அவர்களுள் ஒருவன் அரசனை வணங்கி யெழுந்து, துப்பாக்கியைக் கையிலெடுத்துக் கொண்டு கொஞ்சத்தூரம் சென்று, விருக்ஷங்களடர்ந்த ஒரு தோட்டத்துட் புகுந்து, 10, 12, பக்ஷியினங்களை வேட்டையாடிக்கொண்டு வந்து, அரசருக்குப் பின்னால் நின்றுக்கொண்டு இன்னொருவருக்குச் சைகை காட்டினன். அவன் காட்டிற்சென்று, விறகொடித்து வந்து நெருப்புமூட்டி, அக்குருவிகளை வாட்டிக்கொண்டிருந்தான்.

அரசர், பசி பொறுக்க மாட்டாதவராய், வேட்டை யாடிக் கொண்டு வந்த வாலிபனைப் பார்த்து, சுட்டுத் தயாரானதைச் சீக்கிரங்கொண்டு வாவென்று கூறினர். அவன் மற்றொருவனுக்குக் கட்டளையிட்டான். அவன் சுடப்பட்டிருந்த இரண்டு மூன்று குருவிகளைக் கொண்டு வந்து கொடுத்தான். அரசர் அதிக ஆவலுடன் புசித்தார். அவற்றுள் ஒரு பெரிய பக்ஷியின் மாமிசம் மிகவும் ருசியாயிருந்தது. இது என்ன பக்ஷியென்று அரசர் கேட்டார். அவன் நாயகமே, நான் அறியமாட்டேன். கட்டளையானல் தெரிந்து வந்து கூறுகிறேனென்ருன். அரசர் நல்லதென்று தலையை அசைத்தார். அவன் இன்னொருவனிடத்திற் கேட்

சச் சென்றான். பின்பு அவ்விருவரும் சிரித்தவர்களாக அரசர் முன் வந்து எஜமானே, அது காட்டுப் புறாவென்றார்கள்.

யாதொரு காரணமும் மரியாதையுமின்றி என் முன்னால் நீங்கள் சிரிக்க நேரிட்டதுக்குக் காரணமென்னவென்று அரசர் கேட்டார். அவர்கள் மறுமொழி கொடுக்கவில்லை. அதனால் அரசர் சினந்து சீக்கிரத்தில் காரணங்கூறுங்கள். இல்லையானால் என்னுடைய கூர்மையான நீதியின் கொடையைப் பெற்றுக்கொள்ளுங்களென்றார். அவர்கள் எஜமானே, யாதோர் காரணமுமில்லை. திடுகூறாகச் சிரிப்பு வந்ததென்றார்கள். கடவுள் பிழைபொறுப்பாராக, என்னுடைய கேள்விக்கு விரைவில் மறுமொழி கொடுங்கள். அன்றேல், இதோ என் கைவாளுக் கிரையாகுங்களென்று அரசர் கூறினார். அவ்விருவரும் ஆலோசித்து, நாம் உண்மையைச் சொல்லாதுபோனால், அரசர் நம்மை உயிருடன் விடமாட்டாரென்றும், உண்மைக்கு அழிவில்லையென்றுந் தீர்மானித்து,எஜமானே, நாங்கள் சிலகாலத்துக்கு முன் ஒரு வூரில் வழிப்பறிக் கொலைஞர்களாயிருந்தோம். அப்போது ஒரு பாலிய வழிப்போக்கனைக் கொலைபுரிந்தோம். அவன் கொல்லப்படுகிற சமயத்தில் ஒரு காட்டுப் புறாவைப் பார்த்து சமயம் வந்தபோது நீ சாக்ஷி கூறவேண்டுமென்றான். அவனுடைய மடத்தனத்தின்பேரில் அப்போது நாங்கள் சிரித்தோம். இப்போது தாங்கள் அதென்ன பக்ஷியென்று கேட்டதால் அவ்வாலிபனின் ஞாபகம் எங்களுக்கு வந்து மாறியும் சிரித்தோமென்றார்கள்.

அதைக்கேட்ட அரசர், எனக்கு இராஜாங்கத்தைக் கொடுத்த சர்வசிருட்டி கர்த்தர் பேரிற் சத்தியமாக அந்த வாலிபன் சாக்ஷி வைத்த புறா இதுவேயென்று கூறி, வாளையுருவி அவ்விருவரின் தலைகளையும் வெட்டி யெறிந்து அவ்வாலிப வழிப்போக்கனின் பழிக்குப் பழி வாங்கினார். காரியம் இப்படிக்கிருப்பதால் இராஜமஹிஷியே, தாங்கள் யாதொன்றிற்கும் கவலைப்பட வேண்டாம். எவ்விதமான சந்தேகமுங் கொள்ளவேண்டாம். என்

னுடைய வுயிர் போக நேரிட்டாலுஞ்சரியே, தங்களுக்கு அணுத் தினை துன்பத்தையு முண்டாக்கமாட்டேன். தங்கள்பேரில் கெட்ட பார்வை பார்ப்பேனுனல் என் கண் மறைந்து போகக்கடவது. தங்களுக்கு ஒருவிதமான கவலையு முண்டாகாமல் கடவுளுதவியால் காப்பாற்றுவேன். இப்போது நான் பட்டத்தரசியிடத்திற் சென்று சில நாளிருந்து உத்திரவு பெற்றுக்கொண்டு தங்கள் சமுகத்தில் வந்து இரவும் பகலுந் தங்களுடனிருந்து தங்களின் பணிவிடைகளைச் செய்துவரக் கடவுள் கிருபை புரிவாராக வென்றுள்.

இதை இராஜாத்தி கேட்டு சற்றுநேரம் பிரமித்திருந்தாள். பின்பு,மருத்துவச்சியின் காலில் வீழ்ந்து மிகுந்த வணக்கத்துடன், தாயே, ஏழையாகிய என் மீது எப்போதும், நீ கிருபையுடையவளாயிருக்க வேண்டும். இன்று முதல் உன்னை நான் என் மாதாவாக அங்கீகரித்தேனென்றுள். மருத்துவச்சி, நல்லதென்று வுறுதி வாக்களித்து இராஜாத்தியிடத்தில் விடை வாங்கிக்கொண்டு பட்டத்தரசியிடத்தில் வந்து அவளைப்பணிந்து, நாயகியே, கருப்பவதியின்னுளென்பதைக் கண்டுகொண்டேன். கடவுள் கிருபையால் இப்போது நான் அவளிடத்துச் சென்று சிலகாலமிருந்து சமயம் பார்த்துக் கருவைச் சிதைத்து விட்டு வந்து சேறுகிறேனென்றுள். பட்டத்தரசி, அப்படியே செய்துவாவென்று வுத்திரவளித்தாள். மருத்துவச்சி அங்கிருந்து இராஜாத்தியிடத்துக்கு வந்து சில நாளிருந்து, பின்பொருநாள் ஒரு ஆட்டுக்குட்டியை அறுத்து இரத்தத்தை ஒரேனத்தில் வாங்கிக்கொண்டு பட்டத்தரசியிடத்தில் வந்து அதைக் காண்பித்து, நயகியே,இதோ என்னுடைய வாக்கை நிறைவேற்றி விட்டேனென்றுள்.

பட்டத்தரசி, சந்தோஷத்தால் முகமலர்ச்சியுற்று, தாயே, என, மருத்துவ மாதைவிளித்து, என்னை வெட்கமென்னுஞ் சிறைச்சாலையை விட்டும் விடுதலாக்கிய நீ, கடவுளுக்காகக் கொஞ்சம்

வெகுமதி பெற்றுக்கொள்ள வேண்டுகிறே னென்றாள். அதற்கு மருத்துவச்சி, நாயகியே, இன்னங் கொஞ்சவேலை மீதியிருக்கிறது. அதையும் முடித்துக்கொண்டு வந்து வெகுமதி பெற்றுக் கொள்ளுகிறேனென்றாள். பட்டத்தரசி, அதென்ன வேலை யென்று கேட்டாள். மருத்துவச்சி, நாயகியே, இராஜாத்தி, கருச்சிதைவால் நோய்வாய்ப்பட்டிருக்கிறாள். வேறே மருத்துவச்சி, அவளின் நோய்க்குப் பரிகாரஞ் செய்யத் தலைப்பட்டால் நோயின் காரணத்தை அறிந்துக்கொள்ளுவாள். அப்போது பெரிய அபாயத்துக் கிடமாகும். ஆகையால் நானே, அவ்விராஜாத்தி யிடத்துக்குச்சென்று, தக்க பரிகாரஞ்செய்து சுவஸ்தமாக்கி, தலைமுழுக்காட்டி விட்டுத் தங்கள் சமுகத்தில் வந்து சேருகிறேனென்றாள். அதற்குப் பட்டத்தரசி, நல்லது, தாயே, நீ, என்னைவிட மஹா யூகியா யிருக்கின்றாய். உன்பிரியம் போற் சென்று, அந்த அலுவலில் பாக்கியில்லாமல் ஒழுங்காகவும், உசாராகவுஞ் செய்துவிட்டு வருவாயாக வென்றாள். மருத்துவச்சி அங்கிருந்து இராஜாத்தியிடத்துக்கு வந்து என் எஜமானியே, பன்றிக்குணம் படைத்த பட்டத்தரசியிடத்தில், தாங்கள் நோயுற்றிருப்பதாகக் கரவடங் கூறி வந்திருக்கிறேன்.

ஆகையால் தாங்கள் தனித்த ஒரு அறையிலிருந்துக் கொண்டு வியாதியுற்றதாகப் பாவனை காட்டவேண்டும். வேறே யாரும் அவ்வரைக்குள் பிரவேசிக்கக் கூடாது. நான் மட்டில் தங்களுடனிருந்து பரிகாரஞ் செய்வதாகப் பாசாங்கு செய்கிறேனென்று சொல்லி, பட்டத்தரசியின் முன்னிலையில் நடந்தவைகளை விவரித்துக்கூறினாள். அதுபோல் இராஜாத்தி, ஒரு அறையைத் திட்டப்படுத்தினாள். மருத்துவச்சி அவளுடனிருந்து நோய்க்குப் பரிகாரஞ்செய்கிற பாவனை காட்டி வந்தாள். இவ்வாறு சிலமாதங்களாயின. கருவும் நாளுக்கு நாள் வளர்ந்து முதிர்ந்தது. கடைசியில் ஓரிரவு இராஜாத்திக்குக் கருமாரி கண்டது. இராஜாத்தி மருத்துவச்சிக்கு அதை அறிவித்தாள். அவள் அவ்வேலையில் மஹாத் தேர்ச்சியுடையவளானதால் செய்ய வேண்டிய பக்குவங்

களைச் செய்தாள். கடவுளின் கிருபையால், சந்திரனின் துண்டமோ? நெருப்பின் பிரகாசமோ? (ஜோஷப்) யூசுபு தீர்க்க தரிசித்தான், இரண்டாம்முறை உலகுதித்தனரோ? வானத்துலவும் நக்ஷத்திரமோ? எனப் பலவாறு சந்தேகிக்கக் கூடிய அழகு முகமும், சகல லக்ஷணங்களும் குறைவின்றிப் பொருந்திய ஒரு ஆண் குழந்தையை இராஜாத்தியீன்றனள்.

அக்குழந்தையின் பிரகாசத்தால் அவ்வறை ஏக வெளிச்சமுற்றிருந்தது. சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள், வெட்கத்தால் மறைவதும் தோற்றுவதுமாயிருந்தன. இத்துணை அழகான குழந்தையைப் பெற்றெடுத்த இராஜாத்தி சித்த மகிழ்ந்து மெத்தப் பூரிப்படைந்தாள். என்றாலும்,இணையிடற் கரிதான இந்த இரத்தினத்தை இவ்வரண்மனையில் எவ்வாறு வைத்து வளர்க்கக் கூடும். இப்பிரகாசமான சூரியனைச் சத்ராதிகளின் கண்களிற் கெதிர்ப்படாமல் எந்த விடத்தில் மறைத்து வைத்தற்கியலுமென்று ஒன்றுந் தோன்றாமல் பலவாறு யோசித்துக் கடைசியில் ஒரு யோசனையைக் கண்டு பிடித்து மருத்துவச்சியைப் பார்த்து, தாயே, இக்குழந்தை, உன்னுடைய கிருபையினாலே யாதோர் குறைவின்றி என் கருப்பத்திலிருந்து இதுவரையில் காப்பாற்றப் பட்டு வந்திருக்கிறது. இக்குழந்தை பிறந்திருக்கிற செய்தியைக் கொடு நீலியாகிய பட்டத்தரசி கேள்விப்படுவாளேயானால், வயிற்றெரிச்சலென்னுந் தீயில் வாட்டப்பட்டவளாகித் தடையின்றி இக்குழந்தைக்கு இடையூறு விளைப்பாள். ஆகையால் நாம் இப்போது ஒரு சூழ்ச்சி செய்யவேண்டும். அதாவது, சத்ராதிகளின் தீங்கில் நாமும் நம் குழந்தையும் சிக்கிக் கொள்ளாதிருப்பதற்காக இக்குழந்தையைப் பிரத்தியேகமான தலத்தில் வைத்து வளர்ப்பதே நலமாகக் காணப்படுகிறதென்றாள். மருத்துவச்சி, நாயகியே, தங்கள் கட்டளைப்படி நடக்க இதோ, சித்தமாயிருக்கிறேனென்றாள்.

இராஜாத்தி, மருத்துவச்சியைப்பார்த்து, அம்மா தாயே, இப்பிள்ளையை இங்கிருந்து நீ, யெடுத்துக்கொண்டு போய், எந்த

லூரிலாகிலும் வைத்து வளர்த்து, சமையங் கிடைத்த காலத்தில் நம் சக்கிர வர்த்தியிடத்தில் ஒப்பிப்பையேயானல், அவர், தன் தோட்டமென்னுங் கனியாகிய இக்குழந்தையை நோட்டமிட்டறிந்து ஒப்புக்கொண்டு, உனக்கு அனேக வெகுமதியளித்து உன்னை மேற்பதவியிலாக்குவிப்பார். மேலும் இதோ நான் தருகிற கைக்குட்டையையும், மோதிரத்தையும், பத்திரமாக வைத்திருந்து அவரிடத்திற் கொடு. இவ்வடையாளத்தால் யாதோர் ஆக்ஷேபனையின்றித், தன் பிள்ளை யென்றறிந்துக் கொள்வார். இந்தக் குளிகையையும் கைவிடாது வைத்துக்கொள். குழந்தை, பாலுக்கழுந்தோறும், குளிகையை அதன் வாயிலிடு. அதற்குப் பாலின் தேட்டமும் பசியுமிராதென்று கூறி, கைக்குட்டை, மோதிரம், குளிகை, இம்மூன்றையும் அவளிடத்திற் கொடுத்து, கடவுளின் காவலில் குழந்தையைக் கொண்டு செல்வாயாகவென்று கூறி வழிச் செலவிற் கான சகல வஸ்துக்களுடன் விடை கொடுத்தனுப்பினள்.

மருத்துவச்சி, அக்குழந்தையை, தன் முக்காட்டுள் மறைத்துக்கொண்டு அர்த்த ராத்திரியில் அந்தப்புரம் விட்டு நீங்கி வெளிப்பட்டு, அப்போது பிரயாணமாக விருந்த வர்த்தகக் கூட்டத்தாருடன் சேர்ந்து, விடுதிகள் தோறுந்தங்கித் தங்கிப் போய்க் கொண்டிருந்தாள்.



## 2-ம் அதிகாரம்.

### கூஜானும், ஹார்முஜனும்.

மருத்துவச்சி, வர்த்தகக்கூட்டத்தாருடன் சேர்ந்து 'கூஜான்' பட்டணத்திற்குச் சமீபத்திலானபோது, காலவிரோதத்தின் கூறு திடீரென்று, கொள்ளைக்காரர்கள் வந்து வளைந்து சகலரையுங் கொன்று, பொருட்களைச் சூறையாடிப் போனார்கள். திக்கற்ற மருத்துவமாவது, குழந்தையுடன் ஒரு தலத்தில் மறைந்திருந்து அக்கொலை பாதகர்களடங்கலும் போனபிறகு, அங்கிருந்து தனித்

தவளாகப் புறப்பட்டு, தன்னையும் குழந்தையையும் கடவுளிடத்தில் பரஞ்சாட்டியவளாக நடந்து, பசியாலுந் தாகத்தாலும் வருந்திக் களைத்து ஒரு வாரத்தின் பின்னால், 'கூஜான்' பட்டணம் வந்து சேர்ந்து விடுதிவிடத் தலந்தேட முயன்றாள். ஆனால் பசியின் கடிசாலும், தாகத்தின் மிகைப்பாலும், நடையின் அயர்ச்சியாலும், வெய்யலின் காங்கையாலும், களைத்து அவ்வூர் அரசரின் சிங்காரவனப் பாதுகாவலனாகிய ஒருவனின் வீட்டு வாசலுக்குச்சமீபத்தில் வருகிறபோது, வுணர்வற்றுத் தரையிற் சாய்ந்து விட்டாள்.

அவ்வீட்டுக்குடையவன் வெளியில் வந்தான். ஒரு விருத்தை அழகான ஒரு குழந்தையை யிடுக்கியவளாகப் பூமியிற் கிடப்பதைக்கண்டு பரிதபித்து, கிட்ட நெருங்கிப்பாரத்தான். அவள் மரணத்தறுவாயிலிருந்தாள். அவன் பிள்ளையில்லாதவனானதால் அக்குழந்தையையும் அவளையுந் தூக்கிக்கொண்டு வீட்டுக்குள்ளே புகுந்து, அவளை ஒரு கட்டிலிற் கிடப்பாட்டி அவள் முகத்தில் பன்னீரைத் தெளித்து, உசாருண்டாக்கி, அக்குழந்தையின் வரலாற்றை அவளிடத்தில் விசாரித்தான். அவள், தபோதனரின் ஆசீர்வாதத்தால் அக்குழந்தை கருப்பத்திலானது முதல் அவள் மயக்கமுற்றுப் பூமியில் வீழ்கிறவரையில் விவரித்துக் கூறி, இராஜாத்தி கொடுத்த மோதிரத்தையும், கைக்குட்டையையும் அவனிடத்திற்கொடுத்து, இந்த இரண்டும் அலக்ஜாண்டர் சக்கரவர்த்திக்குடையன. நீர் இக்குழந்தையை வெகு பத்திரமாக வைத்து வளர்த்து நடை பழகியபோது அரசரிடத்துச்சென்று, குழந்தையையும் இந்த அடையாளத்தையும் அவரிடத்திற் கொடுத்து, நான் கூறிய யாவற்றையும் அவருக்குச் சொல்வீரானால், அவர் மிகவும் மகிழ்ந்து உம்மால் சுமக்கற்கேலாத அனேக வெகுமதிகளைக் கொடுப்பாரென்றாள்.

அவன், அவளுடைய சொற்களைக் கேட்டு மகிழ்ந்து ஆனந்தக் கடலுள் ஆழ்ந்திருந்தான். அக்குழந்தை, அவனுடைய வீட்டுக்கு ஒரு பெரிய பிரகாசமான தீபம் போன்றிருந்தது.

பின்பு, அவன் அக்குழந்தையை தன் பெண்சாதியிடத்திற் கொடுத்து, ஏடீ, நீ இக்குழந்தையை நம்முடைய சொந்தப் பிள்ளைக்கு மேலாகப் பாவித்து,எவ்விதமான துன்பமும் அணுகாதபடிக்கும், வருத்தமுறாது அழாதபடிக்கும், அருமையாக வைத்து வளர்த்து வருவையேயானால், பலவித நகைவகை உடையாகியவைகளால் உன்னைச் சந்தோஷப்படுத்துவேன். இல்லாது போனால், கடவுள் பேரிற் சத்தியமாக, உன்னை நிருவாணியாக்கி, அடித்துத் துரத்தி விடுவேனென்று கூறிவிட்டு, மருத்துவச்சியிடத்தில் வந்துட்கார்ந்து அவளுக்கு அனேக பரிகாரங்களைச் செய்தான். மரணத்தைத் தடுக்க மருந்துண்டுமா? இரண்டாவதுநாள் அவள் பரலோகமடைந்தாள். அத்தோட்டப் பாது காவலன், இப்பிள்ளையை அரசரிடத்தில் ஒப்பித்தால் அனேக பொன் பொருளை எனக்கு அவர் கொடுப்பார். அப்பொருட்களை நான் என்ன செய்யப்போகிறேன். முடிவில் மரணம் என்னை வருத்தாது விடாது, நானே, பிள்ளையில்லாதவனாயிருக்கிறேன்.

ஆகையால், நேற்றிரவு என்பத்தினி, புத்திரனைப் பெற்றாளென்று பிரஸ்தாபப்படுத்தி இந்த இரத்தினத்தை என் வீட்டுக்குப் பிரகாசமான விளக்காக்கிக்கொள்வதே உத்தமமெனக்கண்டு கடைசியில் அக்குழந்தையைத் தன் பிள்ளையென்றே பஹிரங்கப்படுத்தி அலக்ஜாண்டர் அரசர், கனவில் கட்டளை பெற்றபடிக்கு விரோதமில்லாமல் "ஹார்முஜ்" என்று பெயரிட்டு வெகு அருமையாக வளர்த்து வந்தான். அக்குழந்தைக்கு வயது நான்கானபோது அனேக திரவியச் செலவிட்டு வெகு விமரிசையாகப் பள்ளிக்கூடத்துக் கனுப்பினான். "ஹார்முஜ்" கொஞ்ச நாளையில் அப்பள்ளிக்கூடத்தில் படிக்க வேண்டியவைகளைப் படித்துத் தீர்த்து, குலத்தளவே யாகுமாங்குணமென்பதற்கிணங்க, அதிலும் மேலான கல்விச்சாலையைத் தேட முயன்று, கடைசியில், கூஜான் இளவரசர் கல்வி பயிலுஞ்சாலைக்குப்போய் தானுங் கல்வி கற்க வேண்டுமென்று தீர்மானித்து, அதற்கான பலமுயற்சி யெடுத்து, அப்பள்ளிக்கூடம் போய்ச் சேர்ந்தார்.

அரசகுமாரர்கள், மந்திரி, பிரதானி, தலைவர்களின் புத்திரர்கள் கல்வி கற்குந் தலமானதாலும், மஹா தேர்ச்சியுடைய குரு வகப்பட்டதாலும் "ஹார்முஜ்" மகிழ்ந்து, அக்கல்லூரியிலிருந்து கற்பதே அவருக்கு மிகப் பிரியமாயிருந்தது. முடிவில் இளவரசரும், ஹார்முஜும், அன்னியோன்னியமான நேசர்களானார்கள். கொஞ்சக்காலத்திற்குள்ளே விவேகத்தின் கூர்மையால் சகல கல்விகளிலும் அவர் தேர்ச்சியடைந்தார். அரச குமாரர்களுக்கு அவசியம் வேண்டிய வில்வித்தை, வாள்வீச்சு, குதிரையேற்றம் முதலிய படைப்பயிர்ச்சியில் பிரியமுற்றுக் கற்று அவற்றிலும் தேர்ச்சி பெற்றார். அவரும், இளவரசரும், உயிரொன்று, வுடலிரண்டு போன்று பிரியாநேசம் பாராட்டி வருகின்றார்களென்பது "கூஜான்" பட்டண முழுதிலும் பரவிற்று.

அதனால், மந்திரி பிரதானிகளின் புத்திரர்கள் எரிச்சல்கொண்டு, தத்தம் பெற்றாரிடத்துச் சென்று, நம்முடைய இளவரசர், நூதனமான ஒரு செய்கையை யெடுத்திருக்கிறார். அதாவது, ஒரு கேவலமான காவற்காரனுடைய மகனாகிய "ஹார்முஜ்" என்பவனுடன் நெருங்கிய நேசம் பாராட்டி வருகிறார். எங்களுடன் பேசுகிறதுமில்லை. எங்களை யேறெடுத்துப் பார்க்கிறதுமில்லை. எங்களுடைய பதவியைக் குறைத்துப் போட்டார். எங்களுக் குண்டு பட்டிருக்கும் அவமானமும் அவனுக்குக் கிடைத்திருக்கு மேன்மையும் சஹிக்கக் கூடியவையல்ல. மேற்குல மக்களின் செய்கை, கீழ்மக்களின் சொற்கிணங்கி நடப்பதால் பிரகாச முறாதென்பதை அவர் அறியவுமில்லை. இப்போது அவர் இளவரசராயிருக்கிறார். பிற்காலத்தில் அவர் அரசரானால் அவனையே மந்திரியாக்கிக்கொள்ளுவார். அக்காலத்தில் நமக்குண்டாகப்போகிற அவமானத்தை இப்போதே நாம் கவனிக்கவேண்டியது முக்கியமாகத் தெரிகிறதென்று முறையிட்டார்கள்.

இதைக்கேட்ட மந்திரி பிரதானிகள் நீள யோசித்து, அவர்களனைவரும் ஒன்று சேர்ந்து அரசரிடத்துச் சென்று முழங்காலிற் படிந்து வணங்கி அரசரைப் பார்த்து, நாயகமே, நாங்களடங்'

களும் தங்களிடத்தில் நன்றியறிதலுடையவர்களா யிருக்கிறோம். தங்களுடைய கருமத்தில நலவைத் தவிர இடறை நாடுகிறவர்க ளெல்லோம். ஒரு கெடுதியைக் கண்டு அதைத் தங்களிடத்தில் முறையிடாது மறைத்தோமானல் நன்றி கெட்ட துரோகிகளாகி றோமல்லவாவென்றார்கள். அரசர், அதென்ன கெடுதி சொல்லுங் களென்றார். அதற்கவர்கள், எங்கள் நாயகமே, தங்களின் புத்திர சிகாமணியாகிய எங்களுடைய இளவரசர், ஒரு கேவலமான தோட்டக்காவற்காரனின் புத்திரனுடன் இணைபிரியா நேசம்பா ராட்டி, சகல காரியங்களையும் அவன் வசம் ஒப்பித்து, இரவு பக லாக அவனுடைய நேசத்தில் ஆழ்ந்து கிடக்கிறார். மற்றவர்களை ஒரு பொருட்டாக மதிக்கிறதில்லை. அவர்களுடன் பேசுகிறது மில்லை. இக்கெட்ட செய்கை அநேக கெடுதல்களுக் காஸ்பதமா யிருக்கிறது. நாங்கள் இதை வெளிப்படுத்தாது மறைக்கப் புகுந் தால் இராஜ துரோகிகளாகிறோம். இதற்கு மேலே தங்களுடைய மனோபீஷ்டமென்று கூறினார்கள்.

இதைக் கேட்ட அரசர், நெருப்பு மயமான கோபாவேசங் கொண்டு, காவற்காரனை வரவழைத்து, உன்னுடைய மகன் ஹூர் முஜை, என் புத்திரரிடத்தில் வர விடாது தடுத்து வைத்துக் கொள். மாறியும் அவன் வந்து போய்க்கொண்டிருப்பதாக நான் கேள்விப்பட்டால், உடனே அவனை வெட்டி யெறிவதுடன் உன் னையும் ஊருக்குப் புறம்பாக்கிப்போடுவேன். ஜாக்கிரதையாயிரு ந்துக் கொள்ளென்று வற்புறுத்தினர். பின்பு இளவரசரை வரவழைத்து, மகனே, நீ, அந்த ஹூர்முஜுடன் அறவே முகங் கொடுத்துப் பேசக் கூடாது. அவன் உன்னிடத்தில் வரவுங் கூடாது. வச்சிரத்துக்கு முன்னல் காய்ச்சுக்கல் இணையாகுமா? உன்னுடைய மேன்மையையும், அவனுடைய தாழ்மையையுஞ் சீர்தூக்கிப்பாரென்று நயந்தும் பயந்துங் கூறினர். தோட்டக் காவற்காரன் தன் வீட்டுக்குப்போய் ஹூர்முஜுக்கு அரசரின் அச்சத்தைக்காட்டி, இளவரசரின் நேசத்தை விட்டொழிக்க வே ண்டுமென்று தாக்கீது செய்தான், இதைக்கேட்ட "ஹூர்முஜ்"

அதிகக் கலக்கமுற்று. ஆ, கடவுளே, இளவரசரைப்போன்ற நேசர், எனக்கு எங்கிருந்து கிடைக்கப்போகிறார். அவருடைய நேசத்தால் நான் எவ்வளவு பாசம் பெற்றேன். அவருடைய கிருபை என் முகத்தைப்பிரகாசமாக்கிற்று. என்று பலவாறு புலம்பி அரண்மனையின் சமீபத்திலிருக்கிற அத்தோட்டத்தின் ஒரு மூலையிற் சென்றுட்கார்ந்து, கோபத்தாலுங் கவலையாலும் தனித்திருப்பதையே மேலாக மதித்து, புத்தகங்களை நோட்டமிடுவதிலேயே பராக்காயிருந்தார்.



## 3-ம் அதிகாரம்.

## "குல்" இளவரசியின் பிரதி பிம்பமும், "ஈரான்" அரசரின் காதல் துன்பமும்,

கூஜான் தேசத்தரசருக்கு "குல்" என்னும் நாமத்தையும், 14, வயதையும் பரிபூரணமாகப் பெற்ற, செந்தாமரைப் புட்பத்திற்குச் சமதியான நிறமும் மிருதுவும் பொருந்திய சரீரத்தையும் பதினான்காம் பக்கத்துச் சந்திரனுக்கிணையான முகாரவிந்தத்தையும், சூல்கொண்ட கார்மேகம் போன்ற அடர்த்தியான கூந்தலையும், மூன்றும் பிறைக்கிணையான நெற்றியையும், கரும்பவளக் கொப்புபோன்ற புருவத்தையும், மானையும், சேலையும், பழித்த செவ்வரி படர்ந்த கண்ணையும், வள்ளையைப்போல் குழைவுபொருந்திய செவியையும், வாசனை மிகைத்த சண்பகமலருக்குச் சமதியான மூக்கையும், முத்துப்பந்தி நிகர்த்த பற்களையும், செம்பவளப் பிளவுக்கு மேலான அதரத்தையும், ஆடவர் கைக்குளடங்கக் கூடிய பொற்றேமல் படர்ந்த தன பாரத்தையும், சிந்திக்கொடிபோன்ற இடையையும், தேன் கூட்டுக்குச் சமதியான நிதம்பத்தையும், (தேன் கூடென்று நக்கி விடாதீர்கள்) வாழைத்தண்டு போன்ற குறங்கையும், மற்ற இலக்ஷணங்களையும் குறைவின்றிப் பெற்றவளாகிய ஒரு புத்திரியுண்டாயிருந்தாள். அவளுக்கிணையான அழகுடைய பெண்கள் இனிமேல் இவ்வுலகத்திலுற்பவிக்க

மாட்டார்களென்றும், தெய்வ ரம்பையர்களுக்கும் பரிப்பெண்க ளுக்கும் மேலான சௌந்தரவதி யென்றும், கண்ணின் குளிர்ச்சி கருத்தின் மகிழ்ச்சியென்றும், காதலர்களின் கபாடமென்றும் அக்கினிக் கொழுந்தென்றுஞ் சொல்லக் கூடியவளாயிருந்தாள்.

அவளுடைய அழகின் பிரஸ்தாபம், கடலினுங்கரையினும் பரந்திருந்தது. அனேக அரசர்கள், அவளின் உருவப்படத்தை வரவழைத்துப் பாரத்துத் தட்டழிந்து, ஒன்றுஞ் செய்தற்கியலா மல் அப்படத்தை நெஞ்சிலணைத்துக்கொண்டு பசுமையுற்றிருப் பார்கள். அவளுடையவுருவப்படத்தைக் கண்டபோதே இவ்வா றுபின் சுயரூபத்தைக் கண்டால் எவ்வாறுவார்களோ கடவுள் தான் அறிவார். ஈரான் தேசத்தரசர், அவளுடைய பிரதிவிம்பத் தைக்கண்ணுற்றபோது தன்னை மறந்து சிம்மாசனத்திலிருந்துகுப் புற வீழ்ந்து, அவரும் ஒரு பிரதி பிம்பம் போன்றிருந்தார். ஒரு முறைபார்த்ததும் உணர்வற்று வீழ்ந்து பெருமூச்செறிந்து எழுந் தெழுந்து சப்தமிட்டழத்தொடுத்ததைக் கண்ட மந்திரி பிரதானி முதலானவர்கள், ஆ, கடவுளே! இதென்ன சம்பவம்? எந்தப் பரியின் மாய்கையிற்பட்டார். யாரோ, இவரைக் காம நோயின் கண்ணியிலாக்கிவிட்டார்கள், இல்லாது போனால் இவ்வாறாக வேண்டியதில்லையே, யெனப் பலவாறு புலம்பி, அவர் முகத்தில் திவ்யமான விலையுயர்ந்த பன்னீரைத் தெளித்துச் சுவரணையுண் டாக்கினார்கள்.

அவர் உணர்ச்சி பெற்றெழுந்து, ஆ, வென்றலறினார். பணி விடையாளர்கள் அச்சமுற்றுக் கலங்கி. நாயகமே, தாங்கள் சப்த மிட்டழவும், பெருமூச்செறியவும், உணர்வற்று வீழவும், வேண் டியகாரணமென்ன? வென்று கேட்டார்கள். அதற்கரசர், பிர ஜைகளே, இதோ என் கையிலிருக்கிற பிரதி விம்பமே என்னை மயக்கி இவ்விதத் துன்பத்தில் சிறையாக்கிவிட்டது. இப்பஞ்ச வர்ணக்கிளியின் அழகென்னும் அம்பு பாய்ந்த என் மணப்புண் அவளுடைய முகதெரிசனையாலன்றி மாறமாட்டாது. அப்புண் ணின் சேர்வை அவளுடைய தெரிசனையேயல்லாது வேறே யாது

மிக்லையென்று கூறினர். அதற்கவர்கள், எங்களுடைய நாயகமே, ஏன் தாங்கள் இவ்வாறு பதறுகின்றீர்கள்? மயங்கிக் கலங்குகிறீர்கள்? குல் இளவரசியின் தெரிசனை முக்கியமானால் அதைத் தடுக்கிற வஸ்தெது? அவர்கள் கூஜான் அரசரின் புத்திரியாயிருப்பதால், தாங்கள் அவருக்கொரு நிரூபம் விடுத்தால் அதை அவர் அவாவுடன் அங்கிகரித்து, ஆசீர்வாதமாகக்கருதி, அவளைத் தங்கள் வசம் ஒப்பிப்பதில் ஒருக்காலும் பிணங்கமாட்டாரென்றார்கள். அரசருக்கு அவர்களின் யோசனை உசிதமானதாகக் காணப்பட்டமையால் மகிழ்ச்சியுற்று, உடனே மஹா தேர்ச்சியுடைய பிரதான லிகிதரை வரவழைத்துக் கடிதமெழுதக் கட்டளையிட்டார்.

அந்த லிகிதர், அரசரின் கட்டளையைச் சிரமேற்கொண்டு, காதலரின் நெஞ்சம் போலப் பிளவுபட்ட இறகையும், அர்த்தராத்திரியின் இருள்போன்ற மையையும், காதலியின் முக நிறம் போன்ற சிவந்த காகிதத்தையும் கையிலெடுத்துக் கடிதமெழுதி முடித்தார்.

நிரூபம் வருமாறு.

சகலவற்றிற்கும் முதன்மையானவரும், யாவற்றையுஞ் சிருட்டித்தவரும், ஆணுக்குப்பெண்ணை யிணக்கமாக்குவித்தவருமாகிய, ஏகபராபரக் கடவுளைத் துதித்து வாழ்த்தி, அவரின் உண்மைத்தீர்க்கதரிசிகளைப் புகழ்ந்து, அவர்களின் ஆசீர்வாதத்தில் அவாக்கொண்டிருக்கும் "ஈரான் தேசத்தரசனாகிய நான், மார்க்க முறை பிறழாது நடக்கும் பிரஸ்தாபத்தையுடைய "கூஜான்" தேசத்தரசருக் கெழுதிக்கொள்ளுவ தென்னவென்றால், உண்மையான சர்வசிருஷ்டி கர்த்தர், வானம் பூமி, சுவர்க்கம் நரகம் இன்பம் துன்பம், உயிர்மரணம், இரவு பகல், சூரியன் சந்திரன் கடல்கரை, ஆண்பெண், என ஒவ்வொன்றையும் துணையுடையதாகவே படைத்திருக்கிறார். அதின் பேரிலேயே அவற்றின் விருத்தியை அமைத்திருக்கிறார். உலகத்தின் வழக்கமும் அவ்

வாறாகவே யிருக்கிறது. உங்களுடைய ஆண்மக்களை, பெண்மக்களுடன் கலியாணமுடித்து வைப்பதில், பிணக்குப்படவும், காலதாமதப்படுத்தவும் வேண்டாமென்[illegible] தீர்க்கதரிசியின் உபதேசமிருக்கிறது. இச்செயல் மானிடப் பிறவிக்கு முக்கியம் வேண்டியதாகவுமிருக்கிற[illegible] பட்டத்தின் வாசனை, உணர்வற்ற என்னுடைய மூளையில் குடிகொண்டிருக்கிறது. சந்திப்பின் கறை யென் தலையிற் படிந்திருக்கிறது. ஆகையால், நீர் யாதொன்றையும் இடையிடாக்காமல் பூரணச்சம்மதத்துடனும், சந்தோஷத்துடனும், பரிசுத்தமலரென்னும், குல் இளவரசியை என் தெரிசனைக்கனுப்புவீரென்று நம்பியிருக்கிறேன். இதனால் நமக்கும் உமக்கும் ஒற்றுமை மேலிடும். காலத்தை ஆரோக்கியத்துடன் கழிக்கலாம். நம்மிருவரின் நேசமும் ஒன்றுபட்டு நின்றிலங்கும். நம்மிருவருக்கும் எவ்விதமான அபாயமும் உண்டாகமாட்டாது.

இங்ஙனம், ஈரான் அரசர்.

கடிதமெழுதி முடிந்தவுடனே, அரசர் கையொப்பமிட்டு முத்திரை வைத்து, சுறுசுறுப்புடைய ஒருவன் கையில் அக்கடிதத்தைக் கொடுத்துப் பயணப்படுத்தியனுப்பினர். அத்தூதுவன், காடுமலை, வனம் வனாந்தரம் முதலானவைகளைக் கடந்து கூஜான் பட்டணத்தடைந்து அரசருக்குச் செய்தியறிவித்தான். அரண்மனைப் பாதுகாவலர்கள், ஈரானிலிருந்து தூதன் வந்திருக்கிறானென்று அரசருக்குக் கூறவே, அரசர் மிகுந்த சந்தோஷத்துடன் அவனைத் தன் சமுகத்தில் வரவழைத்துச் சுபசோபனங் கூறி இவ்வளவு கஷ்டமும் வருத்தமுமெடுத்து இங்குவந்த காரணமென்னவென்று கேட்டார். அத்தூதன் ஈரான் அரசரின் கடிதத்தைக் கொடுத்தான். கூஜான் அரசர் அத்தூதனுக்குப் பொன்னூலிடையிட்டு நெய்த விலையுயர்ந்த வுடையொன்றும், அனேக வெகுமதிப் பண்டங்களுங் கொடுத்து அக்கடிதத்தை வாங்கிக் கண்ணிலொத்தி முகர்ந்து, பிரித்து வாசித்தோர்ந்து மிகுந்த மகிழ்ச்சியடைந்து, பெரிய நன்கொடையாகமதித்து, மந்திரி

பிரதானி முதலான சகல பேருக்கும் அக்கடிதத்தைப் பஹிரங்கத்தில் படித்துக்காட்டினார். அவர்களும் சந்தோஷமாகி, அரசரின் ஆக்ஷிகாலம் நீடூழி நிலைத்திருக்கக் கடவதென்று வாழ்த்தினார்கள்.

பின்பு, அரசர் அந்தப்புரத்துக்குச் சென்று இராஜ பத்தினி முதலானவர்களுக்கும் அக்கடிதத்தை வாசித்துக் காட்டினார். அவர்களனைவரும், அளவிலா மகிழ்ச்சிகொண்டார்கள். இராஜாத்தி, ஆனந்த சாகரத்திலாழ்ந்தவளாகி, ஈரான் அரசரின் இல்லத்துணைவியாகப் பெற்ற நம் புத்திரியின் பாக்கியத்தை நான் என்னவென்று சொல்வேன். கண்ணேறுபடாதிருக்கக் கடவர். இவ்வளவு பாரிய அரசரின் பத்தினியாவதற்கு நம் புத்திரியும் நாமும், எவ்வளவோ தவமிருக்கவேண்டும். இனி நமக்கு யாதோர் குறைவுமில்லை. இவ்விஷயத்தால் நமக்கும் ஈரானரசருக்குமிடையில் ஒற்றுமையுநேசமும் விருத்திபெறத் தடையிராதென்று கூறிக் கடவுளை வாழ்த்தினாள்.

கடைசியில் அரசர் உள்ளும் புறமும் ஒரேவிதப் பொருத்தமுடையவராக இறகைக் கையிலெடுத்து ஒரு கடிதத்தில் உலகனைத்தும் புகழும்படியான நெறி நீதியுடைய மஹத்துவம் பொருந்திய அரசர் நாயகமே, தங்களுடைய திருவாசகங் கிடைத்து வாசித்தோர்ந்து பாக்கியம் பெற்றேன். சூரியனுக்கு முன்னால் மின்மினிப்பூச்சி யிணையாகுமா? தாங்களெழுதிய புகழ் தங்களுக்கே உரித்தாகும். என்னுடைய கண்ணின் பிரகாசமாகிய, குல் இளவரசியின் தெரிசனையைத் தேடுகிறீர்கள். அது அவளுக்குப்பாரிய ஆசீர்வாதமாகும். எங்களுக்குப் பெரிய சிறப்பாயுமிருக்கிறது. தாங்கள் தடையின்றி வந்து கல்யாண முடித்துக்கொண்டு போகலாம். என்றாலும், இராஜாக்களுடைய காரியம் சீக்கிரத்தில் ஆகாதென்பதைத் தாங்களறிந்திருக்கிறீர்கள். ஆதலால் ஒருவருஷம் தவணை கிடைப்பதை யெதிர் நோக்கியிருக்கிறேன். அக்கெடுவுக்குள் கல்யாணத்திற்கான சகல சாமான்க

ளும் தயார்ப்படுத்தி நல்ல வேளை பார்த்துப் பூரண சம்மதத்துட னும் சந்தோஷத்துடனும் மண முடித்து வைக்கிறேனென்றெ ழுதி, தூதனிடமதைக் கொடுத்தனுப்பினர். ஈரான் அரசர் அக்கடி தத்தை வாங்கி வாசித்தோர்ந்து சந்தோஷத்தால் மகிழ்ந்து அக் கடிதத்தின் சம்மதவார்த்தைக்குத் தன் சரீரத்தைப் பலியிட்டவரா யிருந்தார். ஆனால் ஒரு வருஷக்கெடுவிருக்கிறதை நினைத்துக் கை சேதமுங் கவலையுமடைந்து உதட்டைச் சுவைத்துக் கொண்டு பலவாறு ஆலோசித்தவராயிருந்தார்.



## 4-ம் அதிகாரம்.

### ஹார்முஜும், குல் இளவரசியும்,

இளமையில் பேராலும் அழகிற் சிறந்த "குல்" இளவரசி ஒருநாள் தன் தாதிப்பெண்களுடன் வெகு அலங்காரமாக, அன் னப்பெடைபோலசைந்து நடந்து சிங்காரவனத்துக்குக் காற்றுர ச்சென்றாள். அங்குள்ள செந்தாமரை மலர்களெல்லாம், இள வரசியின் முகநிறத்துக்கிணையல்லவேயென ஆடாது அசையாது நின்றன. மொக்குகளடங்கலும் இளவரசியின் முகத்துக்கெதி ரே நம் கூம்பிய முகங்களைக் காட்டப்படாதென்று இலைகளுள் மறைந்துகொண்டன. அவள் பூசியிருக்கும் பரிமளத்தின் வா சனை அங்குள்ள சகல புட்பங்களிலுந் தாவி மலிந்தது. பூக்கொய் பவர்களும் சிங்காரவனக் காப்பாளர்களும், இந்த இளவரசி யின் முக நிறத்துக்குச் சரியான புட்பங்களை நம்முடைய தோட் டத்திலில்லாதிருக்க, நாம் எந்தப் பூவைக் கொய்து கொடுக் கிறதென்று ஏக்கமுற்றுப் பலவாறு பேசிக்கொண்டிருந்தார்கள். திரண்டு பருத்து நிமிர்ந்தோங்கி வட்டமிட்டு மேலார்ந்து வாலிப ரின் கையை வழிபார்த்து நிற்கும் பசுந்தேமற் படர்ந்த தனபார ங்களுக்கெதிரே நாம் முன்னிற்கிறதா? வென வெட்கிச் செவ்வி ளங் குரும்பைகள் எல்லாந் தலை கவிழ்ந்தன. சொக்கட்டான் காய்கள் உட்கூட்டிலாயின. அவளின் கூர்மையான சிறந்த விர

ற்களைக்கண்டு, அத்தோட்டத் தடாகங்களில் இரைதேடி வெளியில் தலைகாட்டிய விரல் மீன்களெல்லாஞ் சேற்றுள் மறைந்து கொண்டன. அங்கு நடித்துக் கொண்டிருந்த மஞ்ஞைகளெல்லாம், இவளின் நளின நடைக்கெதிரே நம்முடைய நடனம் இணையாகாதென வெட்கித் தலை கவிழ்ந்தன. சங்கீதம் பாடிக்கொண்டிருந்த பக்ஷியினங்களடங்கலும், இவளுடைய குரலுக்கு நம்முடைய குரல்கள் வெகுதூரம் வித்தியாசமெனக்கண்டு மவுனமுற்றன. இவ்வளவு சிங்காரத்தையுடைய, இளவரசி, காற்றூரச்சென்றிருக்கும் அச்சிங்காரவனத்திலேயே "ஹூர்முஜூம்" இருந்து வருகிறார். திடுகூறாக அச்சமையம், அவர் அங்குள்ள ஒரு தடாகத்தில் குளித்துக் கரையேறி, இடையிற் கட்டிய கச்சையுடன் மயிருலர்த்திக்கொண்டு நின்றார். விரகதாபம் யாரைத் தான்விட்டது. இளவரசியின் பார்வை, ஹூர்முஜ்பேரிற் பாயவே, அவளுக்கு முகத்திற் பேதலிப்புண்டாயிற்று. சரீரத்தில் விலவிலப்புத் தோன்றிற்று. கண்கள் சேந்தது. காலிடை கசிந்தது. ஈரல் தெறிப்ப போன்றிருந்தது. விரகதாபமென்னுநட்பு இளவரசியின் நெஞ்சில் வேரூன்றிற்று. வாயில் புலப்பமேலிட்டு விட்டது. சரீர பலங்குறைந்து தளர்ந்தது. புட்பத்துக்குச் சமதியான மெல்லிய சரீரம் வியர்வையால் நனைந்து கசங்கிற்று. தனபாரம் விம்மிக் கச்சைக் கிழித்தெறிந்து, காதலரை யேறிட்டுப்பார்த்தது. உடலில் உயிரிருக்கிறதென்னும் உணர்வே அவளுக்கில்லாது போயிற்று. கடைசியில் உசாரிழந்தவளாகக் கீழே சாய்ந்தாள். அவளுடன் சென்றிருந்த தாதிப்பெண்கள் தட்டுக்கெட்டுத் தடுமாறினார்கள்.

அவர்களுள் ஒருவள் இளவரசியைத் தூக்கித் தன் மடிமேல் வைத்தாள். சிலர், மந்த்ரோச்சாடனஞ் செய்தார்கள். சிலர், கைக்குட்டையில் மந்திரம் ஓதி யூதி கைப்பட்டையில் கட்டினார்கள். சிலர், ஆ, கடவுளே, இதென்ன சம்பவமென்று புலம்பினார்கள். சிலர், இது பைசாசத்தின் பார்வைபட்டதாமென்றார்கள் சிலர் மந்திரங்களை ஜபித்து முகத்திலூதினார்கள். சிலர், புகை.

போட்டார்கள். எல்லாரும் அழுதார்கள். ஏங்கியேங்கி மாரடித்துக் கொண்டார்கள். சிலர், பிடரியிற் காலடிபடவோடிச் சென்று, இராஜாத்திக்குச் செய்தி யறிவித்தார்கள். அவள், கையை முறித்தவளாகவும், காலை உதைத்தவளாகவும், இளவரசியிருக்குமிடத்துக்கு ஓடிவந்து, மகளைப்பார்த்து, ஆ என் கண்மணியே, என் அருமைமகளே, வாய்திறந்து பேசாயா? கண் திறந்து பாராயா? எனவும், சனங்களே, இதற்கு நானென்ன செய்வேன்? இத்துன்ப நீங்கும் வழியை யெங்கிருந்து பெறுவேன்? இவள் இத்துன்பத்தில் சிக்குண்டிருப்பதைப் பார்த்து எவ்வாறு சஹித்திருப்பேன்? என்ன காரணத்தினுல் இவள் இவ்வாறுயினள்? எவ்வாறறிவேன்? எனவும் பலவாறு புலம்பிப் பரிதபித்தாள்.

இவ்வளவுக்கும், இளவரசி, கண்திறக்கவுமில்லை. வாய் பேசவுமில்லை. தாதிப்பெண்கள், இளவரசியின் முகத்தில் பன்னீரைத் தெளித்து, மயில் விசிறியால் வீசினர்கள். இளவரசி, கண்ணைத் திறந்தும் வாய் பேசாது, சுவரிலெழுதிய சித்திரம்போன் றிருந்தாள். அவளின் தந்தையாகிய சூஜான் அரசரும், தட்டழிந்தவராக நின்றுர். கை தேர்ந்த பண்டிதர்களெல்லாம் வந்து பார்த்துக் கைசோர்ந்து மீண்டார்கள். மந்திரங்களும் மருந்துக்களும் யாதொரு பலனையுங் கொடுக்கவில்லை. எவ்வளவுக்குப் பரிகாரஞ் செய்கின்றுர்களோ அவ்வளவுக்குப் புலப்பம் அதிகப்பட்டுக்கொண்டேயிருந்தது. காரணங் கேட்டால் அலறி யழுவாளேயன்றி மறுமொழி கொடுக்கிறதேயில்லை. அவள்பேரில் அதிக கிருபையையுடைய இராஜாத்தியாகிய அவளுடைய அன்னை, இளவரசியின கெதியைப் பார்த்துச் சலிப்புற்று ஒன்றுந் தோன்றுதவளாயிருந்து, கடைசியில் எப்போதும் இளவரசியுடனிருப்பவளும், அவளை வளர்த்தவளுமாகிய ஒரு தாதிப் பெண்ணைப் பார்த்து, ஏடீ, தாதி, நீ, குல் இடத்திற் சென்று அவளுடைய மனதிற் குடிகொண்டிருக்கும் எண்ணத்தை யின்னதென்றறித்து வருவாயாக. என்னுடைய பார்வையில் யார்பேரிலோ அவள் மோகமுற்றிருக்

கிறதாகத் தெரிகிறது. இந்த விதிகெட்டவளுடைய தலையில் விரக வேதனை யேறிக்கொண்டதென்று, கடவுள்பேரிற் சத்தியமாக நான் நம்புகிறேன். எந்தவிதத்தில் அவளுடைய மனப்பிணியைத் தீர்த்துவைக்கக்கூடுமோ, அதுபோற் செய்து, அவளைச் சீக்கிரத்திற் சுகப்படுத்துவாயாக. அவளுடைய புலப்பமும் அழுகையும், என் ஈரலைக் கரித்துப்போட்டது. அவளை நான் பெற்றெடுக்கப் பட்ட வருத்தத்தை நினைத்தால், என்னால் சஹித்திருக்கக்கூட வில்லை. சீக்கிரம் போவென்று கட்டளையிட்டாள்.

இராஜாத்தியின் கட்டளையைப் பெற்ற தாதியானவள், இளவரசியிடத்தில் வந்து வளைந்து குழைந்து வாழ்த்திக் கட்டியணைத்து முத்தமிட்டு (இதை வாசிக்கும் பாலியர்களே புத்தகத்தை முத்தமிட்டு விடாதீர்கள்.) ஆ! ஆ! என் கண் குளிர்ந்த இளவரசியே, இஃதென்ன சம்பவம்? என்ன காரணம்? உன்னுடைய பதறுதலால் உலகும் பதறுகின்றதே. உன்னுடைய புலப்பத்தால் சிறுவர் முதல் பெரியவர்வரையில் சகலரும் புலப்பமுற நேர்ந்ததே. என்னை நான் உனக்குப் பலியிடுகிறேன். நீ என் இந்த ஸ்திதியிலாய்விட்டாய்? உன் முகத்தின் மஞ்சணிறமும் உன்னுடைய பெருமூச்சும், நீ மோக வலையிற் சிக்குண்டதாக முறையிடுகின்றன. அது வுண்மையானால் கடவுள் பேரிற் சத்தியமாக நீ என்னிடத்தில் வெளிப்படுத்து, உன் சிரசின்பேரில் ஆணையாக, வானுலகத்தினரானாலும் ஒரு நொடியில் வரவழைக்கிறேன். மானிடப் பிறவியானால் கண் மூடித்திறக்க முன் கண்ணாடியில் முகத்தைக்காண்பது போல் உன்னெதிரில் காட்டிவைக்கிறேன். நான் மஹா சமர்த்தியல்லவா? வானத்தின் அஸ்திபாரத்தையும், சந்திரசூரியர்களின் சுற்றோட்டத்தையும் வசப்படுத்தக்கூடிய தந்திரமுடைய கிழத்தியாகிய, என்னிடத்தில் உன்னுடைய மனக்கவலையை மறைக்கவேண்டாம். என் உயிர்க்கிணை யானவளே, சஞ்சலத்தில் சம்பந்தப்பட்டவர்களிடத்தில் சாதிப்பது ஞாயமல்லவே, மகளே, உன் வியாதியின் காரணமென்ன? என்னிடத்தில் வெளிப்படுத்து. நான் அதைப் பிறருக்குக்கூறாமல் மறைத்து

உனக்கு தக்க பரிகாரஞ் செய்து வைக்கிறேன் என்று பலவாறு நயந்து கேட்டாள்.

இளவரசியோ, காது தாழ்த்திக் கேட்கிறதும் கண் தாழ்த்தி அழுகிறதுமாகவிருந்து கடைசியில் தாதியைப் பார்த்து, தாயே, கடவுளுக்காக நீங்கள் என்னை வம்பிக்காதீர்கள். என்னிடத்தில் யாதொன்றையும் கேட்காதீர்கள். எம்மனதுள் குடிகொண்டிருக்கும் எண்ணத்தை வெளிப்படுத்துஞ் சக்தியற்றவளா யிருக்கிறேன். மவுனமுற்றிருப்போமென்றாலும் இச்சமயம் இருக்கக்கூடவில்லை. எவ்வளவு துன்பந் துயரங்கள் நேரிட்டாலும் தாங்கக்கூடிய என்மனம், விரகவேதனையை சஹித்திருக்க மாட்டேனென்கிறதே, என்ன செய்வேனென்றாள். அதற்குத் தாதியானவள், மகளே, நீ சொன்னவையடங்கலும் உண்மையே. மன்மதன், அச்சமும் இரக்கமுமற்றவனாயிருக்கிறான். முன்பின் யோசிக்காமல் யார்பேரிலும் விரகபாணத்தை யெய்து வேலையைக் கெடுத்துவிடுகிறான், ஒவ்வொருவரும் அவனுடைய வலையிற் சிக்குண்டவர்களாகவே காணப்படுகிறார்கள். அதைவிலக்க யாருக்குச் சக்தி யிருக்கிறது? வேட்டைக்காரன் கோடிக்கணக்கான உயிர்ப்பிராணிகளைப்பிடித்துக் கொல்லுகிறான். அவைகளைவலையிற் சிக்கச்சொன்னவர் யாவர்? மோகங்கொண்டவர்களை சனங்கள் முனிவார்கள். அது புண்ணிற் உப்புவைத்ததுபோலிருக்கும். அது மடத்தனம். மூளையற்றவர்களின் செய்கை. மனசார ஒருவரும் உயிரிழக்கப் பொருந்தார்கள். துன்பத்தைத்தலையிற் சுமக்கமாட்டார்கள். விரக விலங்கை, தன்னுணர்வுடன் தன்காலிற்போடவுங் கழட்டவும் ஒருவரும் சக்திபெறமாட்டார்களென்பதை அறியமாட்டார்கள். உன் காரியத்தை யென்னிடத்தில் வெளியாக்கினால் இதோ ஒரு நொடியில் அதை நிறைவேற்றுவிக்கிறேன். நான்படுங் கவலைக்குப்பிரதியாக, நீ கிருபைசெய்யாதிருப்பது ஞாயமல்லவென்று வெகு நயவசனங் கூறிக்கேட்டாள்,

தாதியின் இனிய வார்த்தைகளைக் கேட்ட, இளவரசி, தன்னுடைய நாட்டம் நிறைவேற இது நல்ல சமயந்தானென்று நினைத்து

எழுந்துட்கார்ந்து, தாதியைப்பார்த்து, வெட்கத்தால் சற்றுநே ரந் தலைகுனிந்து மவுனமுற்றிருந்தும். அடக்கமுடியால், அம்மா தாயே, உன்னுடைய வார்த்தைப்பாட்டால், என்கவலை நீங்கி நாட் டம் நிறைவேறுமென்கிற நம்பிக்கையுண்டா யிருக்கிறபடியால் என்னுடைய எண்ணத்தை வெளியாக்குகிறேன். அதாவது, ஒரு நாள் நான் கோட்டையைவிட்டுத் தோட்டத்துக்குக் காற்றூரச் சென்றேன். குளத்தில்குளித்துவிட்டு, மயிராற்றிக்கொண்டுநின்ற, ஹாமர்முஜின், பிரகாசமான திருவாண சரீரத்தில் திடுகூறுக என் கண்பார்வை சென்றதும் என் கண்கள் கூசின. ஆரம்பத்தில் பரி யரசனென் றெண்ணிப்பயந்தேன். பிறகு என் மனதைத் திடப்ப டுத்திக்கொண்டு அவரின் மேன்மையான வுடலை உற்றுநோக்கி னேன். வரவேண்டியிருந்த துன்பம் என்தலையில் வந்தேறிக்கொண் டது. மனம்பறிபோயிற்று. விரகவேதனையென்னும் அம்பு என் ஈரலைத் துளைத்துப்போயிற்று. மன்மதனுல் சிறை வாரப்பட்டவ ளானேன். முடிவில் பயித்தியக்காரியானேன். அவருடைய முகத் தழகை யென்னென்றுதான் சொல்லுவேன். சொல்லப்புகுந்தால் உதடு குழைந்துபோகும். அவரின் அவயவங்களைப் புகழத்தலைப் பட்டால் என்னுடைய சரீரம் நீறு பூத்த நெருப்பைப் போ ன்று நான் சாகும் வரையில் என்னை சஞ்சலப்படுத்தி நிற்கும். அவருடைய சரீரத்தின் பிரகாசம், சந்திரனுக்குமில்லை. சூரிய னுக்குமில்லை. அவ்வித ரூபமுடையவர்கள் எங்கேனுமிருக்கமாட் டார்கள். நான் என்னதான் சொல்வேன்? அன்றுமுதல் நான் அவருடைய சந்திப்பின் ஞாபகத்திலேயேயிருக்கிறேன். உன் னுல் கூடும்போலிருந்தால், அவரை யென் முன்னுல் கொண்டு வந்து நிறுத்து, இல்லாதுபோனுல் உன்பேரி லாணையாக, நீயும், மற்றவர்களும், என்னை உயிருடன் கைநழுவ விட்டவர்களாவீர்க ளென்றுள்.

இதைக் கேட்ட "தாதி" கோபங்கொண்டவளாக, இளவ ரசியே, இதென்ன வார்த்தை? உணர்வுடன் பேசு. ஹாமர்மு ஜோ, உன் தோட்டக் காவற்காரனின் புத்திரனுயிருக்கிறுன்,

அவன் பேரில் நீ மோகங்கொள்வ தியல்பாகுமா? இந்த எண்ணத்தை நீ விட்டொழிவாயாகவென்றாள். அதற்கிளவரசி, தாதியே, மன்மதனுக்கு அரசனென்றும், அடிமையென்றும் பார்க்கிறதுணமேது? நடக்கவேண்டுவது நடந்துதான் தீரும். அஃதிருக்கட்டும். நீ, ஆரம்பத்தில் என்ன சொன்னாய்? வார்த்தைப்பாடு மாறுவது வசையல்லவா? நீ என்னிடத்தில் தந்திரமாகப் பேசி என் அந்தரங்கத்தை விளங்கிக்கொண்டு என்னை மோசப்படுத்துகிறதுபோ லிருக்கிறதேயென்றாள்.

அதைக் கேட்ட கிழத்தாதி, ஓ, ஓ, இவளுடைய தலையில் பெரிய பைசாசம் ஏறிக்கொண்டிருக்கிறது. என்ன சொன்னாலுங் கேட்கமாட்டாள். தனக்குண்டாகப்போகிற நய நட்டத்தையும் யோசிக்கமாட்டாள். உபதேசம் ஒன்றுக்கும் ஆகாது. வீண் பிரயாசையாய்த்தான் முடிந்தது. என்று பலவாறு தன்னுக்குள் தானே நினைத்துக் கைசேதமுற்று, இளவரசியைப் பார்த்து, மகளே, உன்னை நீயே துன்பத்திலாக்கிக்கொண்டாய். உன்னுடைய மனசில் கெட்ட எண்ணங் குடி கொண்டுவிட்டது. நல்லது சற்றே பொறு. இதோ, நான் போய் அவனைக் காதைப் பிடித் திழுத்துக்கொண்டு வந்து சேர்க்கிறேனென்று சொல்லிவிட்டு "ஹார்முஜ்" இருக்கும் இடத்துக்குச் சென்றாள். அவ்விடம். அந்தப்புரத்துக்குச் சமீபத்திலிருந்ததால், கிழத்தாதி வெகு சீக்கிரத்தில் அங்கு வந்து சேர்ந்தாள். அவர் அங்கொரு மூலையில் உட்கார்ந்திருந்தார். அவருடைய முகம் சூரியனைப் போலப் பிரகாசித்துக்கொண்டிருந்தது. தன் அழகின் பெருமையால் ஒன்றையும் ஏறெடுத்துப் பார்க்காதவர் போன்று, வாய் திறந்து பேசாமல் மவுனமுற்றிருந்தார். கிழத்தாதி அவருக்கெதிரே சற்றுநேரம் உலாத்திக்கொண்டிருந்தாள். பிறகு அங்குள்ள ஒரு மேடையின்பேரில் உட்கார்ந்து அவருடைய முகத்தைப் பார்த்து வியப்புற்றவளாக, அவர் நம்மைப் பார்க்கமாட்டாரா? ஏதேனுங் கேட்கமாட்டாரா? என்கிறதில் ஆலோசனையைச் செலுத்திக்கொண்டிருந்தாள்.

"ஹூர்முஜ்" அவளை யேறெடுத்துப் பார்க்கவுமில்லை. என்னவென்று கேட்கவுமில்லை. அதனால் கிழத் தாதி மனச்சோர்வுற்று, அவர் கிட்ட நெருங்கி வந்து, மிகுந்த வணக்கத்துடன், ஆ, அழகென்னும் புட்பவனத்துக் கரசரே, மங்கையர் மயல்கொள்ள மானிட வடிவெடுத்து வந்த மாதவரே, உம்மிடத்தில் எனக்கொரு முக்கிய அலுவலிருக்கிறது. உத்திரவளித்தால் விண்ணப்பஞ் செய்கிறேனென்றாள். அதற்கு "ஹூர்முஜ்" அடீ கிழத் தாதி, விண்ணப்பமென்ன? கேட்கிறதென்ன? வெகு நேரமாக இதற்காகத்தான் வட்டமிட்டுத் திரிந்தாய் போலும். உன்னுடைய விண்ணப்பத்தை நான் கேட்காது போனால் என்னை நீ, அகப்பெருமைக்காரனாக மதிப்பாய். அதுவும் எனக்குப் பெரிய வெட்கம். ஆகையால், உன்னுடைய நாட்டமென்ன? நீ என்னிடத்தில் வந்த காரணமென்ன? சிக்கிரஞ் சொல்லென்றார். தாதி, ஹூர்முஜைப்பார்த்து, என் கண்குளிர்ந்த வாழ்வே, நீர் இவ்வளவு கிருபை செய்ததே, எனக்குப் போதும். நம்முடைய "இளவரசி" உம்பேரிற் காதலுற்றுப் புலம்புகின்றாள். உம்மைக் காணாமற் கலங்குகின்றாள். நீர் கோபப்படாமல் என்னுடன் வரவேண்டும். உம்பேரிற் கொண்ட காதலால் அவள் உயிர் பிரியுந் தறுவாயிலிருக்கின்றாள். இது நல்ல சமயம், சிக்கிரம் எழுந்து வாரும். உலகத்தின் இன்ப சுகத்தை உள்ளபடிக்குப் பெற்றுக் கொள்வீரென்று, அனேகவிதமான இனிய வார்த்தைகளை யெடுத்துக் கூறினாள்.

அவளின் வார்த்தைகளைக் கேட்ட "ஹூர்முஜ்" நெற்றியிற் புருவமேற முகத்தைச் சுளித்து, மஹா, வக்ரகோபத்துடன் தாதியைப்பார்த்து, எடீ கிழமுண்டாய், நானோ, துயரக்கடலுள் ஆழ்ந்து கிடக்கிறேன். நீ, மஹா, கெட்ட குண்டுணி யென்பதை உன் வாக்காலும் முக நோக்காலும் அறிந்துகொண்டேன். என் முன்னில்லாதே. தூர விலகிப்போ. இல்லாது போனால் கடவுள் பேரிற் சத்தியமாக, சன்னஞ்சன்னமாய் உன்னைக்கொத்திவெறிவேன். உன் தலையை மொட்டை யடித்து, இவ்விடத்

தை விட்டும் விரட்டி விடுவேன். இதோ நிமிட நேரத்தில் என்ன நடக்கிறதென்பதைக் கண்டறிந்துகொள். மெழுகுப் பிரங்கி யைப் போல் கிழச்சூத்தாம்பட்டையை வெகு ஒய்யாரமாக ஆட்டி யசைத்துக் கொண்டு, என் முன்னே வந்து வாய் கூசாமலும் அச் சமில்லாமலும் பேசுகிறையா? என்றார்.

இதைக்கேட்ட கிழத்தாதியின் கைக்கிளி பறந்து விட்டது. அச்சத்தால் உடல் நடுக்கமுற்றது. ஆடாமல் அசையாமல் சற்று நேரம் அவ்விடத்திலேயே நின்றாள். அப்போது, அவளை "ஹார்முஜ்" பார்த்து, ஏ நெருப்புக் கங்கியே, மஹா தந்திர சாலியே, இதோ, நீ பார்க்கவில்லையா? தோட்டத்தின் மூலை யை யிருப்பிடமாகக் கொண்டேன். கவலையுங் கோபமும் உடை யவனானேன். உன் இளவரசரின் நேசத்தாலல்லவோ இக்கெதி யிலானேன். இளவரசியின் நேசத்தால் என்ன பலனைப் பெறப் போகிறேன்? வெறுமனே அவள் என் பேரில் மோகமுற்றி ருக்கிறாள். அவள் விதி கெட்டவள். நீ மதி கெட்டவள். உங்க ளுடைய ஆட்டம் என்னிடத்திற் பலிக்கமாட்டாது. வேறே யா ரையாவது உன் மாயவலைக்குள்ளாக்கிக்கொள். என்னிடத்தில் யாதொன்றும் பேசவேண்டாம். என் வயிற்றெரிச்சலை வளர்த்து விடவேண்டாம். போய்விடென்றார். ஹார்முஜின் கடு கடுத்த வார்த்தைகளைக் கேட்ட அம்மணியம்மாளுக்கு அடிவயிற்றில் இடி விழுந்து அசதி கண்டபடியால், உடனே அங்கிருந்துத் திரும்பி, பல்லைக் கடித்துக்கொண்டும், இளவரசியை முனிந்துக் கொண்டும் இந்த முதிர்ந்த வயதில் ஒரு கேவலமானவனின் சிறு மகன் வாயால் வசை கேட்கச் செய்தது இளவரசியல்லவா? அவள் தன் மானத்தைப் போக்கடிக்கப் பார்க்கிறாளே. இதற் கென்ன செய்கிறதென்று ஆலோசித்தவளாக அந்தப்புர வாசலுக் குச் சமீபத்தில் வந்து சேர்ந்தாள்.

இளவரசி, தாதியின் வரவை யெதிர்பார்த்திருந்தவ ளானப டியால் அந்தப்புர வாசலில் தோய்ந்த காலடிச்சத்தம் வருவதைக்

கேட்டு வெடுக்கென்றெழுந்து, எதிர்சென் றழைப்பதற்காக முன் வாசலுக்கு வந்தாள். அப்போது, தாதி, இளவரசியைப்பார்த்து, என் கண்குளிர்ந்த மகளே, நான் என்ன சொல்லப்போகிறேன்? நீ காதல்கொண் டவனுடன் நீயே வாதுக்கு நில்லு. நான் வாக்களித்ததுபோல் நிறைவேற்றக் கூடாமையாய்ப் போனதற்காக வுன் தாதியைச் செருப்பாலடித்துக்கொள். இதோ நான்விடைவாங்கிக் கொள்ளுகிறேன். வேறே எந்தச் சிறுமியையாவது அவனிடத் தனுப்பி அவனுக்கு மோகத்தையுண்டாக்கி உன் சமூகத்தைத் துவரச்செய்து வுன் ஆசையை நிறைவேற்றிக்கொள். நான்பட்ட பாடும், கெட்ட கேடும் எனக்குப் போதும். என்னால் இனிமேல் ஒன்றும் ஆகமாட்டாதென்று கடுகடுத்து வில வில்ப்புடன் கதைதது முடித்தாள். இதைக்கேட்ட, இளவரசி, அச்சமுற்றுச் சற்று நேரம் பிரமிப் படைந்திருந்து, பின்பு திடங்கொண்டு, தாதியைப்பார்த்து, தாயே, கடவுளுக்காகவும் அவரின் தூதருக்காகவும், "ஹார்முஜின்" சமூகத்தில் என்ன நடந்ததென்பதை யெனக்குத் தெளிவாக கூறினால். அதற்கான யோசனையை யாராலாவது தெரிந்து கொள்ளுகிறேனென்று நயந்து கேட்டாள்.

அதற்கு, ஹார்முஜிடத்தில் நடந்தவைகளை, கிழத்தாதி, விவரமாகக் கூறியதுடன், மகளே, உன்னுடைய சமாசாரத்தை அவன் செவி கொடுத்துக் கேட்கவில்லை. என்னை வெகு அவமானப்படுத்தி விரட்டிவிட்டான். அவனுடைய வசைச்சொற்கள் என் மனதைப் புண்ணாக்கிவிட்டன. எனக்கும் வயது நாற்பதைக் கடந்துவிட்டது. இவ்வித அவமானம், நான் ஒருக்காலும் அடைந்ததில்லை. மகளே, கீழ்மக்கள், மேன் மக்களின் நேசத்தை மதிக்கமாட்டார்களென்பதை நீ, அறிந்துமிருக்கிறாய். காகத்துக்குக் கிளியுடைய நேசம் வெறுப்பாகவே யிருக்கும். அதை உன் கண்ணாரககண்டுமிருக்கிறாய். ஒரு கேவலமான தோட்டக்காரனுடைய மகன் உன்னை அவமதித்து வெறுக்கின்றான் அல்லாமலும், உனக்கும், நான் தேசத்திற்கும் [illegible]

ர்த்தகாலம் கிச்சயிக்கப்பட்டிருக்கிறது. அதில் உனக்கு மேன்ன்மையுஞ் சுகமுமிருக்கிறது. இந்த அற்பன்பேரில் நீ மோகமுறுவது ஒருக்காலும் இயல்பாகமாட்டாது. அவனுடைய மோகம் உன்னை அலக்கழித்துக்கொண்டிருக்கிறது. உன்னுடைய காரியத்தை நோட்டமிட்டால், தன்னினத்துடன் சேர்ந்துக்கொண்ட எலிக்குஞ்சுக்குச் சமதியாகக் காணப்படுகிறதென்றாள். அதைக் கேட்ட, இளவரசி, தாயே, அஃதென்ன சமாச்சாரம்? அதை யெனக்கு விவரித்துக் கூறவேண்டுமென்று பிடிவாதம் பண்ணிக்கேட்டாள். இக்கதையால், இளவரசியின் மனம், ஒருக்கால் ஹஸர்மூஜ் பேரில் வெறுப்புறவுங் கூடுமென்று, தாதி நினைத்து வெகு அலங்காரமாய்க் கதையை ஆரம்பித்துக் கூறினாள்.

—:(*):—

## எலிக் கதை.

—:—

ஒரு தபோதனர், ஒருகாட்டில் குடியிருந்து, கடவுளை வணங்கிக் கொண்டிருந்தார். ஆசாயந் தெளிவான வொருநாள் ஒரு வல்லூறு ஒரு எலிக்குஞ்சைத் தன் காலிலிடுக்கிக்கொண்டு பறந்து போவதை, இன்னொரு வல்லூறுகண்டு அதின் பேரில் அவாக்கொண்டு அந்த எலிக்குஞ்சைப் பறித்தெடுக்க முயன்றது. அதனால் அவ்விரு வல்லூறுகளுக்கும் சண்டை மூண்டு கொண்டது. அப்போது, எலிக்குஞ்சு விடுபட்டு அத்தலத்துக்கு நேராக வணக்கத்திலிருக்கும், தபோதனரின் மடியில் விழுந்தது. அத்தபோதனர், மஹா தயாள குணமும், இரக்கமு முடையவரானதால் அவ்வெலிக்குஞ்சுக்குப் பட்டியிருக்குங் காயத்தையும், கடவுளின் அற்புதச் செய்கையையும் பார்த்து வியப்படைந்து, தாரைதாரையாய்க் கண்ணீர் வடித்தார். அதன் காயத்துக்குப் பரிகாரஞ் செய்தார். அவ்வெலிக்குஞ்சின் வாயில் கொஞ்சம் பாலூற்றினார். அதை வளர்ப்பதில் மெத்தப் பிரயாசை யெடுத்துக்கொண்டார்.

கொஞ்ச நாளைக்குள் அது வளர்ந்து பருவமுற்றது. கோடிக்கணக்கான எலிகளைக் கொன்று தின்ற பூனைக்குங்கூட அதின் பேரிற் கிருபையுண்டாகக் கூடியதாயிருந்தது. அதற்கு எப்போதும், தபோதனர், பாலூட்டி, அதைத் தன் நெஞ்சிற் கிடத்தி வளர்த்து வந்தார். இது, கடவுளின் சிருஷ்டிகளுள் ஒன்றானதால் நாம் இதை சரிவரக்காப்பாற்ற வேண்டுமென்ற எண்ணததுடன் மெத்தப் பிரியமாக வளர்த்தார். அவ்வெலியும் யாதொரு அச்சமுமில்லாமல் அவருடைய மடிமேல் துள்ளித்துள்ளி விளையாடிக்கொண்டிருந்தது. அப்படிக் கிருக்கும்போது, ஒரு நாள் அத்தபோதனர், அந்த எலி, துள்ளி விளையாடிக் கொண்டிருப்பதைப்பார்த்து, சந்தோஷமுற்று, இது மனுரூபம்பெற்றால் நமக்குப் பணிவிடை செய்வதில் மெத்தப் பேறுதலுடையதாயிருக்கப் போதுமல்லவா? என்று நினைத்தார். அவர், கடவுளிடத்தில் அதிக சலிகை பெற்றவரானதால் அவருடைய எண்ணத்தையறிந்த, "கடவுள்" அவ்வெலியை ஒரு பாலியப் பெண்ணாக்கினார். அப்பெண், தபோதனரின் விரிப்பில் வெகு வில்லாசத்துடனின்று தந்தையே, எனத் தபோதனரை விளித்து, அவருடைய கழுத்தில் தன்னிரு கைகளையும்போட்டு இறுகத் தழுவினாள். மூன்று வருஷம் அவருடைய பணிவிடையிலிருந்தாள்.

பின்பு அவள் சரியான வயது வந்து திரண்டாள். சரீரம் பிரிந்தது. தனங்கள் விம்மின. வாலியத்தின் பிரகாசம் அவள் முகத்திற் காணப்பட்டது. அவளின் அழகையும், வயதையும் நோட்டமிட்டு, அவளை யாருக்கேனும் விவாகமுடித்து கொடுத்துவிட வேண்டுமென்றும், அவளுக்குக் கல்யாணத்தில் பிரியமிருக்கிறதா, என்பதை அறிந்து செய்யவேண்டுமென்றும், தபோதனர் நினைத்து அவளிடத்தில் கேட்டார். அதற்கவள் சகல படைப்புகளிலும் பராக்கிரமத்தை யுடையவருக்கானால் நான் வாழ்க்கைப்படுவேனென்றாள்.

தபோதனரோ, கடவுள் வணக்கத்தில் பரிபூரணமுற்றவரானதால், சகல படைப்புகளும் அவருக்கு வசப்பட்டிருந்தன. அத

னல் சகல வஸ்துக்களிலும், சூரியனே மேன்மையுடையதென மதித்து, அப்பெண்ணைப் பார்த்து, மகளே, நீ, எல்லாரைவிட மேன்மையானவர் வேண்டுமென்கிறபடியால், சூரியனை உனக்குப் புருஷனாகத் தெரிந்தெடுத்தேன்; என்ன சொலலுகிறாயென்று கேட்டார். அவள், என் தந்தையரே, சூரியனைவிட, மேகத்தை நான் பெரிது காண்கிறேன். அதின் ஒரு துண்டு, தாங்கள் கூறிய சூரியனையும் மற்றவைகளையும் உருவந்தெறியாமல் தன்னுக்குள் அடக்கிக்கொள்ளுகிறதென்றாள். தபோதனர், மேகத்தைக் கேட்டார். அதற்கது, நாயகமே, என்னைவிடக் காற்று அதிக பலமுள்ளது. அதற்கெதிரே, என்னுடைய ஆட்டம் பலிக்கிறதில்லை. என்னை எவ்வெவ்விடங்களுக்குக் கொண்டு போகவேண்டுமோ, அவ்வவ் விடங்களுக்கெல்லாம் விரட்டிப் போகிறது. ஒரு மூச்சில் என் உடலை, பலதுண்டங்களாக்கிப் போடுகிறதென்று மறுமொழி கொடுத்தது.

தபோதனர், காற்றைக் கேட்டார். அதுவும் நாயகமே, எவ்வளவு பலமாக என்னுடைய அதிகாரத்தைச் செலுத்தினாலும், அணுவளவும் அசையாத பருவதங்கள் என்னைவிட அதிக பலமுடையதென்றது. தபோதனர் மலையை உசாவினர். அதற்கது என் சற்குருவாகிய நாயகமே, நான் என்ன சொல்லப் போகிறேன், எலியுடைய கொடுமையால் கணக்கற்ற புண்பட்டுக் கஷ்டமடைந்தவனாயிருக்கிறேன். அது தன் சிறு பற்களால் கறித்து, பருத்த என் சரீரத்தைத் துளைத்து என் மனம் புண்ணுக்குமேல் புண்ணாகச் செய்துகொண்டிருக்கிறது. எனக்குப் பெண்ணொரு கேடா? என்று விடை கொடுத்தது.

இவைகளையெல்லாம், சமுகத்திலிருந்து கேட்டுக்கொண்டிருந்த அப்பெண், தன்னுணர்வற்றவளாகப் பதறியெழுந்து, தந்தையரே, வானத்திலும், பூமியிலும், எலியைவிடப் பலமான வஸ்து கிடையாதென்பதைத் திட்டமாய் நான் அறிந்துக்கொண்டபடியால், அதையே நான் மணவாளனாகப் பொருந்திக்கொண்

டன். அவ்விஷயத்தில், தாங்கள் மறுத்துக் கூறுதிருக்கவும் மனச்சம்மதி கொடுக்கவுங் கேட்டுக்கொள்ளுகிறேனென்றாள்.

"தபோதனர்" பலவாறு ஆலோசித்து, குலத்தளவேயாகு மாங் குணம், என்பதும்போல் தன்னினத்தை சுபே, இப்பெண்ணுரு ப்பெண்ணெலி பெரிதாகத் தெரிந்துகொண்டதென்று பெருமூச் செறிந்தவராகச் சில நேரமிருந்து, அவளை ஒரு எலிக்கு விவாக முடித்து வைத்து, எலிக்கும், மனுஷருக்கும், இணக்கம் ஒத்து வராதே, எலியத்தனை பருமனுள்ள வஸ்தொன்றினல்லவோ, இவளின்பம் பெறவேண்டும். இதற்கென்ன யோசனை யெனப் பலவாறு சிந்தித்து, கடவுளே, இப்பெண்ணை முன்னிருந்த விதமாக்கிவிட உம்மைத் தவிர வேற்ற யாரையும் நான் தெரிந்துக்கொள்ளவில்லையென்று நினைத்தார், அப்போதே அப்பெண் தன்னுருவமாறி எலியானது. உடனே ஆணெலி, அப்பெண்ணெலியைத் தன் முதுகிலேற்றிக் கொண்டு மலைக் குகைக்குள்ளாய் விட்டது.

மகளே, இதுதான் எலியுடைய சரித்திரம். நீ என் கேவலப்புத்தியைக் கைக்கொண்டிருக்கிறாய். கடவுள் பேரில் சத்தியமாக அதை எனக்குத் தெரிவிக்கவேண்டும். என்ன காரணத்திற்காக, ஈரான் அரசரின் தெரிசனையை நீ வெறுக்கின்றாய்? விவரிக்க வேண்டுகின்றேன். என்ற கிழத்தாதியை, இளவரசி பார்த்து ஏடீ! தாதி! என்னுடைய விதியின் மாறுதலால் நான் கோணற் பாதையில் குறுக்கிட நேர்ந்தது. என்னுடைய செய்கையும் விரோதமானது. என் மனம் எதின் பேரிற் சென்றதோ, அதையே பெரிதாகவும் பிரகாசமாகவுங் காண்கிறேன், ஈரான் அரசரின் தகுதியும், மேன்மையும், பதாதிகளும், என் பிரியநேசரின் தகுதியைவிட மேலானதென்பதைப் பரிஷ்காரமாய் நான் அறிந்தேயிருக்கிறேன். சந்திரனுக்கும் சூரியனுக்கும் வித்தியாசமில்லையோ? நான் அந்த ஹமார்முஜின் பிரகாசமான உருவத்தைத் தெளிவாகக் கண்டிருக்கிறேன். அவருடைய பிரகாசத்துக்கு முன்னால் சூரியனு மிணையாகமாட்டாது. அந்த அவலக்ஷ

ணராகிய ஈரான் அரசர் எங்கிருந்து ஹார்முஜின் அழகுக் கிணை பெறப்போகிறார்.

அடி தாதி, எனக்குச் சம்பவித்திருக்கும் கவலையை உன்னுடையதாக மதித்து, என்னுடைய நாட்டத்தை நிறைவேற்றுவிப்பாயென்று நினைத்திருந்தேன். என்னுடைய அந்தரங்கத்தைத் தெரிந்து சொல்வதற்காகத் தந்திரமான வார்த்தைகளால் என் சிந்தையை நோகச் செய்துவிட்டாய். என் விதிப்படியே யாவும் நடக்கும் வியாதி யுற்றவர்களுக்கல்லவோ வருத்தந் தெரியும். என்னுடைய மனப்பிணியை உன்னுடைய தந்திர வார்த்தைகள் ஒருக்காலும் சுகப்படுத்தமாட்டாது. போ, போ, உன்னுடைய அலுவலை நீ போய்ப்பார். என் முன்னால் வேறே யாதொன்றும் பேசாதே, யென்று சடிந்து கூறி, மலராத புட்பத்தைப்போன்று வாய் பேசாது, தலை குனிந்தவளாகவும், கண்மூடியவளாகவும், ஆலோசனையிலிருந்தாள்.

வாயை மூடினால் கொதியதிக மென்பதுபோல், அவளுக் குண்டாயிருந்த எண்ணம் அதிகரித்தது. சஹிக்கமுடியாத சங்கடத்திலானாள். கவலையால் உலர்ந்திருந்த அவளுடைய நெஞ்சம் கரிந்தது. கண்ணாகிய நீரூற்று, கடல்போலாயிற்று. விரகவேதனையின் காங்கை நம்முடைய அந்தரங்கத்தை வெளிப்படுத்தி விடுமோவெனச் சந்தேகிப்பாள். ஹார்முஜின் பளபளப்பான வுடலின் அழகை நினைத்தால் அவ்வெண்ணத்தை விட்டொழிவாள். தனக்குத்தானே ஆறுதல் கூறுவாள். ஹார்முஜிடத்தில் நளினமாகப் பேசக்கூடிய யாரையாவது தூதனுப்புவோமாவெனக் கருதுவாள். ஒன்று பலவாய்ப் பிரிந்தது போல் பல பல யோசனை கொள்வாள். தன்னைத்தானே விரகவேதனையால் கரித்துப் போடுவாள். சில சமையம் உணர்ச்சி பெறுவாள். ஆ, ஆ, அநியாயத்தில் சிக்குண்டு இகபரசாதனங்களை யிழந்தேனேயென்று கரைவாள்.

யாரேனும் அவளுடன் பேச்சுக்கொடுத்தால் ஜனங்களே, கடவுளுக்காக என்னைத் துன்பப்படுத்தாது விடுங்கள். நானோ விதிவசமுன் மரணமடைந்தவளாயிருக்கிறேனென்று அழுதழுது மொழி கொடுப்பாள். இவ்வாறு சிலநாள் கழிந்தது. இவ்விடத்துக் கருமம் அவ்விடத்திலும், அவ்விடத்து விஷய மிவ்விடத்திலு மில்லாமல் அடக்கத்திலிருந்தது. யோசேப்பை, கானனிலிருந்து எஜிப்திலும், லைலியை நஜ்திலிருந்த மஜ்னூனிடத்திலுஞ் சேர்த்து வைத்த மன்மதன் இந்தவிடத்திலும் தன் சொந்த வேலையை நடத்த முன் வந்தான். எப்படியென்றாலோ, இன்னொரு நாள் ஹார்முஜ் குளித்துவிட்டு தலைபுணர்த்திக்கொண்டு நின்றார்.

அப்போது "குல்" இளவரசிக்குத் திடுகூறாகத் தோட்டம் பார்க்க வேண்டுமென்ற எண்ணமுண்டாகி அங்கு சென்றாள். ஹார்முஜைக் கண்டாள். இருவருடைய மனங்களிலும், மன்மதன் விரகபாணத்தை யெய்து புண்ணாக்கிவிட்டான். "ஹார்முஜும்" இளவரசியைக் கண்டு விட்டார். மன்மத பாணத்தால் மயக்கங்கொண்டு, இளவரசி குப்புற அடித்து விழ்ந்தாள். துணையாகச் சென்றிருந்த தாதிப்பெண்கள் அவளைத் தூக்கிக்கொண்டு அந்தப்புரத்துள்ளானார்கள்.

தன்னுடைய அழகுக் கிணை ஒருவருமில்லை யென்று இறுமாந்து துள்ளித் துடித்துக்கொண்டிருந்த ஹார்முஜும், இளவரசியின் மோகசாகரத்து ளமுங்கினார். கரணப்புறவானார். பெருமையும் துள்ளாட்டமும், விடைபெற்றுப் போயின. சிறுமை விடுதிவிட்டது. அவரிருக்குந் தானத்தில் வேறே யாரும் வருகிறதில்லையாதலால் வெகுநேரம் வரையில் உணர்வற்றவராகக் கிடந்து, பின்பு தெளிவுபெற் றெழுந்து, அழகின் பெருமையால் அருக்கனை யேறெடுத்துப் பார்க்காத கண்களால் தாரை தாரையாய்க் கண்ணீரை வடித்தார். ஆனால் கண்திறந்து பார்க்கவும் வாய்திறந்து பேசவுங் கூடாதவராயிருந்தார்.

உசாருண்டானபோது, ஆ, ஆ, என் கண்ணிறைந்த வாழ்வே, உன்னுடைய மோகப்பார்வை என் கண்ணை மயக்கி என்னைப்

பிணமாக்கிப் படுகுழியில் தள்ளிவிட்டதே. என்னுடைய விதியை யென்னென்று சொல்லுவேன். அவள் சிரித்தாள்; நான் அழுதேன். அந்த சஞ்சீவித் திராவகத்தில் செந்தேன் கலந்தது போன்றிருக்கிறது. என்னுடைய நாவில் நஞ்சின் சுவை நடனமிடுகிறது. என்னுடைய நெஞ்சைப்புண்ணாக்க, அந்த "சூல்" என்பவள் எங்கிருந் திங்கு வந்தாளோ? ஆ, கடவுளே, நானென்னசெய்வேன். எப்போது காண்பேன்? எவ்வாறு சஹித்திருப்பேன்? எல்லாம் உம்முடைய வுதவியை நாடுவதுபோல் நானுமிருக்கிறேனென்று பலவாறு புலம்பிக்கொண்டிருந்தார்.

(அவர் புலம்பட்டும் அவளைப் போய்ப்பார்ப்போம்)

அந்தப்புரத்துக்குச் சென்ற இளவரசி விசனத்தால் பெருமூச்செறிந்தவளாகத தன்னுணர்வற்று, சுவரிலெழுதிய சித்திரம் போன்று ஆடாது அசையாது அபபடியே யிருந்தாள். தாயாகிய இராஜாத்தி மகளின் ஸ்திதியைப் பார்த்து மனங் கசங்கித் தட்டழிந்து, முந்தி, ஹாரூர்முஜீடத்தில் தூது சென்று வந்த கிழத்தாதியை வரவழைத்து, எடீ, தாதி, இந்த சூல் இளவரசி, நிச்சயமாக மோக வலைபுள் சிக்குண்டவளாகக் காணப்படுகிறாள். இவளைப் பிரிந்திருக்கும் ஒரு நிமிஷம், எனக்கொரு யுகம்போலாகும். இந்தத் தோட்டக்காவற்காரனின் புத்திரனுடைய நினைப்பு அவளுக்குண்டாகும்போது வெட்கத்தால் வியர்த்துப் போகின்றாள். இவளுடைய தலையில் மன்மதனின் தூதன் ஏறிக் கூத்தாடிக்கொண்டிருக்கிறான்.

ஹாரூர்முஜைக் கண்டாலல்லாது குணப்படமாட்டாள். ஆகையாலிப்பவே, நீ அவனிடத்துக்குப்போய் அவன் மனதைத் திருத்தி, அவனையழைத்துவந் திவளிடத்தில் விடு. வெட்டியானும் பிணமும் போல், கட்டிப் புரளட்டுமென்றாள். அதைக்கேட்ட தாதி, என் நாயகியே, என்னுடைய காரியங்கள் மறைவானவையல்ல. எல்லாந் தாங்களறிந்த விஷயம் தான். இன்னொருமுறை அவனிடத்துக்கு நான் போகிறதானல் அடியோடே என்னுடைய

மரியாதை போய்விடும். அந்த அற்பனுல் என்னுடைய மானம் போக்கடிக்கப்படுவதைவிட இழிவானது வேறொன்றும் எனக்குத் தப்புலப்படவில்லை. இதோ தங்கள் சமுகத்தில் நிற்கிற என்னைத் தாங்களென்ன செய்ய வேண்டுமோ செய்து கொள்ளுங்கள் என்று மறுத்துக் கூறினுள். அதைக்கேட்ட பட்டத்தரசிக்குக் கோபமூண்டு விட்டது தாதியைப்பார்த்து, நீ யென்ன தொனப்புகிறுய். என்னிடத்திலா உன்னுடைய தந்திரத்தைக் காட்டுகிறுய்? வளர்த்தவரின்கிருபை பெரிதென்பது வுலகவழக்காச்சே; நான் போகச்சொல்லுகிறேன், நீ அசையாதுநிற்கின்றுயே, இதென்ன சுபாவம்? சீக்கிரம் சென்று நான் சொன்னபடிக்கு வேலையை முடித்துக்கொண்டு வந்துசேர வேண்டும். இவள் படுந் துயரத்தைப்பார்த்து சகித்திருக்க என்னுல்கூடாது; போய்வாவென்று கடிந்துகூறினுள்.

கிழத்தாதி அங்கிருந்து புறப்பட்டு இளவரசியிருக்கும் அறைக்குள்வந்து அவளைப்பார்த்து மகளே, வெறுமனே நீயே உன்னை பைத்தியக்காரி யாக்கிக்கொண்டாய். முன் பின் யோசனை முழுவதையும் போக்கடித்து விட்டாய். போனது போகட்டும். நீ யார்மேல் மோகமுற்றிருக்கிறுய் அதைச்சொல்லென்று கேட்டாள். அதற்கு இளவரசி தாதியே, நான உன்னிடத்தில்சொல்லியிருக்கிற அந்த ஒரு ஆனந்தன்தான். நான் உயிர்த்திருக்க வேண்டுமென்ற எண்ணம் உனக்கும் மற்றவர்களுக்கும் உண்டாயிருக்குமேயானுல், நீ அந்த அநியாயக்காரனிடத்துக்குச்சென்று அவனை வசப்படுத்தி என்னிடத்தில் கொண்டுவா. இச்சையின் ஊறு வெகுதூரம் தாக்கிச் செல்லுமென்பதை நான் கேள்விப் பட்டிருக்கிறேன். அவன் ஒருக்கால் என்னைப் பார்க்காதிருந்தாலும் நான் அவனைப்பார்த்த மோகப்பார்வையின் சூடு அவனுடைய நெஞ்சிற்பட்டு மன மிளகி யிருக்கவுங்கூடும். ஆகையா லிம்முறை உனக்கு அவன் வசப்படுவானென்று நினைக்கிறேனென்றுள். தாதி அங்கிருந்து புறப்பட்டு மெள்ள மெள்ள நடந்து, ஆனந்தனிருக்கும் தானத்துக்கு வந்து சேர்ந்தாள்.

ஹுர்முஜ் தன்னுணர்வற்றுப்பூமியிற்கிடந்து அறுபட்ட சே
வல் போல் புரண்டுக்கொண்டிருந்தார். சந்தோஷத்தின் மிகைப்
பால் சரீரத்தின் அவயவங்கள் துடித்தன. மகிழ்ச்சியின் அதிகரி
ப்பால் நெஞ்சுபடபடத்துக்கொண்டிருந்தது. இதைக்கிழத்தாதி
கண்டு, பிரமிப்படைந்துதேர்ந்து, சட்டென்று இவருக்குச்சந்தோ
ஷச் சமாசாரத்தைச் சொல்லிவிடக்கூடாது. கொஞ்சம் பொறுத்த
சமயமறிந்துதான், சொல்ல வேண்டுமென்று நினைத்து அங்குமிங்
கும் வட்டமிட்டுக் கொண்டு திரிந்தாள். ஹுர்முஜைப் பார்க்
காதவள் போல வுலாவினுள். அது அவருக்கு மஹா வருத்தமா
யிருந்தது. தன்னுடைய காரியத்தை நினைத்து நினைத்து, கலக்க
முற்று அழுது கொண்டிருந்தார். சற்று நேரத்தின் பிறகு தாதி
அங்கிருந்து திரும்பி ஆடியசைந்துக் கொண்டு, அந்தப்புரத்தை
நோக்கி நடந்தாள்.

அவள் திரும்பிய வுடனே, அறவே உணர்வற்றுக் கிடந்தா
லும், அவள் கிட்ட நெருங்கி வருவதை யெதிர் பார்த்திருந்த
ஹுர்முஜ், சப்தமிட்ட வராக எழுந்து நின்று, அம்மா, தாயே,
தங்களுடைய கடைக் கண்ணுலாவது என்னைப் பாருங்கள்
இப்பரதேசி சொல்வதைக் கேளுங்களென்று வுரத்துக் கூறினர்
கிழத்தாதி வெடுவெடுப்புடன் திரும்பிப்பார்த்துவிட்டு நடந்தாள்.

ஹுர்முஜ் முன் போலவே சப்தமிட்டழைத்தார். வெகு
மூர்க்கமாகக் கிழப்பிணம் திரும்பிப் பார்த்து, ஏடா, ஹுர்முஜே
ஏன் என்னை அழைக்கிறுய்? என்ன சொல்லிக் குவிக்கப் போகி
றுயென்றுள். ஹுர்முஜ், அவளை நெருங்க விரைந்து வந்து
வந்தனமளித்து வழிமறுத்து அவளுடைய முந்தாணியைப் பிடி
த்துக் கொண்டார்.

அவள் கண்களில் தீப்பொறி பறக்கக் கோபங்கொண்டவள்
போல் முகத்தைக் காட்டி, வெடு வெடுப்பாக, என்னடா உனக்
கென்ன பிடித்திருக்கிறது. பலே, ஷபாஷ், நன்றுயிருக்கிறது

ஆ, ஆ, முன் பின் அறியாத ஒருவன் பெரிய தாயே வந்தனமெ ன்றது போலிருக்கிறதே. இப்படிப்பட்ட பிள்ளையைப் பெற்றெ டுத்த தோட்டக்காரனும் அவன் குலமும் நிர்மூலமாகிப் போகக் கடவதாக. பதிவிரதைகள் பேரில் சப்தத்தை புயர்த்துகிறானே. என்னுடைய அந்தஸ்தைக் கவனிக்கிறானில்லையே. கடப்பான காரியத்தைச் செய்யத் துணிந்து விட்டானே. பரிசுத்தமான அந்தப்புர ஸ்திரீகளின் முந்தாணி வரையில் கைநீட்டி விட்டானே. நான் கடவுளை மெத்தப் பயந்தவள். இல்லாதுபோனால் இப்ப டிவே என் வாயைத் திறந்து இவனை சபித்துப் போடுவேனே என்று படபடத்துக் கூறினாள்.

அவளின் வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருந்த "ஹாரூ ஹஜ்" சற்று நேரம் அழுதுகொண்டிருந்து. கிழத்தாதியைப் பார்த்து, தாயே, போதும், போதும், மடத்தனத்தின் அகங் காரத்துக்குத் தக்க பிரதிபலனை அனுபவித்துக் கொண்டேன். போனது போகட்டும். இப்போது தாங்கள் என்பேரில் கிருபை கூர்ந்து பேச வேண்டும். இகத்தில் செய்யும் நய நட்டத்தின் பிரதியை, பரத்திலனுபவிப்பார்களென்றுதான் நான் கேள்விப்ப ட்டிருக்கிறேன். உலகத்திலும் அந்தப்படி உண்டாகிறதும் உண்டு போலிருக்கிறது. அதைப்பற்றிக் கொஞ்சம் தங்கள் வாயால் பிரசங்கிக்க வேண்டுகிறேனென்று வெகு மரியாதையுடனும் வண க்கத்துடனும் வேண்டி நின்றார். கிழத்தாதி, ஹாரூமுஜைப் பார் த்து வாலிபனே, உன்னுடைய கருத்தென்ன? நீ எதை நாடுகி றாய்? தெளிவாகச் சொல்லென்று கேட்டாள்.

அதற்கு ஹாரூமுஜ், அம்மா தாயே? முன்னொரு முறை, தாங்கள் "குல்" இளவரசியின் செய்தியைக் கொண்டு வந்து இனிமையாக என்னுடன் பேசினீர்களே, அப்போது விதியும் மதியும் கெட்ட நான் தங்களுடைய சொல்லைப் பொருட்படுத் தாது வெறுத்தேன். என்னை நானே விரகத்தியில் வேகவைத் துக்கொண்டேன். அச்சமாசாரத்தை பின்னொருமுறை சொல்ல

வேண்டுகிறேன். எனக்கும் அவளுக்குமுள்ள தாரதாத்தை நோட்டமிடாதீர்கள். என்னை மண்ணாக மதித்து அப்பெண்மணியின் பாதத்தால் என்னைச் சவட்டச்செய்யுங்கள். தங்களைப்பார்த்தாலோ கும்பகோணதறையரின் தங்கையாகவே காணப்படுகிறீர்கள். இதுதான் என்னுடைய நாட்டமுந் தேட்டமுமென்றார்.

இதைக் கேட்ட கிழத்தாதிக்கு, எங்கிருந்தோ வந்துவிட்டது கோபம். வெகு மூர்க்கமாக ஹாரூர்முனைப் பார்த்து, இதென்ன புதுமையான பேச்சாயிருக்கிறது. நான் எப்போது வந்தேன், யாருடைய செய்தியைக் கொண்டு வந்தேன். நீ உசாருடன் பேசு. இந்தப்படியான புலப்பம் முடிவில் கெடுதியையே விளைவிக்கும். நீயோ தோட்டக்காவற்காரனின் பிள்ளையாயிருக்கிறாய். குல் இளவரசியோ, உயர்ந்த பதவியையும் சிறந்த அழகையும் உடையவளா யிருக்கிறாள். அவளிடத்துக்குப் போக எனக்குச் சக்தியேது. இவ்விதமான வார்த்தைகளை யென்னுடன் பேசியதுபோல் வேறே யாரிடத்திலும் பேசி விடாதே. கடவுள் உன்னுடைய பேச்சை யின்னொரு முறை யென் காதில் விழச்செய்யாதிருப்பாராகவென்று கூறிமுடித்தாள்.

இவைகளைக்கேட்ட ஹாரூர்முஜ், தன்னுடைய எண்ணத்துக்குப் பின்னபாக வந்துலபித்ததே யெனக் கசங்கி வயிற்றைப் பிடித்துக்கொண்டு கீழே உட்கார்ந்து இரண்டு கன்னங்களும் பள்ளமாகிறமட்டுக்குங் கண்ணீரைச் சொரிந்து அழுதுக்கொண்டிருந்தார். கிழத்தாதி அவரின் அழுகையையும், கவலையையும் பார்த்துப் பயந்து இன்னமும் நாம் சும்மாயிருந்தால், கவலையின் மிகைப்பா லிவருடைய மனங்கரிந்து புத்தி மாறிப் போய்விடும். அப்பால் அதிக சஞ்சலத்துக் கிடமாகிவிடுமென்று நினைத்து ஹாரூர்முனைப் பார்த்து புன்சிரிப்புடன் மகனே, நீர் மஹா புத்திசாலியாயிருந்தும், பரிகாச வார்த்தைகளையும் சைக்கினைக் குறிகளையும் அறியக் கூடாதவரா யிருக்கிறீர்.

நான் உம்மை "ருல்" இளவரசியிடத்தில் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்காகவே வந்திருக்கிறேன். சற்று பொறும். உம்மனதைத் திடப்படுத்தும். சூரியன் மறையட்டும். உம்மை உம்பிரிய நேசியின் சமுகத்தில் கொண்டு போய் விடுகிறேன். அப்பாதிந்த அழுகையையும் கவலையையும் நினைப்பூட்டி முழங்காற் படிந்து வந்தனமளிக்கிறேனென்று கூறிவிட்டு, அங்கிருந்து அந்தப்புரத்துக்கு வந்து இளவரசியைக்கண்டு ஹுமாயூனின் சமுகத்தில் நடந்தவைகளை விவரித்துக் கூறினாள். இதைக்கேட்ட இளவரசிக்குச் சரீரத்தில் பலமும், திடமும், உண்டாகி மனதில் சந்தோஷமதிகரித்தது. ஆ, கடவுளே, இந்த சூரியனைச் சீக்கிரத்தில் மேற்றிசைக் கடலுள் ஆழ்ந்து போகச் செய்வீராகவென்று வேண்டிக்கொண்டிருந்தாள். பொழுதடைந் திருள்படர்ந்தது. "குல்" இளவரசி, சிங்காரித்துக்கொண்டு, "ஹுமாயூன்" வருகையை யெதிர் பார்த்துக்கொண்டிருந்தாள். கிழத்தாதி அங்கிருந்து புறப்பட்டு ஹுமாயூனிடத்துக்குப் போய்ச் சேர்ந்தாள்.



## 5-ம் அதிகாரம்.

### (நேசர் தெரிசனம்.)



"ஹுமாயூன்" தாதி யெப்பொழுது வருவாளென்று ஒரேகவனமாக விரலை மடித்து நாழிகையைக் கணக்கெடுத்துக் கொண்டிருந்தார். அவருடைய பார்வை சிங்கார வனத்தின் திசையின் பேரிலேயே யிருந்தது. சுவரிற் பாய்கிற தன்னுடைய நிழலைக் கண்டு கிழவி வந்துவிட்டதாகப் பதறிப்பதறிப் பார்ப்பார். சூரியனைப் பார்த்து இது கடைத்தீர்ப்பின் நாளல்லாதிருக்க, ஏ, சூரியனே, கரிந்து போயிருக்கிற என்னை யேனின்னும் கரிக்கின்றாய். உன்னுடைய இருட்பிடமாகிய மேற்றிசைக் கடலுள் ஏன் மறைகிறாயில்லை யென்பார். சூரியனைச் சந்திரனாக நினைத்து, பைத்தி

யக்காரனைப் போலப் புலம்புவார். காலமல்லாக்காலத்தில் பொழுதடையச் செய்வது கடவுளுக்குப் பொருத்தமல்ல போலுமென்பார். ஏ, சந்திரனே, நீ புறப்படுகிறதானால் புறப்படு, இல்லாதுபோனால் என்னுடைய வுயிர் புறப்பட்டுவிடும். வருகிறதானால் வா, வராதுபோனால் எனக்கு மரணம் வந்துவிடும். என்று பலவாறு புலம்பிக்கொண்டிருந்தார். அப்படிக் கிருக்கும்போது, சூரியன் மறைந்து, சந்திரன் வெளிப்பட்டது. பொழுதடைவதை யெதிர்ப்பார்த்திருந்த கிழத்தாதியம்மாள் ஹாமுஜின் சமுகத்தில் ஆடியசைந்துக்கொண்டு வந்து நெருங்கினாள். அவளின் வருகையைக்கண்ட ஹாமுஜ் அவளை எதிர்சென்றழைப்பதற்காக ஆயிரக்கணக்கான குத்துக்கரணமிட்டெழுந்து விலவிலத்த காலால் நடந்து, அவள் கிட்ட நெருங்கி வந்தனமளித்தார். ஹாமுஜின் தள்ளாட்டத்தையும், படபடப்பையும் கிழத்தாதி பார்த்து வியப்புற்று, கெக்கையிட்டுச் சிரித்து, பலே ஷபாஷ், ஒஹோ தம்பி, இரண்டு தலை ஒன்றுபடுவதிலிருக்கிற இன்பமென்னவோ? பிரிய நேசர்கள் ஒருவரை ஒருவர் சந்தித்து இன்பத்தையனுபவிக்கின்றார்கள். இருவரையும் ஒரு தலத்திற் சேர்த்துவைக்கும் நாங்கள் அவர்களின் சிறந்த விளையாட்டாதியவைகளைப்பார்த்துச் சிரித்து வெறுமனே விடுதிகளுக்குப் போகிறோம். இவ்வளவு பதட்டம் உமக்கேன்? இன்னும் நீர் அனுபவிக்க வேண்டியவைகள் அனேகமிருக்கின்றனவே என்றாள். ஹாமுஜ் வெட்கத்தால் தலை குனிந்து நின்றார்.

விசை நரைத்தாலும் ஆசை நரைக்காதென்பதுபோல், கிழத்தாதிக்கும் அவர்பேரி லிச்சையுண்டாயிருந்ததோ என்னவோ? கடவுளறிவார். அவரைத் தன் கையாலணைத்துப் பிடித்து மெல்லமெல்ல நடத்திக் கூட்டிக்கொண்டு குல இளவரசியின் சமுகம் வந்து சேர்ந்தாள். இகபரசுக போகங்களைப் பெற்றுக் கொண்டவர் போல் ஹாமுஜ் மகிழ்ந்தார். சந்தோஷத்தால் அவரின் மனம் மலர்ந்து விம்மிற்று.

'ஹார்முஜ்' தன்னை மறந்தவராகி, "குல்" இளவரசியின் சமுகத்தற்று, அவளின் செவ்வல்லி மலர்போன்ற மிருதுவான கால் கைகளில் தன் கண்ணை வைத்துப் புரட்டி இப்பாத தாமரைகளில் என் தலையை வைத்துப்புரட்டுவது என்னிடத்தில் சகலலோகச் சக்கரவர்த்தித் துவத்துக்கு மேலாகும். இப்பாதத்திலணிந்திருக்கப்பட்ட சரிகை வேலை செய்த செருப்பானது எனக்கு சாலயோனின் மகுடங்கிடைத்ததற்கு மேலாயிருக்கும். இப்புதிய விரகமானது எனக்குக் கடப்பான சஞ்சலத்தை உண்டாக்கி விட்டது. கஸ்ஸாபுடைய வீட்டில், பலியெடுக்க வந்த விருந்தாளிபோலானேனே. எனப் பலவாறு புலம்பத்தொடுத்தார்.

ஆண்பிள்ளைகளின் நிழற் சாயை கூடப்பட்டிராத, இளவரசியின்பாதத்தில் ஹார்முஜின் சிரம்பட்டதால், அவளுக்கு ஒருவிதவுணர் வுண்டாயிற்று. உண்டானாலும் வெட்கத்தால் சுவரணையற்றவளாயிருந்தாள். பின்பு, தன் பாதத்தில் பிரிய நேசரின் சிரசிருப்பதை யுணர்ந்து, வலமிடம் திரும்பிப்பார்த்து யாருமில்லாதிருப்பதைக்கண்டு, தன் முகத்தை முக்காட்டால் சற்று மறைத்துக்கொண்டு, ஹார்முஜின் சிரசை மிருதுவாக நகர்த்தி வைத்துவிட்டு அவருக்கருகாமையில் முற்றிய செந்நெற் கதிர் தலை சாய்ந்திருப்பது போலத் தலை குனிந்து மவுனமுற்று அழுதுகொண்டிருந்தாள். அவள் தனித்திருந்து அழுவதையும், அவ்வழுகையின் அரவத்தையும் பார்ப்பவரும், கேட்பவருமில்லாத தலமாயிருந்தது. விரகவேதனையின் வேடிக்கையை யென்னவென்று தான் சொல்லித் தொலைப்போம்.

"குல்" மட்டிலுமல்ல, "ஹார்முஜும்" அவ்வாறாகவே யிருந்தார். இருவரில் கண்களிலும், சந்திப்பின், ஆனந்தக் கண்ணீர் சரமாரியாய்ப் பொழிந்துக்கொண்டிருந்தது. பிரிவினையின் நேரம் நெருங்கிவிடப் போகிறதென்னுங் கவலையால் உசாரிழந்தவர்களாய் மவுனமுற்றிருந்தார்கள். அப்படிக்கிருக்கும்போது கிழத்தாதிப்பெண் அவ்வறையின் முன் வாசலில் வந்து நின்றுக்

கொண்டு, எஜமானியே, எஜமானே, இதென்ன காரணம்? மவு னப்பேய் பிடித்துக்கொண்ட மாதிரியாகக் காண்கிறதே. பொழுதுபுலரக் கொஞ்ச நேரம் தானே யிருக்கிறது. கிரகங்களின் கொடுமையையும் அநியாயத்தையும் என்னவென்றுதான் சொல்வேன். பொழுது விடிந்துவிட்டால் உங்களுடைய காரியம் பஹிரங்கத்துக்கு வந்துவிடும். இப்போது கிடைத்திருக்கிற இந்த சாவகாசமான நேரத்தைச் சிரிப்பு, விளையாட்டு கைச்சரச முதலானவைகளிற் போக்குங்கள். மூத்தோர் சொல் வார்த்தையமிர்தமென்பதுபோல், கிழவியாகிய என்னுடைய சொல்லைக்கேளுங்கள். என் சொற்படி செய்புங்கள். விதிகெட்ட நான் எவ்வளவோ வசையும் வருத்தமுமடைந்திருக்கிறேன். அதற்குப் பிரதியாக நீங்களிருவரும் கொஞ்சுவதையும், குலாவுவதையும் கண்டு களிக்க நாடுகிறேனென்று சப்தமிட்டாள்.

அச்சொற்களைக் கேட்ட "ஹுர்முஜ" சற்று உணர்ச்சிபெற்றுத்தன்னுடைய எண்ணத்தை மூடலாகக் கூறி, என்னை அழைத்து வந்த மஹாத்துமாவின் உதவியானது இப்போது தன்னுடைய நாட்டத்தை வெளிப்படையாக விளக்கிக் காட்டுகிறது.

ஆனல், விருந்தாளியைச் சங்கை செய்வது வீட்டுக்குடையவரின் கடமையாயிருக்கும். அது அவர்களுக்கொரு நற்பேராகுமென்றார். அதற்கு "குல" இளவரசி பிரியநேசரே, கெட்டவர்களென்னும் பேரெடிக்காமல் நல்லவர்களென்ற பேரெடுத்துக்கொள்ளுங்களென்ற மூத்தோரின் சொல்லைக் கவனிக்காது நாம் தான் வெகு காலமாகக் கெட்ட பேரெடுத்துக் கொண்டோமே. இதுக்கு மேலே நல்லபேர் கெட்டபேரென்பதை நாமேன் கவனிக்க வேண்டுமென்று சொல்லி தாரை தாரையாய்க் கண்ணீர் வடிய அழுதுகொண்டு, தன்னுணர்வற்றவளாயிருந்தாள். ஹுர்முஜும் ஒலமிட்டழுதார். சற்று நேரத்தின் பிறகு இருவரும் தெளிவுபெற்றார்கள். இருவரின் நாட்டமும்மின்னதுதான் என்பது வெளிப்படையாயிற்று.

இந்தப்படியான புரளிகளைக் கண்ட பெரிய வயதுப்பெண்கள் சீச்சீ என்ன வேலை? என்ன புலப்பம்? எங்கிருந்து வுங்களுக்கு வந்துற்றது? போனது போகட்டு மின்னமும் நீங்கள் அதிகப்படுத்துவீர்களேயானல் உங்களுடைய தலைகளையும், முலைகளையும், மொட்டையாக்கிவிடுவோம் பத்திரம் புலம்பாதீர்களென்று பயமுறுத்தினர்கள். இளவரசிக்கு ஈரான் அரசர் புருஷராஜு விடையில் நாமும் கொஞ்சமிணக்கிப்பார்த்துக் கொள்ளலாமென் றெண்ணிக்கொண்டிருக்கும், இளவரசியின் நெருங்கிய பெந்துக்களுள் சிலர் அவர்களை முனிந்து, உங்களுக்கென்ன கேடு, ஏன் நீங்கள் கொண்டானடிக்கும் பெண்களைத் திண்டாட்டப்படுத்துகிறீர்கள். இவ்வளவு காலமாக இந்தப்படிக்குத்தானு செய்துக்கொண்டிருந்தார்கள்? கல்யாணமென்னுஞ் சங்கதியைக் கேட்ட சந்தோஷத்தால் எங்களுக்கு மலர்ந்ததுபோல் அவர்களுக்கும் மலர்ந்திருக்கக் கூடும். உங்களுக்குத்தான் ஒன்றுமில்லை. ஒழுகவுமாட்டாது. கழுகவும் வேண்டியதில்லை யென்கிற மட்டிலாய் விட்டீர்கள். அவர்கள் பிரியப்படி நடிக்கட்டும். நீங்கள் மூலையில் முடங்கிக் கிடங்களென்று கூறினர்கள். இன்னும் பலவித வேடிக்கைகளும் நடந்தன. அவற்றை விரித்தெழுதப் புகுந்தால் விரிவாவதுடன் வாலிபர்களின் நெஞ்சங்கள் வாதனையுடையும். ஆகையாலிம்மட்டோடு நிறுத்திவிட்டோம்.

கடைசியில் எல்லாப் பெண்களும் இராஜாத்தியைக் கண்டு சோபனங் கூறுவதற்காகச் சென்றார்கள். இராஜாத்தி புன்னகையுடன் வந்தவர்களின் சிரங்களை நெஞ்சிலணைத்து ஆசிகூறி வெகு மதியளித்தனிப்பினுள். பின்பு இளவரசியைத்தங்க நாற்காலிமீதிருத்தி நலங்கிட்டு, பன்னீரால் தலை முழுக்காட்டினர்கள். அங்கு நடக்கும் கலிபிலிகளைக் கண்ட இளவரசி ஆச்சரியமுற்று முகப்பேதலிப்புக் கொண்டு ஆலோசித்து விளங்கியறிந்து, கோபத்துடன் அங்கு நின்றவர்களை யேறிட்டுப் பார்த்தாள். இரண்டொருவரின் முகத்திலிரண்டொன்று கொடுத்தாள். வெட்கத்துக்கும் சுரணைக்கும் விடை கொடுத்து விரட்டினுள். இதென்ன

அமளி துமளி? இந்த மகிழ்ச்சியில் நெருப்பிட்டுக் கொளுத்துகி றேன். இதென்ன வேடிக்கை? பலே ஷபாஷ். என் தாயார் வேண்டுமென்றே சஞ்சலத்தைத் தேடிக்கொண்டார்கள். கன்னி கழியாத பெண்கள் பேரில் தாய் தந்தையரின் அதிகாரம் செல்வ தாயிருந்த போதிலும் என் தந்தையின் உதிரத்தின் பேரில் சத்தி யமாக விதோ என்னுயிரை மாய்த்துக்கொள்ளுகிறேன். கை தப்பிப் போனது கனவிலுங் கிடைக்கமாட்டாது. அல்லவென்று லிதைவிட்டு அப்புறப்பட்டுவிடுகிறேன். அப்போது யாரைப் பிள்ளையாகப் பாவித்துக் கலியாண நடத்துகிறார்களென்பதைக் கண்டறிவோம். என்று வுரத்த சப்தத்துடன் கூறி ஓலமிட்டழுது கொண்டிருந்தாள்.

இதைக்கண்ட தாதிப்பெண்கள் கலங்கி, பிடரியிற் காலடி படவோடி இராஜாத்தியின் சமுகத்துற்று நின்று, எங்களிரா ஜாத்தியே, யுகமுடிவின் அடையாளமாகவும், அபாயகரத்தின் நெருக்கமாகவுமிருக்கிறது. நம்முடைய இளவரசிக்கு, சித்தப் பிரமை யுண்டாகிவிட்டது. அவளின் புலப்பத்தையும், செய்கை யையும் எடுத்துக் கூற எங்களுக்குச் சக்தியில்லை. ஐயோ பரி தாபமே யென்று அபயமிட்டழுதார்கள்.

அதைக்கேட்ட இராஜாத்தியும் திடுக்குற்றுப் பதறி, வெடுக் கென்றெழுந்து, நடுக்கத்துடன் படுகையிற் கிடக்கு மிளவரசி யிடத்து வந்து ஆ, என் அருமைமகளே, நீ ஏன் பிதற்றுகின் றாய்? அடீ புத்தியும், விதியுங் கெட்டவளே, பெற்றாரின் அச் சம் உனக்குக் கொஞ்சமேனுமில்லையா? இதோ வுன்னுடைய இளம் பருவத்தை யெண்ணிப்பார். என்னுடைய சொல்லைக் கவனி. நலவைச் சொல்வேனே தவிர, கெடுதியைக் கூறமாட் டேன். உன்னுடைய ரீதியைப் பார்த்தால் யுக முடியப் போகிற தென்று சொல்லலாமேயன்றி வேறெதைச் சொல்லுகிறது. அடீ வெட்கங் கெட்டவளே, விசுவாசத்தில் வெட்கமிருக்கிறதென்ப தை நீ கேட்டதில்லையா? வெறுமனே, நீயே உன்னைத்துன்பத்தில் படியவிடாதே யென்று, பலவாறு நயந்தும் பயந்துங் கூறினள்.

தாயாரின் வார்த்தைகளைக் காது தாழ்த்திக் கேட்டுக் கொண்டிருந்த இளவரசி, அம்மா தாயே, தாங்கள் கூறியவையடங்கலும் உண்மையானவைகளே. தங்களின் சொற்போல் நான் புத்தி கெட்டவள் தான். அப்படிப்பட்டவளிடத்தில் உங்களுக்கென்ன வேலையிருக்கிறது. இங்கிருந்து நீங்கள் நேராக வுங்களிடங்களுக்கு மீளுங்கள். என்னுடைய ஆத்மாவின் பேரில் சத்தியமாக, என் வாணாளைக் கைவிட்டவளாக வுட்கார்ந்திருக்கிறேன். நீங்கள் எனக்குச் செய்யும் எவ்வித வுபதேசமும் பலன் பெறமாட்டாது. உங்களுக்கென்ன பயித்தியமா? என்னைத் தொந்தரவு செய்ய வேண்டாம். எழுந்து போங்களென்று கடிந்து கூறினாள்.

“ இராஜாத்தி ” இளவரசியின் கோலத்தையும், இதங்கெட்ட வார்த்தைகளையும், பார்த்துங் கேட்டும், மனக் கலக்கமுற்று யாதொன்றுந் தோன்றாதவளாகி, சூஜான் அரசருக்குச் செய்தியனுப்பினாள். அவரும அதைக் கேட்டவுடனே கோபாவேசங் கொண்டு சப்தமிட்டெழுந்து, விரலைக் கறித்தவராக இளவரசியின் சமுகத்தில் வந்து, அவளைக் கட்டியணைத்து நெற்றியை முகந்து தலையைத்தடவி, அருகிலுட்கார்ந்து, மகளே, நீ மஹா புத்தி கூர்மையுடையவளானதால் நான் அதிகமாகச் சொல்ல வேண்டியதில்லை, தந்தையின் செந்நிறமான முகத்தைக் கரு நிறமாக்காதிருப்பது வுனக்குக் கடமையென்று நளினமாகக் கூறினார்.

குல் இளவரசி, என் அருமந்தப் பிதாவே, என்னால் வுற்படும் மரியாதைக் குறைவை மன்னிப்பீர்களாக. பரபுருஷரின் சந்திப்பு எனக்குப் பெரிய வெட்கக்கேடாகத் தெரிகிறது. அதனால் கல்யாணமென்னும் வார்த்தை யென் செவியில் நச்சுப்பாணம் போன்றிருக்கிறது. தங்களின் கட்டளைக்கு மாறு செய்தவளுமாகிறேன். எது எவ்வாறயினும் ஆகட்டும். என்னுடைய விதியை நானே அனுபவிக்கிறேன். தங்களுடைய சிரசின் பேரிற் சத்தியமாக எனக்குக் கல்யாணத்தில் பொருத்தமேயில்லையென்றாள்.

இதைக் கேட்ட அரசருக்குக் கடின கோபம் மூண்டது. கோபத்தால் கண்கள் செவந்தன. சரீரம் நீலம் பூத்தது. சற்று நேரம் ஒன்றும் பேசாதிருந்து பின்பு, இளவரசியைப் பார்த்து அடி வெட்கங் கெட்டவளே, நீ என்ன இவ்வுலகத்துப் பெண்களை யெல்லாம்விட அதிக வெட்கமுடையவளா? என் முன்னால் கூச்சமின்றிப் பேசுகிற நீதானா வெட்கமுடையவள்? என்னைப்பிடித்த புருஷர்களை வெட்கத்தின் மிகைப்பால் கைதட்டிவிடக் கூடாதவளா யிணங்கிப் போகிறேனென்ற வேசைக்குச் சமதியா யிருக்கிறாய். அடி விதி கெட்டவளே, உன்னுடைய மேற்பதவியைக் கவனித்துப்பார். ஈரான் அரசர் போன்ற புருஷர், எல்லாருக்குமா கிடைப்பர்? உன்னுடைய நல்லவிதியாக்கும் அவர் உன்னை மணக்க நாடினார். உன்னுடைய கெட்ட விதி உன்னை அலக்கழித்து நிற்கிறது. நீ அதற்கிடங்கொடாமல் உசாருடனிருப்பாயாக, வென்றார்.

குல் இளவரசி, தந்தையே, தாங்கள் கோபத்தின் கடூரத்தால் பேசுகிறீர்கள். இன்னும் எவ்வளவு பேசினாலும் நான் கேட்டுக் கொள்ளுவேன். செத்திறந்து போனாலும், செய்யத்தகாத கொடுமைகளைச் செய்தாலும், அந்தக் கல்யாணத்திற்கு மட்டில் நான் பொருந்தமாட்டேனென்று பிடிவாதமாகக் கூறினாள்,

இளவரசியின் வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருந்த அரசர் தன் புத்திரிபேரில் வெறுப்புற்று, அவளைப் பார்த்து எடி கெட்டவளே. இராஜாக்களின் சினம் இவ்வாறென்பதை நீ அறிந்திலை போலும், என்னையும் நீ இன்னானென்றறியவில்லை. கடவுள்பேரிற் சத்தியமாக உன்னைக் கட்டிப்போட்டு மச்சத்தை யறுப்பதுபோல் இதோ அறுத்தெறிகிறேன் பாரென்றார்.

அதற்கிளவரசி, அரசரைப்பார்த்து, என் பிதாவே! தந்தையின் கையால் கொல்லப்பட்டவர்களின் பாக்கியமே பாக்கியம்

இகபரத்தில் ஈடேற்றமும்புகழும் அப்பிள்ளைக்கேயாகும். அடிமை சொந்தமாயிருக்கிறாள். ஆனமட்டில் வேலைவாங்கிக் கொள்ள லாம், என்பது வுலகவழக்கு. தங்களுக்கே என்னைக் கொல்லப் பிரியமிருந்தால், எனக்கு மெத்தப் பிரியமென்றாள்.

அதற் கரசர், அடீ விதி கெட்டவளே, ஈரான் அரசரின் படை நம் தேசத்தில் அடர்ந் தேறிவிடும். யுத்தம் மேலிடும். அம்பு மாரி பொழியும். இரத்தப்பெருக்குண்டாகும். இலக்ஷக் கணக்கான வுயிர்ச்சேதமுண்டாகும். அப்போது நானும் உன் மாதாவும் கொல்லப்படாதிருந்தால் உன்னைப் புத்திரியாகப் பெறு வதற்கு ஒன்றேடொன்று மோதவிடப்பட்ட எங்களுடைய சுக் கில சுரோணிதத்தைப் பிரயோஜனமற்றதாக நினைத்துப் பிரலா பிக்காதிரோம். வெட்கத்தால் உக்கி யிறந்து போவோமே யென் றார். இளவரசி என் அருமந்தப்பிதாவே, தன்னுயிரைவிட மற்ற வுயிரைப் பெரிதாகக் காண்பவர் யாரு மிருப்பார்களா? இல்லை, யில்லை. அப்படிக்கிருக்க என்னுடைய உயிரைப் போக்க நானே இடைக்கட்டி நிற்கும்போது யார் செத்தாலும் எந்த வூர் பாழ டைந்தாலும், எந்தவூர் சீர்திருத்த மடைந்தாலும் எனக்கென்ன விருக்கிறது? நம்முடைய பிரியம் சிங்காரவனத்தின்மீது செல்லா திருக்கும் போது, வேனிற் காலத்தையும், வசந்த காலத்தையும் எதுக்காக கவனிக்க வேண்டுமென்றாள்.

கூஜான் அரசர், இளவரசியின் வார்த்தைகளைக் கேட்டு, தன் னுணர்வற்று, சுவரிலெதிய சித்திரம் போன்றிருந்து பின்பு, கைசேதப்பட்டவராக வுதட்டை யுசுப்பி யேதேதோ புலம்பிக் கொண்டு, சபாமண்டபத்துக்கு வந்தார். கோபத்தால் கண்கள் சிவந்தன. துக்கசாகரத் தாழ்ந்தவராக வுட்கார்ந் திருந்தார். அதைக்கண்ட மந்திரி பிரதானிகள் திகில்கொண்டு எங்கள் நாய கமே, தாங்களேன் இவ்வாறிருக்கின்றீர்கள். இயம்புங்களென் றார்கள். அரசர், இரண்டுமணித் தேசகாலம் வாய்திறந்து பேசு மாட்டாதவராகி சித்திரம்போன்றிருந்தார்.

பின்பு அரசர், மந்திரிமார்களைப் பார்த்து, என் புத்திரியாகிய குல் இளவரசி ஈரான் அரசருக்கு வாழ்க்கைப்பட மாட்டேனென்று பிடிவாதம் பண்ணுகிறாள். தன்னைத்தானே துன்பத்தில் சிறைப்படுத்திக் கொண்டிருக்கிறாள். இதற்கென்ன செய்வேன்? ஈரான் அரசருக்கு என்ன மறுமொழியனுப்புவேன். அவருடைய விரோதம் நமக்கு பெரிய அபாயத்தை விளைவிக்காதிராதே. இவளை யிணக்குவது மியலாத விஷயமா யிருக்கிறதே. இரண்டுக்கு மிடையில் நான் அகப்பட்டுக் கொண்டு அவதிப்பட நேரிட்டிருக்கிறது. என்னுடைய மனம் அந்தரத்தாமரை போன்றலைந்துக் கொண்டிருக்கிறது. கடவுளுக்காக நீங்கள் தகுந்த யோஜனை யெடுத்து என்னைக் காப்பாற்றுங்களென்றார்.

மந்திரிமார்கள், வெகுநேரம் வரையில் ஆலோசித்து அரசரே, நாம்தான் என்ன செய்யலாம்? உண்மைக்கு அழிவில்லையாகையால் இளவரசியின் பிடிவாதத்தையெழுதித் தெரிவிப்போம், வருவது வரட்டும். போர்முஸ்தீப்புஞ்செய்வோம். நம்முடைய கடிதத்தை ஈரான் அரசர் பார்த்தவுடனே அவர் படை யெடுத்து வருவார். அப்போது பார்த்துக்கொள்ளலாமென்றார்கள்.

"அரசர்" மந்திரிமார்களே, நம்முடைய இந்தக் கொஞ்சப் படைகளைக்கொண்டு அவருடன் ஈடுகொடுக்க முடியாதே, என்ன செய்கிறதென்றார். மந்திரிமார்கள், எஜமானே, இச்சமயம் கவனிக்கக்கூடிய காலமல்ல. காரியம் கடப்பாகிவிட்டது. மனதைத் திடப்படுத்துங்கள். கடவுளின் உதவியைத் தேடுங்கள். நம்மாலான வரையில் ஈடுகொடுத்துப்பார்ப்போம். எத்தனையோ சமயங்களில், குறைந்த படைவீரர்கள் தந்திரத்தால் அதிகம் பேரை ஜெயித்திருக்கிறார்கள். கெலிப்பும் தோல்வியும் கடவுளின் நாட்டப்படிக்கே நடைபெறுமென்றார்கள். அரசர் ஆலோசனையால் மோவாய் மயிரை நீவிக்கொண்டிருந்தார். சுத்த வீரத்தின் காங்கை அவருடைய மண்டைக்கேறியது. உடனே மனத்திடங்கொண்டவராகி, ஈரான் அரசருக்குக் கடிதமெழுதியனுப்பினார்.

## வாசகமாவது.

ஈரான் சக்கிரவர்த்தியே, தங்களுடைய நிரூபம் பெற்றேன். அடங்கா மகிழ்ச்சி கொண்டேன. ஒருவருடக் கெடுக்குறித்திருந்தேன் அதை நிறைவேற்றுவிக்க நாட்டமுடையவனாகவே யிருக்கிறேன். நாமென்ன செய்வேன்? தங்களின் அடியாளாகிய குல் என்பாள் நயநட்ட மின்னதென்பதை அறியாதவளாகவும் புத்தி கெட்டவளாகவு மிருக்கிறாள். நானும் என்னைச்சேர்ந்தவர்களும் எவ்வளவாகப் போதித்தாலு மிணங்கிறாளில்லை. அவளை அடித்துவதைத்து இறுகக்கட்டி தங்கள் சமுகத்துக் கனுப்பி விடலாமென்றால் பெரிய இழிவாகு மல்லவா? தாங்களே கவனித்துப்பாருங்கள். அன்றியும் கடவுளின் கட்டளைக்கும், தீர்க்கதரிசியின் உபதேசத்துக்கும் விரோதஞ் செய்தவன் ஆகிறதையும் பயப்படுகிறேன். ஆகையால் உள்ளபடிக்குத் தெரிவித்துவிட்டேன். அதுக்குமேல் தங்களுடைய இஷ்டம் என்பதே.

பின்பு கூஜான் அரசர் கொலுவீற்றிருந்துக்கொண்டு, படைகளைத்தயாராக்கும் படிக்கும் அதற்கான செலவுகளைப் பொக்கசத்திலிருந்து செலவிடும் படிக்கும் கூஜான் தேச எல்லைச்சராகத்தில், கோட்டைகள் கட்டி பலப்படுத்தும் படிக்கும், எதிரிகளை பலமாய்த்தடுத்து நிற்கும்படிக்கும் கட்டளை யிட்டார்.

——:(*):——

## 7-ம் அதிகாரம்.

### (கூஜான் ஈரான் யுத்தாரம்பம்.)

——:⁖:⁖:——

கூஜான் அரசர் யுத்தத்துக்கான ஆடம்பரத்துடனிருக்கிறார். படைவீரர்களுக்குள்ளே இதோ பார் என்னுடைய வீரத்தை வெளிப்படுத்துகிறேனென்றும், இதோ என்னுடைய வாட்படைக்கு ஈரானிகளின் இரத்தத்தைக்குடிப்பாட்டுகிறேனென்றும் நான் பெரிய சுத்த வீரனாகையால் படைக்களத்தில் முன் வைத்த

காலைப் பின் வாங்கமாட்டேனென்றும், ஒருவருக்கொருவர் சபத ங்கூறத்தொடுத்தார்கள். சிலருடைய மீசைகள் கிமிர்ந்து நின் றன. சிலருடைய சரீரங்கள் கோபத்தால் துடித்துக்கொண்டி ருந்தன. சிலர் வாளாயுதத்தின் கூரைப் பார்த்து வரட்டும் பார் ப்போமென்றார்கள். சிலா தங்களின் புயங்களை முத்தமிட்டார் கள். சிலர் புயங்களைத் தட்டினார்கள். சிலர் சகோதரர்களே, நாம் தேடிக்கொண்டிருந்த நாள் நெருங்கிவிட்டதென்றார்கள். சிலர் காலமெல்லாம், இத்தேசத்தில் கூராயுதங்களே, உபயோகிக் கப்பட்டு வந்தன. இதோ பாருங்கள் குண்டாயுதத்தை விட்டு மண்டைகளைச் சிதறவடிக்கிறேனென்றார்கள். இன்னும் பலவித வீரவார்த்தைகளாடினார்கள்.

அப்படியிருக்க கூஜான் அரசர் படைப் பெயர்ச்சியின் கால த்தைக் குறித்து விளம்பரப்படுத்தினார். மந்திரி, பிரதானி, தள வாய் முதலானவர்கள், ஆயுததாரிகளாக அரசரின் சமுகத்தடை ந்தாரகள். கூஜான் அரசரும், விலையுயர்ந்த வுடையணிந்து வேல் வால் முதலிய ஆயுதங்களுடன் வந்து சேர்ந்தார். பயண வெடி தீர்க்கப்பட்டது.

முன்னிலையில் உயர்தர வுத்தியோ கஸ்தர்களும் பின்னால், ஆயிரக்கணக்கான வீரர்களும் நடுவில் அரசரும், அவரின் மெய் க்காப்பாளர்களும் புடைசூழ அணியணியாக எழுந்து நடந் தார்கள. இலக்ஷகணக்கான குதிரைவீரர்கள் யானைவீரர்கள், ரதாரூடர்கள், காலாட்கள், புடைசூழப் படையெழுந்து செல்வது வெகு ஆரவாரமாக விருந்தது. சதுர்வகைப் போர்வீரர்களும் சந்தோஷத்துடன் ஆனந்தப் பாட்டுப்பாடிக்கொண்டு முன்னேறி னார்கள், வாத்தியகோஷ்டம் மலிந்திருந்தது. இந்தப்படி நட ந்து கூஜான் எல்லைச்சராகத்தில் வந்து, படாம் வீடுகளமைத்துத் தாணயமிறங்கி, பகைவர்களாகிய ஈரான் அரசரின் படை வரு வதை யெதிர்பார்ததிருந்தார்கள்.

இங்கே கூஜான் அரசரைக் கும்மாளமடிக்க விட்டு விட்டு ஈரான அரசர் என்ன செய்கிறாரென்பதைப் போய்ப்பார்ப்போம்.

கூஜான் அரசர் அனுப்பிய கடிதத்தைத் தூதுவன் கொண்டு சென்று ஈரான் அரசரிடத்துக் கொடுத்தான். அவர் அக்கடிதத்தை வாங்கிக் கண்ணிலொத்தி, முகந்து, "குல்" இளவரசியின் சந்திப்புக் கிடைக்குமென்னும் சந்தோஷத்தால் அகமலர்ந்து, அந்நிருபத்தைப் பிரித்து வாசித்துப் பெருங் கவலைக் கடலுள் ஆழ்ந்து, தாடியைப் பிய்த்துக் கொண்டார். தலையிலடித்துக் கொண்டார். சிம்மாதனத்திலிருந்து கீழே விழுந்து புரண்டார். தன்னுணர்வற்றவராகிப் பலவாறு புலம்பினர். என் மந்திரி பிரதானிகளே இதோ பாருங்கள்; இத்தனை அருமையான மருமகனுக்கு இந்தப்படி செய்து விட்டாரேயென்று சப்தமிட்டலறி உணர்வற்றுக் கிடந்தார்.

மந்திரிமார்கள், அவரைப் பூமியிலிருந்து தூக்கி உட்கார்த்தினர்கள். சிலர் முகத்திற் பன்னீரைத் தெளித்தார்கள். உசாருண்டாயிற்று. அப்போது ஈரானரசர், சனங்களே, கூஜான் அரசர் செய்த வேலையைப் பார்த்தீர்களா? எனக்குத்தானா இந்தப்படி செய்ய வேண்டும், குல் இளவரசி ஒன்றுமறியாச் சிறுமி. அவளா? இந்தப்படிக்கு மாட்டேனென்று பிடிவாதம் பண்ணுவாள். இவையடங்கலும் கூஜான் அரசனாகிய கிழவனுடைய குபாட வார்த்தைகளேயன்றி வேறல்ல. ஜனங்களே, கடவுள் பேரிற் சத்தியமாகவும் அவருக்காகவும், கொஞ்சம் நச்சுப்பானக்கங் கொண்டு வாருங்கள், அதைக் குடித்தாவது என்னுடைய கவலையைப் போக்கிக் கொள்ளுகிறேனென்று கரைந்து கரைந்து ஓலமிட்டழுதார்.

மந்திரிமார்கள் அவரைப் பார்த்து, எஜமானே, இதென்ன காலக்கொடுமை? தாங்கள் என்னத்திற்காக இவ்வளவுதூரம் விசனப்படுகிறீர்கள், அக்கிழட்டரசன் சீவித்திருக்கப் பெறுவா

னென்று நினைக்கிறீர்கள்? அவனுடன் சண்டை கொடுக்க அதிகம் பேர் வேண்டியதுமில்லை. இதோ நாங்கள் போய் ஒரு நிமிடத்துக்குள் அவனுடைய படைகளை யழித்து இளவரசியைத் தங்கள் சமுகத்தில் கொண்டு வந்து நிறுத்துகிறோம். இதென்ன எங்களுக்குப் பெரிய காரியமா? என்று தேறுதல் கூறினார்கள். அரசரிதைக் கேட்டவுடனே நெருப்பு மயமான சினமுடையவராகி, காலத்தைக் கவனிக்கவுமில்லை. கணித சாஸ்திரிகளை ஊசாடவுமில்லை. அங்கிருந்தபடிக்கே சகல பரிவாரங்களும் புடைசூழ எழுந்து ஈரான் எல்லைச் சராகத்துக்கு வந்து சேர்ந்தார்.

(கடவுளின் கோபம் கடப்பாயிற்று. காலக்கிரகத்தின் காக்ஷியைப் பார்ப்போம்.)

——(:)——

## 8-ம் அதிகாரம்.

## யுத்தம்.

—(*)—

கூஜான் தேச எல்லைச் சராகத்தில் தயாராயிருந்த படைவீரர்கள் ஈரான் அரசரின் படை வருவதைக் கண்டவுடனே ஆயுத சன்னத்தராகி, அணி வகுத்து நின்றார்கள். முரசடிக்கப்பட்டது. இரு வகுப்பாரின் படைகளும் கடற்போல் அமளிதுமளியாக ஆர்ப்பரித்து நின்றன. கட்டியக்காரர் கட்டியங் கூறினார்கள். படைவீரர்கள், வாலிபச்சிம்மங்காள், இன்று பேராட்டத்தில் பொழுதுபோக்கவேண்டி வந்துவிட்டது. நாம் சுத்தவீரர்களென்பதை யிப்போது தான் ஸ்திரப்படுத்த வேண்டுமென்றும் பேர் பெற்ற மஹா சுத்த வீரர்களாகிய, றுஸ்தம், ஸாம், முதலானவர்களெங்கே, இச்சமைய மல்லவோ அவர்கள் எங்களுக் கெதி

ரே வரவேண்டும். அவர்களின் சுத்த வீரத்தை யில்லாமையாக்கி எங்களுடைய புயவலியை இலங்கச் செய்வோமென்றும் சபதங் கூறத்தொடுத்தார்கள்.

முற்காலத்தின் வழக்கமானது ஆரம்பத்திலொருவருக்கொருவர் யுத்தந் தொடுத்து நடத்திக்கடைசியில் இரு வகுப்பினரும் ஒன்று சேர்ந்து போராடுகிறதாயிருந்தது. அதுபோலிருவகைப்போர்வீரர்களும் யுத்தத்திற்காக அணிவகுத்து முடிந்தவுடனே ஈரான படைவீரர்களில் நின்றும் ஒரு வீரன் சரிகை வேலை செய்த விலையுயர்ந்த பட்டுடையுடுத்து, பிரகாசம் பொருந்திய வாளாயுதத்தை கையிற் பிடித்தவனுகப் படைக்களத்தின் நடுவில் வந்து நின்றுக்கொண்டு, உரத்தசப்தமிட்டு, கூஜானிகளே, இதோ முன்னேறி வந்து நிற்கும் வேங்கையுடன் போராடப் பிரியமுள்ளவர்கள் வரலாமென்றும், வெட்டுப்பட்டு நரகலோகங் குடிபோக மனதுள்ளவர்கள் முன்னேறலாமென்றும், கதறினன்.

கூஜான் யுத்த வீரனொருவன் வந்து அவனுடன் எதிர்த்தான். அவனை ஈரான் வீரன் ஒரே வீச்சில் இரண்டாகப் பிளந்தெறிந்தான். இரண்டாவதாக ஒருவன் வந்தான். அவனையும் வெட்டி யெறிந்தான். இந்தப்படி பதினைந்து கூஜான் சுத்த வீரர்களை அந்த ஈரான் வீரன் தன் வாட்படைக்கிரையாக்கி வீழ்த்தி இரத்தத்தில் புரளச் செய்தான். அப்படியிருக்கும்போது கூஜான் அரசரின் மெய்க்காப்பாளருள் ஒரு பலத்த வீரன் உக்ர கோபத்துடன், பதினைந்து வீரர்களை மடித்த படுபாதகனை யிதோ ஒரு நொடியில் என் கைவாளுக்கிரையாக்கி, அவனின் உயிரை நரகலோகங் குடி புகுத்தி வைக்கிறேனென்று சபதங் கூறிக்கொண்டு வந்து அவனுடனெதிர்த்தான்.

அவ்விருவரும் வாளாற் சிலநேரம், அம்பாற் சிலநேரம், அம்பராடி ஒருவரோடொருவர் பின் வாங்காது நிற்கும்போது கூஜான் வீரனை, ஈரான் வீரன் பிடித்துத் தூக்கிப் பூமியிலடிப்ப

தற்காக வுயத்தினுன். கூஜான் வீரன் தந்திரமாகத் தன்னிடை யிற் சொருவியிருந்த குற்றுடைவாளை யுருவி ஈரானியின் சிரசில் குத்தினுன். அக்குத்து மூளையில் தாவி கண்டத்தில் புறப்படவே, உயிரிழந்து மண்மேற் சாய்ந்தான். இரண்டாவதொரு ஈரானிவந்தான். அவனையும் அவனுடன் கிடப்பாட்டினுன். கடைசியில் ஈரான் வீரனொருவன் வந்து அவனுடன் போராடி, தன் வாட்படைக்கு கூஜானியினிரத்தத்தைக் குடிப்பாட்டினுன். பொழுதடைந்து விட்டது. இருவகைப் படைவீரரும் தத்தம் கூடாரங்களுக் குள்ளானுர்கள். அன்றையதினம் நடந்த யுத்தத்தில் கூஜான் வீரர்களில் பதின்மரும், ஈரான் சூரர்களிலிருவரும் மடிந்தார்கள்.

மறுநாள் யுத்தம் ஆரம்பிக்கப்பட்டது. ஆயிரக் கணக்கான கூஜான் வீரர்கள் மடிந்து, எடுத்துப் புதைப்பாரின்றி இரத்தத்தில் ஆழ்ந்து கிடந்தார்கள். ஈரான் வீரர்கள் ஒவ்வொருநாளும் வெற்றி பெற்றவர்களாகவே யிருந்தார்கள். இந்தப்படி ஒரு மாதம் வரையில் யுத்தம் நடந்தது. கூஜான் அரசரின் படை குறைந்து பலமற்றுப் போயிற்று. அதனுல் "கூஜான் அரசர்" திகில் கொண்டு மந்திரிமார்களையழைத்து இப்போது நீங்கள் என்ன யோசிக்கிறீர்கள்? சகோதரர்களே, எது எவ்வாருயினும் ஆகட்டும். எனக்கு எவ்விதமான தைரியமுமில்லை யாதையாலி தோ நான் எங்கேனும் ஓடிப்போய் விடுகிறேனென்று ஓலமிட்டழுதார். அதைக்கண்ட மந்திரிமார்கள் வணக்கத்துடன் கைகட்டி நின்று, எஜமானே, தாங்கள் கூறியபடி நாம் உயிர் தப்பிப்பிழைக்கும் விஷயத்தில் ஓடிப்போவதே உத்தமம். இந்த கஷ்டத்தில் நின்றும் நாம் காக்கப்பட்டோமேயானு லிரண்டாவதாக வுயிர்த்தெழுந்தவர்களாவோம். ஆனுல் நம் வீரர்களில் சிலர் கையிழைத்தவர்களாகவும். குற்றுயிருடையவர்களாகவு மிருக்கிறுர்கள். அவர்களை நாம் காப்பாற்ற வழிதேட வேண்டும். அதற்காகவே தாங்களின்று மட்டில் தைரியத்துடனிருக்க வேண்டும் என்றுர்கள்.

கூஜான் அரசர், மந்திரிமார்களே, என்பரிசுத்த ஆத்மாவின் பேரில் சத்தியமாக ஒன்றையும் கவனிக்கமாட்டேன். ஒருவருடைய சொல்லையும் காது தாழ்த்திக் கேட்கமாட்டேன். எந்தவிதத்திலு மின்றிரவு கட்டாயம கம்பி காட்டி விடுவேன். ஜீவித்திருந்தால் பின்னுல் யுத்தஞ் செய்துக் கொள்ளுகிறேன். மனசார இச்சமையம் என் உயிரை யிழக்கப்பொருந்தேனென்ருர். அதைக்கேட்ட மந்திரிமார்கள் ஒன்றும் பேச வாயெழாதவர்களாகி, ஒர்மித்து, முழங்காலிற் படிந்துட்கார்ந்து, ஆ, சர்வ ஜீவரக்ஷகக் கடவுளே, துக்கசாகரத்தாழ்ந்து கிடக்கும் எங்களைக் கரையேற்றவும்மையல்லாது வேறு யாரிருக்கின்ருர்கள். ஆ, கடவுளே, எங்களுடைய அரசர் ஒளித்தோடப் போகிருர். எங்களால் சஹிக்க முடியாத இழிவை யெங்கள் தலைகளில் சுமத்தப் போகிருர். இதற்கு நாங்கள் என்ன செய்யவல்லோம். நீரே எங்களைக் காப்பாற்றி வெற்றியை உபகரிக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டிருந்தார்கள்.

இங்கே இந்தப்படியான குழப்பமாயிருக்கிறது. அங்கே ஹுர்முஜ் என்ன செய்கிருரென்பதை எட்டிப் பார்ப்போம்.

—(*)—

## 9-ம், அதிகாரம்,

## ஹுர்மூஜ் விடைபெறல்,

"ஈரான்" அரசர் இரண்டாமுறை அனுப்பியமணவோலை, வந்ததையும் அதனுல் அந்தப்புரத்துள் உண்டுபட்டிருக்கிற அமளிதுமளிகளையும், அந்தப்புர ஸ்திரீகளின் சிங்காரிப்புகளையும் ஊர்ப்புறத்தில் படாம் வீடுகளமைத்துப் பிரகாசித்துக் கொண்

டிருப்பதையும், அப்பிரகாசத்தால் சந்திரன் ஒளி மழுங்கிப் போயிருப்பதையும், உத்தியோகஸ்தர்கள் ஊர்த்தலைவர்களடங்கலும் இணை பிரியாது வந்து போய்க்கொண்டிருப்பதையும், மற்றச் சிங்காரங்களையும், ஹாருன் பார்த்து அடிவயிற்றி லிடிவிழுந்தவர் போன்று மனக்கலக்கத்துடன் அன்று பகற் பொழுதைப் போக்கி, இரவானவுடனே வழக்கப்பிரகாரம், பிடரியிற் காலடிபட வோடி வந்து, குல் இளவரசியின் சமுகத்தில் நின்று ஓலமிட்டழுதார்.

இளவரசி, ஹாருனைப் பார்த்து, என் பிரிய நேசரே, இந்தவிதமான அழுகையை வருத்தியவர் யாவர்? யாரேனும் பேசக் கூடாத பேச்சுக்களைப் பேசிவிட்டார்களோ? சீக்கிரம் சொல்ல வேண்டுகிறேனென்றாள். அதற்கு ஹாருன், என் கண் குளிர்ந்த வாழ்வே, என்னுடைய இந்த அழுகையைப்பற்றிக் கவனிப்பதில் என்னவிருக்கிறது? தாங்கள் ஈரானுக்குப் போய் விட்ட பிறகு எனக்குண்டாகவிருக்கிற ஓயா அழுகையை யல்லவோ கவனிக்க வேண்டும். இரவுபக லிடைவிடாது துக்கக் கடலுள் முக்குளியிட்டுத் துன்பப்படச் செய்யவிருக்கிற, என்னுடைய கிரகசாரத்தை என்னவாக மதிப்பேன். எதைச் சொல்லவாயெடுத்தாலும், என் மனநிறைந்த சஞ்சலம் வாய்திறக்கவிடாமல் என்னை வாதனைப்படுத்துகிறதே. தங்களின் பிரிவினையானது, என் உயிரைப் பிரிப்பதாகவே வந்து லபிக்குமல்லாது ஜீவித்திருக்க விடாதென்பதை ஸ்திரமாகச் சொல்ல மாட்டுவேன் என்று கண்ணீர் வடித்து நின்றார்.

அதைக் கண்ட இளவரசி, புன்னகை கொண்டவளாக, ஹாருனைப் பார்த்து, ஆ, என் பிரிய நேசரே, இவ்வித எண்ணந்தானுக்கும் தங்களை இக்கோலத்திலாக்கிவிட்டது போலிருக்கிறது. அவ்வெண்ணத்தை அடியோடு நீக்கி யெறிந்து பிதற்றுதற வேண்டுகிறேன். என் தாயாருக்கும் எனக்கு மிடையில் உண்டுபட்ட வார்த்தைகளையும், என் தந்தையருக்கு நான் செய்த விரோதத்தையும் தாங்கள் கேள்விப்படவில்லை போலும்,

இத்தனை விரோதமும் போராட்டமும் உண்டுபடுத்த எனக்கென்ன விதியா? தங்களுக்காகவே இவ்வளவுதூரம் நான் பிணக்கமுற்றிருப்பதைத் தாங்கள் ஏன் அறியாதவர்களானீர்களென்று வியப்புற்றுக் கூறினாள்.

அதற்கு "ஹார்முஜ்" ஆம் நான் அறிவேன். என்றாலும் பெண்பிள்ளைகளின் பேச்சை நம்பக் கூடாதென்றும் நம்பிக்கையற்றதென்றும் முன்னோர்கள் கூறியிருக்கிறபடியால், அச்சொல்லே என்னை அலக்கழித்து நிற்கிறதென்றார். குல் இளவரசி, ஆண்பிள்ளைகள் கேள்விப்பட்டவைகளை நிலவரமாக நினைத்து மயங்குவார்களென்பதும் முன்னோர் கூற்றாகவே யிருக்கிறது. பெண் பிள்ளையென்றால் எல்லாரும் பெண் பிள்ளைதானா? ஹார்முஜென்றால் எல்லாரும் அவரைப்போல் ஆவார்களா? கடவுள் ஐந்து விரலையும் ஒரேவிதமாகவா படைத்திருக்கிறார்? என் பிரிய நேசரே, என்னுடைய வுறுதிவாக்கு அச்சில் வார்க்கப்பட்ட சங்கிலிக்கரணைபோன்றதாகும். ஆயிரம் அடி பட்டாலும் அணுத்துணையும் பிரியமாட்டாது. அப்படிபட்டதாயிருக்கத் தங்களுக் கிப்படிப்பட்ட எண்ணம் எங்கிருந்து வந்தது? என் மனதில் தரிபட்டுப்போன எண்ணம் ஒருக்காலும் பிரிவுபடமாட்டாது. பிரிய நேசர்கள் சேர்ந்து விட்டுப் பிரிந்ததாக நான் கேள்விப்பட்டதுமில்லை யென்றாள்.

இதைக்கேட்ட ஹார்முஜுக்கு உண்டுபட்ட சந்தோஷத்திற்கு ஓரெல்லையில்லை. இளவரசிக்குக் கோடிக்கணக்கான கும்பிடு போட்டார். கடவுளுக்கிலக்ஷக் கணக்கான துதி செலுத்தினார். கடைசியில் வெளியே புறப்பட்டார். கூஜான் அரசர், ஈரான் அரசருடன் யுத்தந் தொடுக்கத் தயாராயிருப்பதையும், ஈரான் அரசரின் படை வந்து விட்டதையும், யுத்தந் தொடங்கப் போகிறதையும் கேள்விப்பட்டு பெருந்திகில் கொண்டவராக இளவரசியிடத்துக்கு விரைந்து வந்து சேர்ந்தார். இளவரசியோ அவரைக் கண்டவுடனே பரிகாசமாக, வாரும் என் பிரிய நேசரே, நான் அந்த கெட்டுப்போவானுக்குப் பெண்ணாகப் பொரு

த்தமுண்டயவளா யிருந்தால் என் அருமந்தப் பிதா என்னத்திற்காக் கோட்டையைவிட்டு வெளிப்படவேண்டும். தாங்களே நன்ருய் ஆலோசித்துப் பாருங்களென்ருள்.

அதற்கு " ஹாரூர்முஜ் " ஆம் என் பிரியநேசியே " கடவுள் " தங்களை எப்போதும காப்பாராக. இப்போதுதான் என் மனம்பதப்பட்டது. என பிரியமடங்கலும் தங்களிடத்திலேயே ஆக்கப்பட்டிருக்கிறது. தங்களைப்போன்ற பிரியநேசியை நான்கண்டதுமில்லை. இருப்பதாகக் கேள்விப்பட்டதுமில்லையென்ருர். அதற்கு இளவரசி தாங்கள் கூறும் துதி தங்களுக்கே உரித்தல்லாது எனக்குரிகதல்ல. அதைப்பற்றிப் பேச இது சமயமுமல்ல. தற்போது சம்பவித்திருக்கிற அபாயத்தில்நின்றும் தப்ப நாம் வழிதேட வேண்டும். அந்த மூதேவிஅரசன் இந்த யுத்தத்தில் ஜெயமடையாதிருக்கக் கடவுள்கற்பிப்பாராக. அவன ஜெயமடைந்தால் என்பேரில் அதிக விருப்பங் கொள்ளுவான். கூஜான் தேசத்தை நிர்மூலமாக்குவான். என் பிதாவை அவமானப்படுத்துவான். அப்போது தாங்களும் நானும் என்ன செய்ய வல்லமை பெறுவோம். ஆகையால் அதற்கு இணக்கமான யோசனையை இப்போதே தாங்கள் ஆலோசிக்கவேண்டுமென்ருள்.

ஹாரூர்முஜ், ஆம், ஆம், இவ்விதமான எண்ணத்தினலேயே நான் கலக்கங் கொண்டவனு யிருக்கிறேன். இதைப்பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். நான் என்ன ஆலோசனை கூறப்போகிறேன். என்னுடைய புத்தி சரியா யிருந்தாலல்லவோ யோசனை பண்ணிக்கூறுவேன். தாங்கள் சகல விஷயங்களையும் ஆதியோடந்தமாய் அறிந்திருக்கிறீர்க ளாகையால் தாங்கள்தான் யோசிக்கவேண்டிய தென்ருர். இளவரசி, ஹாரூர்முஜே! கடின் வேகமுடைய இரண்டு குதிரைகளைத் தயார்ப்படுத்தி, மற்றவர்கள் போராட்டத்தில் பராக்காயிருக்குஞ் சமயம் பார்த்து நாமிருவரும் அக்குதிரைகளிலேறிச் செலுத்திச்சென்று ஒரு வசதியான வூரிற் போய்த் தங்கியிருப்போம். அப்போதுதான் இவ்வபாயத்தில் நின்றும் நாம் காக்கப்பட்டவர்க ளாவோமென்ருள்.

இந்த யோசனை ஹாரூர்முஜுக்குத் திருப்தியானதாய்க் காணப்படவில்லை. என்றாலும் இளவரசியின் தாக்ஷண்யத்திற்காகப் பிரியப்பட்டவர் போல் பாவனை காட்டி, நல்லது அப்படியே செய்வோமென்று மெதுவாகக்கூறினார். உடனே "இளவரசி" தாதியை அழைத்து. நயவசனங்கூறி, பிரயாணத்திற்கான சகல முஸ்திதுகளுஞ் செய்யும்படிக்குக் கட்டளையிட்டாள். அதுபோல் சகலமும் தயாராக்கப்பட்டன. பின்பு இளவரசி வேவுகர்களையனுப்பி, படைக்களத்தில் நடக்கும் விஷயங்களை அறிந்துகொண்டேயிருநதாள். கூஜான் வீரர்கள் படைக்களத்தில் மடிந்து கொண்டே வருகிறார்களென்பதை அவள் கேள்விப்பட்டு, மனக்கலக்கங்கொண்டு ஒருவருடனும் பேசாமல் தனக்குள்ளேயே அடக்கிக்கொண்டிருந்தாள்.

ஒருநாள், ஹாரூர்முஜ், தான் ஓடிப்போகச் சம்மதித்ததைப் பற்றி யோசித்துக் கைசேதப்பட்டு, கடவுள் மன்னிப்பாராக. நாம் என்ன மடைத்தனமான முடிவுக்கிணங்கினோம். அது பெரிய இழிவென்பதை நாம் நினைக்கவில்லையே. என்றாலல்லவா? கடவுளின் சிருஷ்டிகளாகிய இவ்வளவு ஜனங்களும் அநியாயத்தில் மடிகிறார்கள். இருவரின் மோகமல்லவா இவ்வளவு பேரையும் மடித்தது. நான் பொல்லா விதியுடையவனல்லாது போனால் ஈரான் அரசரை மணக்க, இளவரசி யிணங்கியிருப்பாள். இச்சண்டையும் உண்டாகாது. இவ்வளவு ஜனங்களையும் ஏன்? இரத்தத்தில் புரளச் செய்கிறாள். இவளும் தன் தலையில் தானே மண்ணைவாரி ஏன் போட்டுக் கொள்ளுகிறாள்? இப்படிப்பட்ட சமயத்தில் இவளை அழைத்துக்கொண்டு நான் ஓடிப்போகிறதானால் என்னுடைய ஆண்மைக்கிழிவல்லவா? மேலும், சூரியனைக் கைக்குடையால் மறைத்தால் மறைந்து போகுமா? இவளை எங்கே கொண்டோடுகிறது? எந்தவிடத்தில் ஒளித்து வைக்கிறது? இவளுடைய முகப்படம் உலகடங்கலிலும் உலாவிக் கொண்டிருக்கிறது. எல்லா அரசர்களின் எதிரிலு மிலங்கிக்கொண்டிருக்கிறது. ஒவ்வொருவரின் நெஞ்சிலும் விரகத்தீ மூண்டு கொண்

டேயிருக்கிறது. எங்கே நான் இவளைக்கொண்டு போனாலும் அங்குள்ளவர்களிலேசாகவறிந்து இவளைக் கொண்டு போய் விடுவார்கள். என்னையும் அநியாயமாகக் கொன்று போடுவார்கள். சத்தாதிகைபி னாலேனுமே யென்னுங் கவலையால் இவள் உயிரைப் போக்கிக் கொண்டால், போர்வீரர்களின் பழியையும் இவளுடைய பழியையும் சுமந்தவனாகிறேன். மன்மதனுக்கெதிரே முகங்காட்டாமல் மறைக்கவுமாகிறேன். ஆகையினாலே, எவ்விதத் தந்திரோபாயத்தாலாவது இவளிடத்தில் விடைவாங்கிக் கொண்டு, கூஜான் அரசரின் படைபிற் போய்ச் சேர்ந்து, ஈரான் வீரர்களுடன் யுத்தமாடிப் பார்க்கிறேன். இயலாத வரையில் உயிரையிழக்கிறேன். நானிறந்துபோய் விட்டாலினிமேல் என்ன செய்கிறதென்று நினைத்து, ஈரான் அரசருக்கு வாழ்க்கைப்பட, இளவரசி யிணங்கிப் போவாள். கடவுளின் சிருஷ்டிகளும் சேதமடையமாட்டார்கள். இவளும் கொல்லப்படமாட்டாள். இதைவிட மேலான யோசனை ஒன்றுமில்லை யென்று தனக்குள்ளே தீர்மானித்துக்கொண்டு, இளவரசியின் சமுகத்துற்று, என் பிரிய நேசியே, தங்களுடைய யோசனையை நான் ஒப்புக்கொண்டு அதைப் பற்றி நிரம்ப ஆலோசித்தேன். துதிக்குடையவர் கடவுள் ஒருவரே. அந்த யோசனையைவிட வேறொன்றும் தட்டுப்படவில்லை.

ஆனல் இச்சமயம் "கூஜான்" அரசர் தோல்வியடைந்து, ஈரான் படை இரு பக்கத்திலும்சூழ்ந்து கொண்டிருக்கிறது. அப்படியிருப்பதால் நம்முடைய உளவர்கள் அங்கு சென்று உளவறிந்து வரமாட்டார்களென்று நினைக்கிறேன். அவ்விடத்திய சமாச்சாரத்தை அறியாமல் நாம் ஓடிப்போகவும் இடம்பாடாகாது. ஆகையால் நானே அங்கு சென்று பதிவிருந்து வுளவறிந்து மீண்டு வந்து, தங்களைக்கூட்டிக்கொண்டு ஓட்டம் பிடிக்கிறதே, உத்தமமாகக் காணப்படுகிறதென்று தந்திரமாகக் கூறினர்?

"ஹுர்முஜ்ஜின்" சரவட வார்த்தைகளை யறியாத, இளம் பருவத்தின் இளவரசி, அவைகளை நிசமென்று நம்பி, நேசரே; கடவு

ளின் காவலில் போய்வாருங்கள். பத்திரம் தாங்கள் படைக்களத்துக்குப்போகிறதாக ஒருவரிடத்திலும் சொல்லவேண்டாம். தனித்த விடத்திலிருந்து தந்திரமாக வுளவறிந்து வந்து சேரவேண்டும். ஏதேனும் தங்களுக்கு அபாயம் சம்பவித்தால் என்னுடைய வுயிரைப் போக்கியவர்கள், தாங்களேயாவீர்கள். தங்களின் பரிசுத்தமான ஆத்மாவின்பேரில் சத்தியமாக என்னில் நின்றும் எவ்விதமான கெடுதியும் ஏற்படமாட்டாது, இரவுபகலாக இரைச்சலிட்டழுதவளாகவே யிருப்பேன். மண்ணைவாரித் தலையிற்போட்டுக் கொள்ளுவேன். என் உடலை மண்ணுக்கிப்போடுவேன். இது நிச்சயமான வார்த்தை யென்றாள்.

ஹுர்முஜ், ஆ என் பிரிய நேசியே, கடவுள் காப்பாராக. தங்களுடைய கட்டளையை மீறி நடக்க மாட்டேன். ஏவலுக்கிணங்கி நடப்பதே என்னுடைய சுபாவம். கடவுள் மெத்த அறிந்தவர். நான் இங்கிருந்து புறப்பட்டு விட்டபோதிலும் என்னுடைய ஆத்மா இங்குதானிருக்கும். அதின்பேரில் தாங்கள் பார்வையைச் செலுத்தி, என்னுடைய நன்றி யறிதலைக் கவனித்தவர்களாக இருப்பீர்களாகவென்றார்.

——(*)——

## 10–ம் அதிகாரம்.

### ஹுர்முஜ் வெற்றி பெறலும், ஈரானரசர் இறந்தோடலும்.

——:◌◌:——

பின்பு இளவரசி, ஹுர்முஜை வாழ்த்திப் பயண விடையளித்தாள். அவர் தன்னிருப்பிடமாகிய தோட்டத்துக்கு வந்து ஆயுதங்களணிந்து, குதிரை மீதேறி, கொஞ்ச நேரத்துக்குள் கூஜான் அரசரின் படைவீரர்களுடன் வந்து சேர்ந்துக் கொண்டு அங்குள்ளவர்களிடத்தில் இவ்விடத்திய சமாச்சாரம் எவ்வாறிரு

க்கிறதென்று விசாரித்தார். அதிலொருவன் அபயமிட்டழுதவனாக, வாலிபரே, இவ்விடத்தில் எங்கு பார்த்தாலும் ஏக்கமும் ஊனமுமேயல்லாது எவ்விதமான சவுக்கியமுமில்லை. அஃதிருக்கட்டும். தாங்கள் யார்? எங்கிருந்து வந்தீர்கள்? தாங்கள் ஈரானரசரைச் சேர்ந்தவர்களானால், இதோ இவ்வடிமை தயாராகவே தங்களுடைய சமுகத்திலிருக்கிறான். அடிக்கவும், கட்டவும் தங்கள் பிரியப்படி செய்யவும் யாதொரு தடையுமில்லை. தங்கள் மனோபீஷ்டப்படி செய்துக் கொள்ளலாம். ஃஜானியிலுள்ளவர்களானால் ஓட்டமெடுக்கும் நாட்டத்தை உட்கொண்டவர்களாயிருக்கலாம். நம்முடைய அதிவீர பராக்கிரமம், அடியோடு ஒடிபோய் விட்டது. நம்முடைய அரசரும் இன்றிரவைக்கு, கம்பி நீட்டப் போகிறார். மீதியானவர்களின் கெதி யெவ்வாறாகிறதோ, கடவுளறிவாரென்றான்.

"ஹ்ரூசர்முக்" இச்சொற்களைக் கேட்டவுடனே இதென்னடா பேரிழவு, அரசர் ஓடிப்போய் விட்டால் நாமென்ன செய்கிறது. இருந்திருந்து இந்தப்படியா வந்து லபிக்க வேண்டுமென்று பலவாறு ஆலோசித்து, அந்த மனிதனைப்பார்த்து, ஓஹோ, சுத்த வீரனே, நான் நக்ஷத்திர கிரகங்களின் கணக்கெடுத்து நய நாட்டம் இன்னதென்று கூறுஞ் சக்தி படைத்த சிறந்த ஒரு கணித சாஸ்திரியாயிருக்கிறேன். ஃஜான் அரசரின் கிரஹ பலாபலன்களைக் கணித்து நோட்டமிட்டேன். இன்று முதல் இவருக்கே வெற்றி சிறக்குமென்று வெளிப்படையாய்த் தெரிகிறது. ஈரான் அரசரின் ஆட்டம் இனிமேல் பலிக்கமாட்டாது. இந்த வுலகம் அந்த வுலகமாக மாறின போதிலும், இந்தச்சொல் அந்தச்சொல்லாக மாறமாட்டாது. ஆகையால் இச் சந்தோஷ சமாச்சாரத்தை அரசருக்கறிவித்து, என்னையும் அவருடைய சமுகத்தில் கொண்டுபோய்ச் சேர்ப்பையேயானால் பெரிய வுபகாரமாயிருக்கும் அநேகவுயிர்கள் காக்கப்படக் கூடுமென்றார்.

அந்த மனிதன் விரைந்தோடி, அரசரிடத்து வந்து, தலை வணங்கி யெழுந்து நின்று கணித சாஸ்திரியின் காரியத்தைக்

கூறினன். அரசரும் மகிழ்ந்து அவரை வரவழைக்தார். ஹார்முஜ் "அரசரின் சமுகமடைந்து, சிம்மாசனத்தைத் தொட்டு முத்தமிட்டு அரசருக்கு வந்தனம்புரிந்து வணககத்துடன் நின்று கொண்டிருந்தார். அரசர், அவரை உட்காரச் செய்து, சாஸ்திரியாரே, சம்பவிக்கப் போகிறதை சவிஸ்தாரமாய்க் கூறுமென்முா. உடனே ஹார்முஜ்" அவரைப்பார்த்து, நாயகமே, நாளைமுதல் தங்களுடைய கிரகம் நன்னிலைக்கு வரப்போகிறது. என் சொல்லை நம்புங்கள். கடவுளின் கிருபையைக் கண்டறியுங்கள். இனிமேல் தங்களுக்கு வெற்றியேயல்லாது தோல்வியுண்டாகமாட்டாதென்றார்.

ஹார்முஜின் சொல்லைக்கேட்ட, கூஜான் அரசர், நம்பிக்கை கொள்ளாமல் இந்த அழகிற் சிறந்த வாலிபனை, நம்முடைய மந்திரி பிரதானிகள் சரிபண்ணி நம்மனதைத் தேற்றுதற்காகவே அனுப்பியிருக்கிறார்கள். இவன் கணிதசாஸ்திரி யல்லன். இப்படிப்பட்ட கபடவார்த்தைகளில் சிக்குண்டு இன்னமும் நான் கஷ்டத்தை யனுபவிக்கமாட்டேன். என்று கூறியதுடன் ஜனங்களே! சீக்கிரமாகச்சென்று, கடின வேகமுள்ள குதிரையொன்றைக்கொண்டுவாருங்கள் இது நல்லசமயம் ஓட்டம்பிடிக்க இணக்கமான நேரமாயிருக்கிறதென்றார்.

மந்திரிமார்கள் வணக்கத்துடன் எழுந்துநின்று கைகட்டிக் கொண்டு, அரசரைப்பார்த்து, எஜமானே, மன்னிப்பீர்களாக. இந்த வாலிபன் வந்ததை நாங்கள் அறவே அறியமாட்டோம். எங்களைக் காவல்புரிந்து நிற்கும் தேவர்களும் அறியமாட்டார்கள். இவர், தேவதூதரோ, மானிடப்பிறவியோ, இராக்கதனோ, பைசாசமோ, கடவுளறிவாரேயன்றி நாங்கள் அறியவேமாட்டோமென்றார்கள்.

அப்போது ஹார்முஜ், அரசரே! இந்த அடிமையின் மெய்யும் பொய்யும், நாளைய்த்தினம் தானே முந்திப் போய் அய

சாடுவதால் வெளிப்படையாகும். நான் ஜெயம்பெற்று வந்தால் கோடிக் கணக்கான ஜனங்கள் காக்கப்பட்டவர்களாவார்கள். நான் படைக்களத்தில் வெட்டப்பட்டவனாகும்பக்ஷத்தில், இன்றைக்குச் செய்யவிருக்கும காரியத்தை நாளைக்குச் செய்ய என்ன தடையிருக்கிறதென்றார்.

அரசர், ஹார்முஜின் வார்த்தைக்கிணங்கி அன்றிரவை அவ்விடத்திற் போக்கினார். விடியற்காலையில் "ஹார்முஜ்" படைக்கோலம் பூண்டு கூஜான் அரசரின் சமுகத்தடைந்தார். அவரின் பிரகாசம்பொருந்திய முகத்தழகைக் கண்ட அரசருக்கு அவர்பேரி லிரக்கமுண்டாகி, மகனே! நீர் சிறுபிள்ளையா யிருக்கிறீர். காலத்தின் ஏற்றவாட்ட மிவ்வாறென்பதை அறியமாட்டீர். முதிர்ந்த வயதையும், தந்திரோபாயத்தையும் உடைய ஈரானிகளுடனெதிர்த்து நிற்க வும்மாலாகாது. நீர் எங்கிருந்து வந்தீரோ, அங்கே மீண்டுவிடும். நீர் கூறிய கபட வார்த்தைகளைப்பற்றி நான் மன்னிக்கிறேன். அணுவளவும் நீர் சந்தேகப்பட வேண்டாமென்றார்.

அதற்கு ஹார்முஜ், நாயகமே! தாங்கள் என்னுடைய சிறு வயதைப்பற்றிக் கவனிக்கவேண்டாம். சந்தோஷமாக எனக்கு விடையளித்து, படைக்களத்தனுப்புங்கள். நான் தங்களுடைய கட்டளைக்கு மீறிப்பேசும் தப்பிதத்தைமன்னியுங்கள். நான் செய்யபபோகிற யுத்தத்தின் திறத்தைப் பார்த்துக்கொண் டிருங்களென்றார். உடனே அரசர் முழங்காலிற் படிந்து, "ஹார்முஜ்" ஜெய வீரனாக மீளக், கடவுளை வேண்டினார். மந்திரிமார்கள் கையேந்தி நின்றார்கள். இவ்வாறிருக்கும் போது, ஈரான் அரசரின் படைவீரரில் நின்றும் ஒருவன் தன் குதிரையை மிகுவேகமாகச் செலுத்திவந்து படைக்களத்தின் நடுவில் வட்டமிட்டுக்கொண் டிருந்தான். ஹார்முஜ் இங்கிருந்து விடை வாங்கிக் கொண்டு, சென்று அவனை யெதிர்த்து நின்றார். இவரை ஈரான் குதிரைவீரன் பார்த்து, பரிகாச நகைப்புடன் சிறுவனே, கூஜான் அரசரின்

படையில் வாலிபர்களெல்லாம் மடிந்துவிட்டார்களோ? இப்போது சிறுபிள்ளைகளின் முறை வந்து விட்டதோ, மஹா ஆச்சரியமாயிருக்கிறதே. நரைத்த மயிரையுடைய உன் அரசர் உன்னைப் படைக்களத்துக்கனுப்புவதைப் பற்றி வெட்கப்படவில்லையா? என்று கேட்டான்.

ஹாமுறுஜ் அவனைப்பார்த்து முறு முறுத்து, ஒஹோ. குதிரை வீரனே யுத்தத்தில் வாள்முனையைத் தவிர மற்றொன்றும் பிரயோசனப் படமாட்டாது. இதோ என் கைவாளால் உன்கேள்விக்கு மறுமொழி கொடுக்கிறேன். நான் சிறுவனல்லன். உனக்கொரு பெரிய வினையாய்வந்திருக்கிறேன். நான் எமதூதனுக்கும். இதோ பார் சற்று நேரத்துக்குள், இருபக்கக் கூராயுதத்தை யுடையவரின் கிருபையால் உங்களின் அருமையான வுயிர்களை என் வாட்படைக்கிரையாக்கி, உங்களின் சரீரங்களை நாய் நரிகளுக்கிரை யளிக்கிறேனென்றார். இதைக் கேட்ட அவ்வீரன் உக்ர கோபங்கொண்டு, தன் வாளையுருவி "ஹாமுறுஜின்" கண்டத்தை யிலக்காக்கி ஒருவீச்சு வீசினன். அவ்வீசை "ஹாமுறுஜ்" பரிசையால் தட்டிவிட்டு, அவனின் பிடரியைப் பிடித்துத் தூக்கிப் பூமியிற்கிடத்தி, மூக்கையறுத்து அவன் கையிற் கொடுத்து, இந்த வெகுமதியைக் கொண்டு போய் உன் அரசனுகிய வழிகெட்ட பாதகனிடத்திற் கொடுத்து, புலியுடன், ஆட்டுக்கடா, எதிர்க்க வந்திருக்கிறது போலிருக்கிறதென்று நான் சொல்லியனுப்பியதாகச் சொல்லு. நீயும் ஒரு பெரிய மடையனுனதால் என் முன்னில்லாது விரைந்தோடிப் போவென்ருர். அவ்வீரன் உயிர் பிழைத்ததே போதுமென்று ஓட்டம் பிடித்தான்.

பின்னரும், "ஹாமுறுஜ்" இரத்த வேகங்கொண்டவராகி தன் குதிரைமேல் பாய்ந்தேறி, கைவாளை குலுக்கிப் பிடித்துக் கொண்டு ஏடா? ஈரானிகளே, உங்களில் நின்றும் பெயர் பெற்ற சுத்த வீரர்களெல்லாம் என் முன் வாருங்கள். என் கைவாளுக்

கிடு கொடுக்கச் சக்தியுள்ளவர் யாவரிருக்கிறார். ருஸ்தம் என்பவனுங்கூட இச்சமையம் என் முன்னால், தன் கண்ணைக் கசக்க சக்தியற்றவனாவான். விரைந்து வந்து வெகுமதி பெற்றுக்கொள்ளுங்கள். வீறு கெட்ட ஈரான் நாய்களே யென்று சப்தமிட்டழைத்தார். ஈரான் அரசர் இச்சப்தத்தைக் கேட்டும், தன் குதிரை வீரனின் அறுபட்ட மூக்கைப் பார்த்துந் தியங்கி, மந்திரிகாள்? இந்த ஒரு மாதமாக, தூரான் அரசனுடைய படையில் நின்றும் இவ்வாறான சப்தம் வந்ததில்லையே. இப்போது வந்திருக்கிறவனைப்பார்த்தால் மஹா திடசாலியாகத் தோற்றப்படுகிறானே. நெருப்பின் துளிர் போன்றிருக்கிறானே, இவன் ஆரென்று கேட்டார்.

மந்திரிமார்கள், ஆம் ஆம் எங்கள் எஜமானே, அச்சிறுவனின் பிரகாசமான முகத்தைககாண்போரெவரும் அவனைத் தேவபாலியனென்றே நினைக்கிறார்கள். யாராயிருந்தாலுந் தானென்ன? ஒரு சிறுவன் எவ்வளவு நேரம் அமராடப் போகிறான். கலங்காதிர்களென்றார்கள. உடனே அரசர், திடங்கொண்டு, தன் வீரர்களுள் திடம் பொருந்திய ஒரு சுத்த வீரனை யழைத்து, நீ போய் அச்சிறுவனின் பிடரியைப் பிடித்திழுத்து இங்கே கொண்டுவந்து சேர்ப்பாயாகவென்று கட்டளையிட்டனுப்பினார்.

இமயகிரிக்கிணையான சரீரத்தையுடைய அவ்வீரன், ஹூர்முஜுக்கெதிரே வந்து, தன் புரவியைச் சக்ர சாரிகையில் விட்டு அவருக்குப் பின்னாலாகி அவரின் இடுப்பில் தன் கையைப் போட்டு இறுக்கி பிடித்தான். "ஹூர்முஜ்" கண்களிற்றீப் பொறி பறக்கச் சினங்கொண்டவராகித் தன் சரீரத்தை விம்மச் செய்துத் திமிறினார். அவனுடைய கை, அவரின் இடைக்கட்டை விட்டு விலக்கிற்று. மற்றொரு கையிலிருந்த வாளால் "ஹூர்முஜை" வீசினான். அவ்வீச்சை அவர் தட்டி விட்டுத் தன் குற்றுடை வாளால் அவனைக் குத்தினார். அக்குத்தோடு அவன் கீழே விழுந்திறந்தான். அதனால் ஈரானிகள் மிகக் கலங்கினார்கள்.

பின்னரும், மஹாப் பராக்கிரமமும் வீரமுமுடைய ஒரு ஈரான் வீரன்; புறப்பட்டு வந்து, சிறுவனே, பத்திரம். விதிப்படியிரண்டுபேர் உன் கையால் வெட்டப்பட்டார்கள். இதோ, உன்னுடைய விதியாகிய என் கைவாள் வீச்சைக் காணிக்கையாகப் பெற்றுக்கொள்ளென்று கதறினன். ஹாமுஜ், அவனைப் பார்த்து, வாரும் சுத்த வீரரே, உம்முடைய வரலை யெதிர் பார்த்தவனகத்தான் இதோ நிற்கிறேன். கடவுளின் நாமத்தை முன்னிட்டு முன்னேறி வந்து உம்முடைய கருத்துப்படி செய்துக் கொள்ளும். சீக்கிரம் வாருமென்றழைத்தார். அதைக் கேட்ட வீரனுக்கு, அடங்காக் கோபமூண்டு, தன் கைக்கசையால், ஹாமுஜை, ஓங்கியடித்தான். அவர் அவ்வடியைப் பரிசையால் தட்டிவிட்டு, குதிரைமீதிருந்தபடிக்கே, வெகு தந்திரமாகத் தன் குற்றுடை வாளால் அவனைக் குத்தினர். அவன் பூமியிற் சாய்ந்துவுயிரிழந்தான். அதைக் கண்ட "ஹாமுஜ்" அவ்வீரனின் நெஞ்சைப் பிளந்து ஈரலை யெடுத்துக் காறியுமிழ்ந்து, வெறும்பினுக்கும் வீண் சபதமும் கூறி வரும் வீரமிழந்த பேடிகளுக்கு இதுவே பிரதி யென்று வீசி யெறிந்துவிட்டு, கடவுளின் உதவியால் ஈரானிகளினுயிர்களை இவ்வாறுகவே, என் கைவாளுக்கிரையளிப்பேனென்று சபதமிட்டுக்கொண்டு நின்றார்.

ஒருவர்பின் ஞெருவராக, நூறு வீரர்கள் வந்தெதிர்த்தார்கள். பொழுதடைவதற்குள் அந்த நூற்றுவரையும், வெட்டியெறிந்து, அவர்களின் தசைகளை நாய் நரிகளுக் கிரையாக்கினர். ஹாமுஜின், வாள்வீச்சையும், ஈரானிகள் கண்டதுண்டப்படுவதையும், ஈரானிகளில் ஒருவரும் முன்னேறி வாராதிருப்பதையும், ஹாமுஜின் யுத்த வேகத்தையுங் கண்ட சூரியன் இனிமேலும் நாம் இங்கிருந்தால் நம்மையும் பிளந்தெறிவாரெனப் பயந்து நடுங்கி நிறப்பேதமுற்று, மஞ்சணித்து மேற்றிசைக் கடலுள் மறைந்தது. ஹாமுஜ், தன் படாம் வீட்டுக்குத் திரும்பினர். படைக்களத்தில் நின்று பார்த்துக்கொண்டிருந்த "கூஜான்

அரசர்" ஹாருனை, யெதிர் சென்றழைத்து கழுத்தைக்கட்டி நெற்றியை முகந்து ஆசிகூறி, மகனே, எந்த நாவால் உம்மைப் புகழுவேன். எவ்வளவாகத்தான் கடவுளுக்குத் துதி செலுத்து வேன்? கடவுள், உமக்குக் கண்ணேறு நாவேறுபடாது காப்பா ராக. நீர் நீண்டவாணுளைப் பெற்று ஏழைகளுக்குபகாரியாகவும் சுகஜீவியாகவுமிருக்கக் கருணைபுரிவாராக, என்று பலவாறு துதி த்துக் கூடாரத்துக்குள் கொண்டுவந்து சேர்த்தார்.

இங்கே இவ்வாறிருக்க, அங்கே, ஈரான் அரசரின் வயிற்றில் எலியோட ஆரம்பித்துவிட்டது. வெகுநேரம் வரையில் சுவரில் தலையை மோதிக் கொண்டிருந்தார். ஒருவிதமான யோசனையுந் தட்டுப்படாமல் உசாரிழந்து தலை குனிந்திருந்தார். ஒருவருட னும் பேசவில்லை. ஒருவரின் பேச்சையாவது காது தாழ்த்திக் கேட்கவுமில்லை. சற்று நேரத்தின் பிறகு வுசாருண்டாகி, அச்சி றுவன் கெட்டுப்போகமாட்டானா? அவன் கண்டத்தில் வாளும் வயிற்றில் அம்பும் பாயாதா? அவனைப்பார்த்தாலோ, கடைத்தீ ர்ப்புக்காலத்தின் அடையாளமாகவேகாணப்படுகிறான். இந்தகெட் டவிதது எங்கிருந்து வந்ததென்பதைக் கடவுள்தாமறிவார். எந்த சுத்தவீரன் இவனைப் பெற்றுவிட்டானோ? நான் இப்படிப்பட்ட சுத்த வீரனைக் கண்டதுமில்லை. இருப்பதாகக் கேள்விப்பட்டது மில்லை. சுத்த வீரத்தில். றுஸ்தம், என்பவனின் பாட்டனாகவே யிருக்கிறான். கடைசியில் எவ்வாறாகிறதோ, கடவுளறிவார். நான் சாகப்போகிறேனோ? பிழைக்கப்போகிறேனோ ஒன்றும் புல ப்படவில்லையே யென்று அன்றிரா முழுதும் ஒரே புலப்பமாய்ப் புலம்பிக்கொண்டிருந்தார். நித்திரையென்பதே கிஞ்சிற்றுமில்லா திருந்தது. பொழுதுவிடிந்தவுடனே இருவகுப்பாரும் அணி வகு த்து நின்றார்கள்.

"கூஜான் அரசர்" ஹாருனைக் கட்டியணைத்து, வீரசிம்ம மாகிய மகனே, என் மனம் மெத்த பரிதபிக்கிறது. உம்மைப் படைக்களத்துக்கனுப்ப எனக்குப் பொருத்தமில்லை. எவ்வித

மாக, இவ்விலக்ஷணப் பிறவியை அக்கினிசாஹும் அமர்க்களத்துக் கனுப்புவேன். மகனே, கடவுளுக்காக என்னை விட்டு விடும். நான் ஓடிப் பிழைக்கிறேன். சண்டையும் நின்றுபோகும், சனங்களும் மடியமாட்டார்கள். ஓடிப் போகிறது இழிவானாலும் உம் போன்றவர்களின் ஜீவனைக் காப்பாற்றும் விஷயத்தில் இழிவாக மாட்டாது. ஆகையால் என் மனோபீஷ்டப்படிக்கு நீர் சம்மதி தரவேண்டுமென்றார். அதற்கு "ஹார்முஜ்' அரசர் நாயகமே, தாங்கள் சொல்பவையெல்லாம் சரியானவைகளே. என்றாலும், தங்களுடைய அடிமையாகிய நான் முன் வைத்த காலைப் பின் போடமாட்டேன். இவ்விஷயத்தில் தாங்கள் என்னைத் தடுக்கவும் வேண்டாம். கடவுளுக்காக என் குற்றத்தை மன்னித்து விடை தந்தனுப்புங்கள். கடவுளிடத்தில் நான் வெற்றி பெற வேண்டிக்கொண்டிருங்களென்று சொல்லிவிட்டு, தன் குதிரையை முடுக்காகச் செலுத்தி மைதானத்தில் வந்து நின்றுக்கொண்டு, சத்ராதிகளே, என்னுடன் அமராடப் பிரியமுள்ளோர் அட்டியின்றி வரலாமென்று சப்தமிட்டார்.

ஈரானிகளுக்குள் இரைச்சல் அதிகப்பட்டது. பேடிகளாகிப் பேதலிப்படைந்தார்கள். ஒருவருக்கொருவர் வசை கூறிக் கொண்டார்கள். ஒருவன் மற்றொருவனைப் பார்த்து, நான் மஹா, திடசாலியென்று பிதற்றிக்கொண்டிருந்தீரே, ஏன் முன்னேறுகின்றீரில்லையென்றான். இன்னொருவன், குராசான் தேசத்தின் முஜபர், எனனும் ஜயவீரர் ஏன் முனை மழுங்கிப் போனாரென்றான். வேறு சிலர். பலே, பலே, நன்றாயிருக்கிறது. நாங்கள் போகவில்லையென்று குறை கூறி, எங்களை முன்னேறிச் சண்டை செய்யத் தூண்டுகிறீர்கள். நீங்களேன் பின் வாங்குகிறீர்கள்? கைகாலசைக்கும் சக்தியற்ற பேடிகளாயிருக்கின்றீர்கள்? உங்களைப் பார்த்தால் இன்றிரவு முழுதும் ஒருநாய் என் முகத்தை நக்கிக் கொண்டிருந்தது. குரைத்துக் குரைத்து, என் தலைமயிரை பிய்த்துக் கொண்டிருந்தது. நான் எவ்வளவோ பொறுதியுடன் தலை சாய்த்துக் கொண்டிருந்தேன். சிநேகிதர்களே நீங்

கள் அறியமாட்டீர்கள் போலும். அது கிடக்கட்டும். இந்த நாயை அடித்து விரட்டுங்களென்ற குடுகுடுப்பைக்காரனுக் கிணையாகத்தானிருக்கிறீர்களென்றார்கள். பலவாறு கோட்டைக்குள்ளேயே படைவெட்டாயிருந்தது. அப்படியிருக்கும்போது யுத்தத்துக்குக் கட்டளையானதும், ஈரான் வீரரடங்கலும் வெட்கமின்றி விலவிலப்புற்று, கைகால் உதறலெடுக்க, வுசாரிழந்து, கண்ணீர்ச்சொரிய மண்மேற் சாய்ந்துவிட்டார்கள்.

இவர்களின் கெதியைப் பார்த்த "ஈரான் அரசர்" அபய சப்தமிட்டு, ஓஹோ, வீரமிழந்த பேடிகாள், ஒரு சிறுவனுடன் எதிர்த்து அமராடப் போகாதிருப்பது இழிவல்லவா? கடவுள் பேரிற் சத்தியமாக, சீக்கிரம் போங்கள். என்னுடைய முகத்தில் கரியைப் பூசிவிடாதீர்கள். நீங்களும் பூசிக்கொள்ளாதீர்களென்றார். அரசரின் கடூரமான வார்த்தைகளைக்கேட்டு அவரின் மெய்க்காப்பாளரில் நின்றும் ஒரு பலத்த குதிரை வீரன் புறப்பட்டு ஹார்முஜை நோக்கி வந்தான். தூரத்திலேயே ஒரு பாணத்தை யேவி அவனைப் படுக்கையிற் கிடத்தினார். பின்னரும் இரண்டொருவர் வந்தெதிர்த்தார்கள். அவர்களையும் அவ்வாறே கிடப்பாட்டினார். அட்டகாசஞ் செய்து அடர்ந்தேறி நிற்கும் வேங்கைக்குச் சமதியாகிய "ஹார்முஜ்" சத்ராதிகளில் ஒவ்வொருவரையும் ஒவ்வொரு நச்சுப் பாணத்தால் நீறுக்கினார். ஒரே வாட்படையால் அவர்களடங்கலையும் சர்வசம்ஹாரஞ் செய்தார். ஈரானிகளில் நின்றும் அவருடன் எதிர்க்க வருபவர்களில்லையென்கிறவரையில் போர்புரிந்துங் களைக்காதவராயிருந்தார். ஈரானிகளைகைகால் அயர்வுற்று, கண்ட கண்டவிடங்களிற் போய், கரந்திருந்தார்கள். "ஹார்முஜ்" வாளைக் குலுக்கிக்குலுக்கி வையாளியிட்டுக்கொண்டிருந்தார். ஆகாயமும் பூமியும் ஆர்ப்பரித்துக்கொண்டிருந்தன.

சுத்தவீரர்கள் ஆச்சரியப்படும்படியாக, ஹார்முஜ் அம்புமாரி பொழிந்தார். இரத்த ஆறோட்டி வைத்தார். ஈரான் போ

ர்வீரர்கள். இந்த அரசனுடைய வீடு பாழாய்ப் போகாதா? அநி யாயமாய் சனங்களை மடியக் கொடுக்கிறானே. தானும் ஒடுகிறு னில்லை. மற்றவர்களையும் ஓடவிடுகிறானில்லையே ஓடிப் போகத் தான் வழியில்லை. உயிர் பிழைக்காவது வழியுண்டுமா? இந்த வாலிபன் உலகத்தை நிர்மூலமாக்க வுற்பவித்தவன் போலிருக்கி றான். நம்முடைய வுயிர்களை யவரும் எமதூதனாகவே காண ப்படுகிறானென்று கலங்கி, ஈரான் அரசரை யேசவும் பேசவும் ஏங்கியழவும் தலைப்படுகிறவரையில் "ஹுர்முஜ்" அன்று போர் க்களத்தில் தன் புயவலியை வெளியாக்கினார். அன்று சற்றேற க்குறைய ஆயிரம் வீரர்கள், ஹுர்முஜால் வெட்டப்பட்டு இரத்த ஆற்றில் ஆமைகளைப்போல்மிதந்துக்கொண்டிருந்தார்கள். பொழு தடைந்தவுடனே, ஹுர்முஜ், தன் கூடாரத்துக்குவந்துசேர்ந்தார்.

கூஜான் அரசர், அவரைப்பசும்பொற் சிம்மாசனத்திலிருத்தி ஆசீர் வதித்துக் கண்ணேறு கழித்தார். சகல படைவீரர்களும் ஒருவருக்குப்பின் ஒருவராக வந்து கண்டு சோபனங்கூறிச் செ ல்லச் செய்தார். நவரத்தினங்கள் நிறைத்த தாம்பாளங்களை வரு த்தி, ஆலாத்தி வீசி அதிதிசளுக்களித்தார். சேனாதிபதி யென் னுஞ் சிறந்த பட்டமீய்ந்தார். கணக்கில்லாத திரவியங்களை வெ குமதி கொடுத்தார். இங்கு இவ்வாறுற, ஈரான் அரசரோ, தன் தலைப்பாகையைக் கழட்டித் தரையிலெறிந்தார். ஆற்றமுடியாக் கோபத்தால் அருகிலிருந்த சிலரை வாட்கிரையாக்கினார், கடைசியில் மந்திரிமார்களை வரவழைத்து, என் உயிர்த்துணைவர் காள், தற்சமையம் நம்முடைய நற்கிரகம் பாடுசாய்ந்துவிட்டது. சுத்த வீரர்களென்னும் பேரை யிழந்தவர்களாய் விட்டோம், பேடிகளென்று பெயர் பெற்றுக் கொண்டோம். ஒன்றுஞ் செ ய்யக் கூடாதவர்களாய் விட்டோம். இதற்கு மேல் நாம் என்ன செய்யலாம். தகுந்த யோசனையைக் கண்டு பிடித்துத் தப்பிப் பிழைத்தோட வழிதேட வேண்டுமென்றார்.

மந்திரிமார்கள் வணக்கத்துடன் எழுந்து நின்று, எஜமா னே, லாஹீஜான் தேசத்தில் ஒரு பலத்த வீரரிருக்கிறார். ஒரு

நாள் அவர், ஆயிரம் வீரர்களுடன் மல்லுக்குநின்று அவ்வளவு பேரையும் அன்றையதினமே அடித்து வீழ்த்தினர். அவ்வூர் அரசர், அவ்வீரருக்குத் தினச்சம்பளங்கொடுத்து, தன தேசத்தைக்காத்துவரச்செய்திருக்கின்றார் அவரிடத்தில்தான் இச்சிறுவனின் விதியிருக்கவேண்டும். அவரையல்லாது மற்றவர்கள் இவனை அசைக்கவுஞ் சக்திபெறமாட்டார்களென்பது நிச்சயம். எத்தனைகோடி, தேவர்கள் வந்தெதிர்த்தாலும் அவர்க ளடங்கலையும் இவன் எமபதிக்கனுப்பாதுவிடான். ஆகையால், அந்த சுத்தவீரரை வரவழைத்தால்தான் நாம் உயிர்தப்பிப் பிழைக்கலாமென்றார்கள். மந்திரிமார்களின் யோசனையை, அரசர் நன்குமதித்து, அவ்வீரனை யழைக்கக் கருதி, கூஜான் அரசரிடத்தில் எட்டுநாள் வரையில் சண்டையை நிறுத்தி வைக்கும்படிக்குக் கேட்டுக் கொண்டார். அது போல் நிறுத்தப்பட்டது. மறுநாட் காலையில் ஈரான் அரசர், காகிதமெழுதித் தூதவன கையிற் கொடுத்து, லாஹீஜானுக்குப் பிரயாணப்படுத்தியனுப்பினர்.

நிரூபம் வருமாறு.

ஆயிரம்பேரை வதைத்த அதிவீர சூரருக்கு, ஈரான் அரசர் எழுதிக்கொள்ளுவதென்னவென்றால் தற்போதுநானும் என்படைவீரர்களும், மஹாபாரதூரமான அபாயத்திற்சிக்குண்டவர்களாயிருக்கின்றோம். கூஜான் அரசரின் படையில் ஒருசிறுவன் வந்து சேர்ந்திருக்கின்றான். உம்முடைய சகோதரர்களில் ஆயிரக்கணக்கானோர் அவனால் கொல்லப்பட்டார்கள். இப்போது என்னையுங் கொல்ல, அவன் எண்ணங்கொண்டிருக்கிறான். ஆகையால் யாதொரு தடையுமின்றி இந்நிரூபம் பெற்றவுடனே, நீர் புறப்பட்டு வந்து எங்களைக் காப்பாற்றுவது, உம்பேரிற் கடமையாயிருக்கிறது. தாமசப்படுத்துவீரேயானால், உம்முடைய அரசராகிய என்னைக்கண்டு கொள்ளமாட்டீர். பின்னால் கைசேதப்படுவீர். இறந்த வுயிர் மீளமாட்டாது. என்னுடைய பழிக்குப் பிரதிபழி இலக்ஷக் கணக்காய் நீர் செய்த போதிலும் பிரயோசனமில்லையென்பதே.

இக்கடிதத்தைக்கண்ட அந்த சுத்த வீரன் தட்டுக்கெட்டுக் கலங்கி ஒரு நிமிட நேரமும் தாமசப்படுத்காமல் அஸ்வாரூடனுகி முன் குறித்த யுத்தக் கெடுவுக்கு ஒருநாள் முன்னுதாகவே கூஜா னுக்கு வந்து ஈரானிகளுடன் சேர்ந்துக்கொண்டான். அதனுல் ஈரானிகளுக்கு அதிக சந்தோஷமுண்டாயிற்று. கூஜான் அரசரு க்கு, பழய திகில் கண்டு நடுக்கமுற்று வயிற்றைப் பிடித்துக்கொ ண்டிருந்தார். அடிக்கடி ஹுர்முஜைப்பார்த்து அழுவார். கண் ணீரை முத்துபோல வடிப்பார். தன்னுணர்வற்றவராகக் குதி ரை லாயத்துக்கோடுவார். குதிரையை அவிழ்த்துக் கல்லணை வீக்குவார். மறுபடியுங் கழட்டி வைப்பார். ஒரு விநாடிக்கு ஒருவிதமான கோலங்காட்டுவார். கடைசியில் சஹிக்க மாட் டவராய், "ஹுர்முஜ்" கிட்டச் சென்று அவரின் கழுத்திற் கை போட்டணைத்து அலறியழுது, மகனே, தெரிந்து தீயில் விழாதே யென்று கடவுள் கூறியிருப்பதால், அக்கடவுள் பேரிற் சத்தியமாகக், கால்விநாடி நேரமாவது நான் காலதாமதப்பட்டுத் தாமல் இங்கிருந்து ஒளித்தோடிப் போய்விடுவேன். நீரும் அது போல் ஓடிப் போவீராகவென்றூர்.

அதற்கு "ஹுர்முஜ்" என் பிதாவே, தாங்கள் ஏன் இவ்வா றுகலங்குகின்றீர்கள்? என்ன முழுகிபோயிற்று? அவன் என்பார் வையில் மெத்தக் கேவலமானவனுகக் காணப்படுகிறுன். அவனைப் பற்றி இவ்வளவுதூரம் தாங்கள் நினைத்துக் கலங்குவது எனக் குப் பெரிய ஆச்சரியமாயிருக்கிறதென்றூர். கூஜான் அரசர், மக னே, அவன், கடவுளின் கோபாகினிக்குச் சமதியானவனுயிருக்கி றுன். ஆயிரம் பேரானுலும் அணுவாக மதிக்குந்திடசாலி. அவ னுடைய புயவலிமையைப்பற்றி, இந்த கூஜான் தேசத்தில் நான் கேள்விப்பட்டுக் கெடிகலங்கின வனுகவே யிருக்கிறேனென்று படபடத்துக்கூறினுர். "ஹுர்முஜ்" ஈரான் அரசரைப்பார்த்து, தந்தையரே தாங்கள் கூறியபடி, அவன் மஹா சுத்த வீரனென்ப தில் ஆக்ஷேபனையில்லை. ஆனுலும் தாங்கள் என் குற்றத்தைம ன்னிப்பீர்களாக. என்னுடைய வுடலில் உயிரிருக்கிறவரையில்

நான் அவனுக்குப்பயந்து ஓடவேமாட்டேன். கடவுளுக்காக, இன்னும் இரண்டொருநாள் பொறுத்து, அக்கடவுளின் அற்புதத்தைப்பாருங்கள். பின் வாங்கி யோடும் விஷயந்தான் நம்மனதில்வேரூன்றியிருக்கிறதே. நான் படைக்களத்திற் கொல்லப்பட்ட பிறகு, வேண்டுமானால் தாங்கள் ஓடி யொளிக்கலாமென்றார்.

"சூஜானரசர்" உடனே தன் தலைப்பாகையைக் கழட்டிக் கீழே வைத்து விட்டு நெற்றியைப் பூமேற்படுத்தி அன்று பொழுது புலருகிற வரைக்கும், ஹாரூர்முஜ், ஜெயமடைந்து மீளக் கடவுளை வேண்டிக்கொண்டிருந்தார். பொழுது விடிந்ததும் ஈரான் போர்வீரர்கள் அணி வகுத்துப் படைக்களத்து வந்துநின்றார்கள். முதலணியில் அந்த லாஹீஜான் சுத்த வீரன் வெகு ஆரவாரத்துடன் ஆர்ப்பரித்துக் கொண்டு நின்றான். "ஹாரூர்முஜ்" விலையுயர்ந்த பட்டுடையுடுத்து, கூர்மையும் பிரகாசமும் பொருந்திய வாளாயுதத்தை யிடையிற் சொருவி, கையில் நாணேற்றிய வில்லைப் பிடித்துக்கொண்டு தனித்தவராக, இளஞ்சிங்கம் போலக் கர்ச்சித்து மஹாவூக்கத்துடன் மைதானத்துக்கு வந்தார். அனறைத்தினம் அவர் செய்த யுத்தத்தின் திறத்தையும், தந்திரத்தையும் எடுத்துக்கூற ஆயிரஞ்சிரசையுடைய ஆதிசேடனாலும் ஆகமாட்டாது. சூஜான் அரசர் "ஹாரூர்முஜைப்பார்த்து" மாரடித்துக் கொண்டே நின்றார். ஈரான் படைத்தலைவர்களிலனேகர், ஹாரூர்முஜூடன் எதிர்த்து அவரின வாட்படைக்குப் பலியானார்கள். ஹாரூர்முஜ் முன்வைத்த காலைப் பின் வாங்காது மஹாவீரத்துடன் முன்னேறி நின்றார். அப்படிக்கிருக்கும்போது மலை போன்ற சரீரத்தையும், பனைமரம் போன்ற காற்களையும், மலைச்சிகரத்துக்கிணையான தலையையும், விரிந்த நெஞ்சையும், ஈத்தமரம் போன்று நிமிர்ந்தடர்ந்த மீசையையும், கல்மனத்தையும், இடியேறுபோன்ற சப்தத்தையும், இராவணனின் படைக்கோலத்தையும் தீப்பொறி தெரிக்குங் கண்ணையுமுடைய, லாஹீஜான் சுத்தவீரன் வாள், வேல், தண்டங்குந்தம் முதலான ஆயுதங்களணிந்து வீராவேசங்கொண்டவனாக, ஹாரூர்முஜூக்கெதிரே வந்தான்.

அவனை, ஹூர்முஜ், பார்த்துப் புதுமையடைந்து, ஆ, கடவுளே, இச்சமையம் எனக்குதவிசெய்பவர், நீரேயாகையால், எனக்குத் துணையாயிருக்கக் கடவீரென்று வேண்டி நின்றார். அக்கொலை பாதகன், வந்தவுடனே, ஏடா, ஹூர்முஜே. பத்திரம். இதோ வுன்னுடைய விதி முடிந்துவிட்டது. உயிர்கள் காக்கப்பட்டதென்று வுரத்த சப்தமிட்டான். ஹூர்முஜ், அவனைப் பார்த்து, அடே, பேடீ, வாயை மூடு, வீண் புலப்பம் புலம்பாதேயென்றார். இதைக் கேட்டதும், அப்பாதகன் உக்ரகோபத்தால் கண் சிவந்து, முகநிற மாறி மஞ்சணித்து சரீரம் நீலம்பூத்தான். அத்துடன் போர் ஆரம்பமானது. முதலில் ஈட்டிச் சண்டையும் பின்பு அம்பு விளையாட்டும், அப்பால் கவண்கல் வீச்சும், வெகு மும்முரமாயிருந்தது. இவ்விருவீர சிம்மங்களின் திடாரிக்கத்தாலும், ஆயுதங்களை ஒன்றோடொன்று மோதவிடுங் கோஷ்டத்தாலும், வானம் பயந்தசைந்தது. பூமியாடிற்று. பூமியைச் சுமந்து நிற்கும் பாதாளப்பசு அஞ்சித் தலை குனிந்தது. அன்று நண்பகல வரையில் ஒருவருக்கொருவர் பின் வாங்காமல் ஈடு கொடுத்து நின்றார்கள். இருவரின் ஆயுதங்களும் நுறுங்கி வீழ்ந்தன. பாணமுங் கவண்டியும் ஒழிந்தன. பொழுதடைய நெருங்கிற்று. அதனல் மல் யுத்தத்துக்கு மண்டியிட்டுட்கார்ந்தார்கள். தத்தங் கைகால் பலத்தைக் கணக்கெடுத்தார்கள். பொழுதடைகிற வரையில் ஒருவரை யொருவர் மிகைக்கவில்லை. வானம் அசைந்தது. பூமி அமிழ்ந்தது. அச்சூரன், ஆ, கடவுளே, இச்சிறுவனின் சரீரம் கரும்பொன் மலையா? என்னுடைய அம்பும் வாளும், அணுத்துணையும் ஊறுபடுத்தவில்லையே. மலையின் பேரில் நான் கை வைத்தால் அம்மலை அசையாதிராதே. இவன் ஆடவுமில்லை. அசையவுமில்லையே. முடிவு எவ்வாறாகிறதோ அறியேன். நீர் தான் என்னைக் காக்க வல்லவரென்று கடவுளை வேண்டினன்.

ஹூர்முஜோ, அடே, சுத்த வீரனென்று பட்டஞ் சூட்டிக்கொண்டு துஸ்தமென்று வெளிப்பட்ட சோம்பேறி நாயே, உன்

சுத்த வீரத்தின் பேரிற் சத்தியமாக, நீ சுத்த வீரன்தானென்பதை நான் அறிந்துக்கொண்டேன். நீ இச்சிறுவனின் கைகாற்களின் திறம் போன்றதை ஒருக்காலுங் கண்டிருக்கமாட்டாய். இப்போதுதான் கண்டாயென்று கூறி அவனுக்கு ஆக்ரோசத்தை அதிகப்படுத்தினர். பொழுதடையும் நாழிகை வரவே, ஹார்முஜ், வெறுமனே திரும்ப மனமில்லாதவராய், கடவுளே, உம்முடைய உதவிதான் சரியான வுதவியென்று சொல்லி, புலிக்குட்டிபோற் பாய்ந்து தந்திரமாக அவனுடைய புயத்தில் தன் தலையை வைத்து இரண்டு கையாலும் அமுக்கிப் பிடித்து நெக்கி அப்படியே பூமியிற் கிடப்பாட்டினர். அந்த வீரனின்விதி அவன் தலைக்குமேல் நின்று தத்தளித்துக்கொண்டிருந்தது. லாஹீஜான் சுத்த வீரனை, ஹார்முஜ், இளஞ் சிங்கம் கொன்று போட்டதென்று வானம் சப்தமிட்டது. என்பேரில் பருவதத்தை வீழ்த்தினனெனப் பூமி ஒலமிட்டது. தேவதூதர்கள். ஹார்முஜாக்கு வெற்றிமாராயங் கூறினர்கள். ஹார்முஜ். அந்த பருவதம் போன்ற வீரனை ஆட அசையவிடாமற் கிடத்தி வேங்கைபோற் பாய்ந்து அவனின் நெஞ்சிலேறியுட்கார்ந்தார். அந்த வீரன் கெடி கலங்கி நடுக்கமுற்று, ஹார்முஜே, உன் கையால் நான் சிறைவாரப்படுவதைவிடப் பெரிய அவமானம் எனக்கு வேறொன்றுமில்லையாகையால் என்னை நீ கொன்று போடுவதே உத்தமமென்றுகரைந்தான். அச்சொல்லைக் கேட்டவுடனே, ஹார்முஜ் தன் குற்றுடைவாளால் அவ்வீரனின் நெஞ்சைப் பிளந்து வுயிரைப் பரலோகத்துக்குப் பயணமனுப்பினர். இதைக் கண்ட ஈரான் அரசர் மூச்சடக்கிக்கொண்டு முன் பின் பாராமல் வேகமாய் ஓட்டம் பிடித்தார். அவரின் எஞ்சிய பரிவாரங்கள் எங்கு போயினவோ, கடவுளுக்குத்தான் வெளிச்சம். நொடி நேரத்துக்குள், கூஜான்தேசத்தை வளைத்துக்கொண்டிருந்த ஈரான் படை வீரர்கள், தூசியெழுந்து வானத்தை மறைக்கத் தக்க விதமாகப் பிடரியிற் காலடிபடவோடிக் கடிகை நேரத்துக்குள் காணாது மறைந்து போய் விட்டார்கள்.

"கூஜான் அரசர்" ஆனந்த சாகரத்துள் முக்குளியிட்டு மற்றவர்களையும் மகிழ்கொண்டாடக் கட்டளையிட்டார். அளவுக்கு மிஞ்சிய ஆனந்தக் கூத்தாடினார்கள். படித்தார்கள். நடித்தார்கள். வெற்றிமுரசு வெகு மும்முரமாக முழக்கினார்கள். பயண முரசடித்தார்கள். படாம் வீடுகளுக்கு மீண்டார்கள். கடவுளைத் துதித்தார்கள். ஹுர்முஜை வாழ்த்தினார்கள். ஆலாத்தியெடுத்தார்கள். கண்ணேறு கழித்தார்கள். அன்றிரவை அமர்க்களத்திற் போக்கினார்கள். விடிந்தவுடனே, சகலருமெழுந்து கைகால் முகஞ் சுத்தி செய்து வுடையணிந்து, நவரத்தின கசிதமான வுடையணிந்த, ஜெய சிம்மமாகிய "ஹுர்முஜ்" முன்னணியில் வர, கூஜான் அரசரும், அவரின் மெய்க்காப்பாளரும் பின்னணியில் வர, வெகு ஆடம்பரத்துடன் கூஜான் கோட்டைக்குள் வந்து சேர்ந்தார்கள். சந்தோஷ கோஷ்டம் சப்தசாகரம் போன்றிருந்தது.

——:(*):——

## 11-ம் அதிகாரம்.

## ஹுர்முஜின் சந்திப்பும், குல்லின் அரவணைப்பும்.

————(:):————

(ஒன்பதாம் அதிகாரத்தில், போர்க்களத்தடைந்து வுளவறிந்து வருவதாகக்கூறி, இளவரசியிடத்தில் "ஹுர்முஜ்" விடை வாங்கிக்கொண்டு சென்றது, இக்கதையைப் பார்க்கும் யாவர் மனதிலும், கல்லிற்பதித்த அக்கரம்போன்றிருக்குமல்லவா?)

அன்றுமுதல், இளவரசி, படைக்களத்தில் நடைபெறுவனவற்றை அடிக்கடி தெரிந்துவந்து கூறத்தக்க வுளவர்களை நியமித்திருந்தாள். அவர்கள் ஒவ்வொருகடிகைநேரமும் அங்குநடக்கும் விஷயங்களை அறிவித்துக்கொண்டே யிருந்தார்கள். ஹுர்முஜ்,

க்னிகசாஸ்திரி வேடம்பூண்டு கூஜான் அரசரின் சமுகத்தடைந்து வந்திரவு பெற்றுக்கொண்டு. ஈரான் படைவீரர்களுடன் எதிர்த் தமராடத் தயாராகிவிட்டதையும். மஹா கிடாரிக்கத்துடனின்று யுத்த நடத்துவதையும், இளவரசி, கேள்விப்பட்டு, மனப்பதைப் புடையவளாகிக் கலங்கித் தன் சொல்லைமீறி அவர் சண்டைக்குச் சென்றதைப்பற்றி மனவருத்தமடைந்தவளா யிருந்தாள். தாதியைப்பார்த்து அம்மா தாயே, நீ சொன்னவையடங்கலும் உண்மையே, கேவலமானவர்கள் பேரிற் கிருபையைச் செலுத்துவது கெடுதியை விளைக்குமென்று முன்னோர்கள் கூறியது, கல்லிற் சித்தரித்த அக்ஷரத்துக்கிணையென்பதில் சந்தேகமில்லை. நான் அச்சொற்களைக் கவனித்திருந்தால் இவ்வாறான சஞ்சலத் தீயில் சிக்குண்டு கரிந்துபோக நேரிடாதல்லவா? நீ, கடவுளுக்காக என்பேரி லிரக்கமுற்று, படைக்களத்துச் சென்று வுளவறிந்து வந்து கூறினாய், என்ன வேலைக்காக அவர் சென்றார், அங்கு சென்றபிறகு எப்படிப்பட்ட வேலைக்கு இடைக்கட்டிவிட்டார், எப்போதும் கீழ்மக்கள் கீழ்மக்களே, அவர்களின் சொற்களும் இழிந்தவைகளே யென்றாள்.

அதற்கு, தாதியானவள் மகளே, பிரியநேசர்களின் அன்பை அவர்களைத் தவிர மற்றவர்கள் எவ்வாறறிவார்கள்? உனக்குத் தெரியும். தோட்டக்காவற்காரனின் புத்திரனுக்குத் தெரியும், எனக்கென்ன தெரியுமென்றாள். இளவரசி முகத்தைச் சுழித்தவளாக, தாதியே, இவ்விஷயத்தை யெவ்வாறு நீக்குவேன்? எவ்வாறாக, இந்த நன்றியறிதலை அந்தச் சண்டாளனிடத்துக் காட்டுவேன். அவர் குறைவின்றி யென்னிடத்திலடைந்தால் சரி. இல்லாது போனால் சாகும்வரையில் சஞ்சலக் கடலுள் ஆழ்ந்தேகிடப்பேனென்று விசனமாகக் கூறினாள். தாதி, யாதொன்றும் பேசாமல், "ஹுஷாங்" லாஹீஜான் வீரனுடன் எதிர்த்து நிற்கும் விஷயத்தை யோசித்தவளாயிருந்தாள். அதைக்கண்ட இளவரசி, ஏதோ கெடுதி சம்பவித்ததுபோலிருக்கிறது. அதனை

லேயே, தாதி, ஒன்றும் பேசாதிருக்கிறுளென்று நினைத்து வுண ர்வற்றுப் பூமியிற் புரண்டழுதாள். தலைமயிரைப் பிய்த்துக் கொ ண்டாள். தலையிற் புழுதியை வாரிப் போட்டுக் கொண்டாள். சுகதுக்கம் இன்னதென்பதை அறியாத்தவளானுள். தன்னை மற ந்து தரைமேல் மல்கார்ந்து படுத்துககொண்டு, ஆ, கடவுளே, உம்மையல்லாது வுதவி செய்பவர் யாவர்? அப்பரதேசி, தன் அறியாமையினுலேயே தன்னைத்தானே துன்பத்திலாக்கிக்கொண் டிருக்கிறுர். மேலும் சிறு போதினர். உலகத்தின் சிக்கல் இவ் வாம்றன்பதை அறியுஞ் சக்தியற்றவர். ஆகையால், நீர், அவர் பேரிலிரங்கிக் கருணைபுரிந்து அவரைக் காப்பீராக. இன்றேல் என் உயிரையும் போக்குவீராக, சஞ்சலமான சமையத்தின் வே ண்டுதல் சீக்கிரத்தில் நிறைவேறக்கூடும். அவர் படைக்களத்து க்கேகும்போது, நான் அவரை உம்மிடத்தில் பரஞ்சாட்டியனுப் பியபடியால் நீரே அவரைக்காப்பாற்றி என்னிடத்தில் சேர்ப்பி க்க வேண்டும். உம்முடைய ஆதரவே, யாவர் மனதிலும் உண் டுபட்டிருக்கிறது. அவருடைய புயத்தில் நான் கட்டிவிட்டிருக் கிற காணிக்கைப் பணத்தை யென் கையாலெடுத்து ஏழைகளு க்குப் பங்கிடச் செய்வீராக. அவர் வேண்டுமென்றே தன்னுயி ரைப் போக்கச்சென்றுர்போலு மிருக்கிறது. என்னுடைய மோக மல்லவா? அரை இவ்வாறுக்கியது. அந்தச் சண்டாளனுகிய ஈரான் அரசன் கெட்டுப்போகமாட்டானு? அவனுடைய தலை தெறிக்கமாட்டாதா? நெஞ்சு பிளக்கப்படாத? வயிறு வெடிக் காதா? அவன் செத்திருந்தால் யுத்தமுண்டாகாதே. இப்பர தேசியும் சாகத்துணிந்து முன்னேறமாட்டாரே யென்று கூறிப் பெருமூச்செறிந்தவளாக எழுந்து குளித்து முழுகி, பிணவுடை யணிந்து, தன் படுக்கையறைக்குட் புகுந்து, கதவடைத்துக்கொ ண்டு ஜன்னல் வழியாகத் தாதியை விளித்து, என் தாதியே, படைக்களத்திலிருந்து, ஹூர்முஜைப்பற்றிய துக்க சமாச்சாரங் கிடைத்தால் உடனே நீ இங்கு வந்து எனக்கறிவித்துப் போட் டுத் திரும்பிப் போய், பிரேதச் சடங்கிற் கான சகல தளபாடங்க

ளுடனும் மீள்வாயாகவென்று கூறி ஜன்னற் கதவையும் அடைத்துக்கொண்டாள.

கடவுளின் கருணையும், கன்னியின் வேண்டுகோளும் ஒத்துக்கொண்டது. இரண்டாவதுநாள் வேவுகாரர்கள் ஓடி வந்து ஹூர்முஜ், ஜெயத்துடன் வருகிறாரென்று செய்தியறிவித்தார்கள். உடனே தாதியானவள் அந்தப்புரத்துக்கோடி, கோட்டைமதில் மீதேறிப் படைக்களத்தின் பாதையைப்பார்த்தாள். ஹூர்முஜ், நவரத்தின மாலைசளணிந்து, விலையுயர்ந்த சரிகை வேலை செய்த பட்டுடையுடுத்தி, கிரீடந்தரித்து, வெகு சிங்காரமாகக் கோட்டைக்குள் வருவதைக் கண்டாள். அவள் சந்தோஷத்தால் கைகால் உதறலெடுக்க விழுந்தெழுந்து விரைந்தோடி, இளவரசியின் அறைவாசலை அடுத்து நின்று கதவைத் தட்டி, என் அருமந்த இளவரசியே, இதோ, தங்களின் பிரியநேசர், வெகு டம்பத்துடனும், ஜெயத்துடனும், சந்தோஷமுடையவராக வருகின்றார். தங்களுக்கும் அவருக்கும் சுபசோபனமுண்டாவதாக. கடவுளைத் துதிப்போமாக. தாங்களும் கதவைத் திறந்துக்கொண்டு வந்து பார்த்துக்களிகூருங்கள். கடவுளை வாழ்த்துங்கள். கேவலமான வுடையுடன் சென்றார். நூதனமான வுடையுடன் மீளுகிறார். சரிகைவேலைசெய்த பட்டுடையானது நக்ஷத்திரங்களைப் போல மின்னுகிறது. நவரத்தினங்களமைத்த கிரீடம் சூரியனுக்கு மேலாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. தங்களின் தந்தையரும் பரிவாரங்களும் வெகு ஆடம்பரத்துடன் அவரைச்சூழ்ந்து வருகின்றார்கள், அதைப்பார்த்தால் சந்திரனை நக்ஷத்திரங்கள் சூழ்ந்து கொண்டு வருவது போலிருக்கிறதென்று வெகுவாக வியந்து கூறினாள்.

தாதியின் இனிய வசனங்களை, இளவரசி, செவி சாய்த்துக் கேட்டு, சந்தோஷமும் சந்தேகமுங்கொண்டு, தாதியே, என் பேரில் உனக்கிருக்குங் கிருபையின் பேரிலாணையாக, நீ உண்மையைச் சொல்ல வேண்டும். எனக்கு வுன்னுடைய வார்த்தைக

ளில் நம்பிக்கையுண்டாகவில்லை. அவ்வளவு பெரிய போகசாலி யாக நான் அவரை மதிக்கவுமில்லை. நீ என் மனவாறுதலுக்காகக் கரவடம் பேசுகிறாய்ப்போலிருக்கிறது. வெளிப் பார்வைக்கு ஏழையாகக் காணப்பட்டாலும் நீ கூறியவாறு செய்ய, கடவுள் சக்தியுள்ளவரே யென்றாள். அதற்குந் தாதியானவள், மகளே, வீணுக்கு நான் ஏதுக்காகப் பொய் பேசவேண்டும். ண்கையால் கும்பிட்டால் கைக்காப்பு கும்பிட்டதாகக் கருதலாமா? என் பேச்சை நம்பாது போனால், கடவுளுக்காக, தாங்கள் கோட்டை மீதேறி, அரிவன் ஆடம்பரமான வரவையும், கடவுளின் கிருபை யையுங் கண்ணாற் கண்டு களி கூருங்களென்றாள். இதைக்கேட்ட வுடனே, இளவரசி, யெழுந்து வெளியில்வந்து கோட்டைமீதேறி ஹார்முஜின் சிங்காரத்தைக் கண்டு சந்தோஷமடைந்து, தாதி யைப்பார்த்துப் பரிகாசப் புன்னகை நகைத்து, தாதியே, இந்த மனிதன், அந்தத் தோட்டக்காவற்காரனின் புத்திரனைக் காண ப்படவில்லை. வேறே யாருமாக விருக்கலாம். ஆகையால் இன் னமும் நீ கூர்க்கப் பார்த்துத் தெளிந்தறிவாயாக. எனக்குண் டாயிருக்குஞ் சந்தேகத்தை நிவர்த்தியாக்குவாயாக. என்னுடைய வுயிர் பிரிந்து போகாமலும், உனக்கு அவமான முண்டாகாமலுமி ருக்க வழிதேடென்றாள்.

அதற்கு, தாதியானவள், மகளே, இதென்ன வேடிக்கை? நான்முன்பின்னறியாத இளங்கன்னிகையா? சூரியனையும் சந் திரனையும் ஒன்றென்று நினைப்பவளா? பறக்கும்பக்ஷிக்கு இரண்டு காலென்பதை அறியாதவளா? சூரியனிற் படிந்திருக்குங்களங்கம் இன்னதென்பதை யறிந்தவளாச்சுதே. என்னிடத்திலா? தங்க ளுடைய சமர்த்தைக்காட்டுகிறீர்கள். வாயை மூடுங்கள். வட்ட மிட்டுவையாளி போடுங்களென்றாள். இளவரசி, புன்சிரிப்புடன் மதில்மேலிருந்திறங்கி, நலங்கிட்டுக்குளித்து, நவரத்தினமாலைக ளணிந்து. விலையுயர்ந்த பட்டுடுத்து, வார்ந்துமுடித்துவாசனை பூசி, வளர்ந்து நிமிர்ந்த தனபாரங்களுக்குக் கச்சிட்டிறுக்கி, நெற்றியிற் பொட்டிட்டு, கண்களுக்கு அஞ்சனந்தீட்டி, கைகளில் வஜ்ர கடக

ம்பூட்டி, சிங்காரித்துக்கொண்டு, நெற்றியிற் புருவமேறச் சினங் கொண்டவளாகி, பசும்பொற் சிம்மாசனத்தில் பரிப்பெண்போன் றுவுட்கார்ந்திருந்தாள்.

கூஜான் அரசர், பரிவார சகிதமாகக் கோட்டைக்குள் வந்து சேர்ந்தார். அலங்காரமானதும், அரசர்களிருக்கத் தகுதியுடை யதுமானவொருமாளிகையில், ஹாமுஜை விடுதிவிடச்செய்தார். மற்றப்பரிவாரங்களும் அரசரும், அவரவரின் இருப்பிடஙகளுக்கு மீண்டார்கள். ஹார்முஜூம், இளவரசியும், பொழுது போவ தை யெதிர்பார்த்திருந்தார்கள், பொழுதடைந்தவுடனே, ஹார் முஜ், தன் பிரிய நேசியைக் காண்பதற்காக, அந்தப்புரத்துக்குச் செல்லும் வழியில் தாதியானவள் நின்றுக்கொண்டு, பிரிய நேசி யின் பிராணனை வவ்விக் கொண்டுபோய், கட்டளைக்கு விரோதஞ் செய்து கலக்கமுறச் செய்வது, எந்த வேதாந்திபின் உபதேசம்? எந்தப் புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கிறது? நீரும், மஹா வன் னெஞ்சர் தான். நல்லது நீர் போய், வாக்கு மாறலுக்குத் தக்க பிரதிபலனை அனுபவித்துக் கொள்ளுமென்று வில விலப்புட னுங் கடுகடுப்புடனும் உரத்துக் கூறினாள். அதனால், ஹார்முஜ் அதிக கலக்கங்கொண்டு பிரமித்து நின்றார். தாதி, அவரை யழைத்துக்கொண்டு இளவரசியின் சமுகத்திலானாள். நீதவானு க்கெதிரே, குற்றவாளி கை கட்டிக் கொண்டு நிற்பது போல வெகு மரியாதையுடனும் அச்சத்துடனும், இளவரசிக்கு முன் னால் "ஹார்முஜ்" நின்று வந்தனமளித்தார். இளவரசி கடை க்கண்ணால் அவரைப் பார்த்துவிட்டு யார் வந்தது யார்போன தென்று பார்க்காதவளைப் போலிருந்துவிட்டாள்.

"இளவரசி" அறவே ஹார்முஜின் முகத்தை யேறிட்டு ப்பார்க்காதிருந்ததால், அவர் அவளைப்பார்த்து, என் பிரிய நாயகி யே, இப்படிப்பட்ட கோபம் எதுக்காக வரவேண்டும்? இவ்வ ளவு தூரம் என் பேரில் கோபங் கொள்வதியல்பாகுமா? மனித ர்களுக்கு மறதி யெப்போதும் உடையதாகவே யிருக்கிறபடியால்

இப்பாவியின் தப்பிதத்தைப் பொறுத்து ரக்ஷிக்க வேண்டுவது தங்களின் கடமையென்று கூறித் தன்னை மறந்து தரையில் அடித்து வீழ்ந்தார்.

அதைக்கண்ட "இளவரசி" திடுக்குற்றுப் பதறி யெழுந்து பிரிய நேசரே, கடவுளுக்குகந்தவரே, கடவுளுக்காக, என் பிழையை மன்னித்து என் பேரில் கருணை கூருங்கள். என் பேரில் வைத்திருக்கும் ஆசையின் நட்பை அவலமாக்கிப் போடாதீர்கள். தங்கள்மீது நான் கொண்டிருக்கும் இச்சையின் கடூரத்தால் சுணக்கிலடங்காத கஷ்டத்தை யனுபவித்துறுகிறேன். தங்களை விட மேலானவர்கள் எனக்கொருவருமில்லை தங்களுக்கு நான் எவ்விதமான குறைவும் வருத்தத் ரோணிபுள்ளவளல்லள். தங்கள் பேரிலல்லாது வேறொருவர்பேரில் பராக்காகிறவளுமல்ல. காகத்துடன் பஞ்சவர்ணக்கிளி நேசஞ் செய்யுமா? தூக்கணாங் குருவி அடைக்கலானுடன் அன்பு பாராட்டுமா? திடீரென்று நான் தங்களுடன் வார்த்தையாடி விட்டால், என் பேரில் தங்களுக்கு இவ்வளவுதூரம் இச்சை மீறுமா? வாசனையைத் தேடுகிறது விடக்கையடக்கவல்லவா? கஷ்டத்தையனுபவிக்காதவர்கள், அல்லது, சிறு வயதினர்கள், பட்டபிறகல்லவா? தேர்ச்சி பெறுகின்றார்கள். அதுபோல் அறியாமையையுடைய நான், தங்களுக்கு நேரிட்ட துயரத்தால் உசார் பெற்றேன். கடவுளே துதிக்குடையவர். அவருடைய கிருபையால், தங்கள்பேரில் கொண்டிருந்த கவலையென்னுஞ் சிறு தூக்கததில்நின்றும் விழித்தேனென்றாள். இச்சொற்களை "ஹார்முஜ்" கேட்டவுடனே சந்தோஷத்தால் அகமலர்ந்து விம்மல் கொண்டதால் முகக்களைமாறி உணர்வற்றுப் பிரேதம்போல் பூமியிற் கிடந்தார்.

அவரிருக்கும் ரீதியை, இளவரசி பார்த்து சஹிக்கமாட்டாதவளாய் விரைந்து வந்து ஹார்முஜைப் பார்த்தாள். அவர் மூச்சுப் பேச்சில்லாதவரா யிருப்பதைக் கண்டு, என் பிரிய நேசரே, நான் உமக்குப் பலியானேன். நீர் உசாரிழந்தவரானீரேயென்று

புலம்பிக்கொண்டு நின்ருள். கடைசியில் இளம்பருவத்தின் வெட்கத்தையும், பதிவிரதாபுண்ணியத்தையும், முற்ற ஒழித்துவிட்டு மிருதுவான செவ்வல்லி மலர்போன்ற தன்னிரு கைகளால் ஹூர் முஜைத் தூக்கியுட்கார்த்தினுள். அவளுடைய கைகள், ஹூர் முஜின், சரீரத்திலும், முகம் கன்னத்திலும் பட்டதால், அவளுடைய திவ்யமான திரேகத்தின் வாசனை, ஹூர்முஜின், மூளையிற் சென்று படிந்துவிட்டது. அவ்வாசனைக்கெதிரே யிணை கூறத் தக்க புட்பமேயில்லாது போயிற்று. அதனுல், அவருக்கு உசாருண்டாயிற்று. தன் மனக்கவலைகள் யாவற்றையும் போக்கினுர், இதுதான் சமையமென்று, தன் கைகளை யிளவரசியின் விலாப்புறத்தில் மெதுவாகச்செலுத்தி, பொன்மலையுடன் பொருது ஜெயங் கொள்ளும் திடத்தைபுடைய சொக்கட்டான் காய்போன்ற, அவளின் சிமிழ் முலைகளிரண்டும், தன்னெஞ்சில் தைத்து, பிற்புறம் வந்துவிட்டதோவெனச் சந்தேகமுண்டு படுகிறவரையிலும் இறுகப்பிடித்து, கண்ணுடி போன்ற மிருதுவான அவளுடைய கன்னத்தில் மெல்லென ஒரு முத்தமிட்டுவிட்டார்.

அதனுல், இளவரசி, வெட்கமுற்றுச்சினந்து வெடுக்கென்று திமிறி, அவரின் கையைத் தட்டிவிட்டு, மச்சம் போல் துள்ளிப் பாய்ந்து தூரத்தில் நின்றுக்கொண்டு முகத்தைச் சுளித்து, ஏடா, துஷ்டா, திருடனைத் திருடுந் திருடா, இப்பதானே படைக்களத்திலிருந்து மீண்டாய். அவ்விடத்திய கஷ்டம் அடங்கமுன்னரேயே இன்பத்தை யிச்சித்துவிட்டையே. இன்பத்தின், பிரதி துன்பத்தை, இதோ, அனுபவிக்கப் போகிருய். என் அன்னையின் இன்னுயிர் பேரிற் சத்தியமாக, இப்படிப்பட்ட விஷயத்தை அணுவளவும் சஹித்திருக்க என்னுல் முடியாது. கட்டளைக்கு மீறி நடப்பது எனக்குக் கடுகளவும் அழகாக காணப்படவில்லை. பலே சபாஷ், இப்படிப்பட்ட செய்கைதானுக்கும், ஒழுங்குடனிருக்க நாம் செய்துக்கொண்ட வாக்குத் தத்தம். நீ மெத்தக் கெட்டவன். இது தான் சமையமென்று இப்படிப்பட்ட வேலை செய்யலாமா? இதை யாரிடத்தில் முறையிட்டுத்தொலைப்பேன்?

யாருடைய சமுகத்தில் என் தலையை மோதிக் கொள்ளுவேன். ஒரு தப்பிதந்தான் முந்திச் செய்துவிட்டாய். அதின் முடிவு இன்னதென்று தீர்மானமாக முன் இன்னொரு தப்பிதமும் செய்து விட்டாய். தண்ணீரும் மூன்று பிழை பொறுக்கு மென்பதில் என் தலையை மோதிக் கொள்வதே உத்தமமாகக் காணப்படுகிற தென்று கடிந்து கூறினாள்.

அதற்கு "ஹாமுஜ்" என் பிரிய நாயகியே, நான் சரியான வுணர்ச்சி பெற்றேனோ, இல்லையோ, என்பது சந்தேகத்திலிருக்கிறது. எனக்கு வுசாரில்லாதுபோன காலத்தில் என்ன நடந்ததோ, கடவுளறிவார். எனக்கு அறவே ஒன்றுந் தெரியாது. ஆனால் தாங்கள் என்னை நோயாளியாகவே விட்டுவிட்டு, பரிகாரஞ் செய்யாதிருக்கிறீர்கள். அன்றியும் ஏதேதோ, கிட்டூரமான வார்த்தைகளை நேருஞ் சீருமின்றிப் பேசுகிறீர்கள். இந்த வருத்தத்திற்கு நான் எந்தப் பக்குவத்தைச் செய்யப்போகிறேன். முடிவில் என்னுடைய கைவாளாலேயே என் தலையைத்தறித்தெறிவது வுத்தமமாகக் காணப்படுகிறதென்று கூறி வாளையுருவினார்.

அதைக்கண்ட இளவரசி, திடுக்குற்றுப் பதறி, கெக்கொலி யிட்டுச் சிரித்து, என்னுடைய பிரிய நேசரே, தங்களுக்கு சுப சோபனமுண்டாவதாக, தங்களின் நாட்டம் இன்னதென்பதை அறிய, வேட்கையுடையவளாயிருக்கிறேன். தாங்கள் யாருடைய போதனையின் பேரில் கணித சாஸ்திரி வேடம் பூண்டீர்கள்? என்னத்திற்காக இவ்வளவு சிரமத்துடன் யுத்தமாடினீர்கள்? தங்களுக்கு இராஜமேரையான வுயர்ந்த வுடைகளில ஆசையிருந்தால் நம்முடைய வுடுப்பறையில் எத்தனையோ உயர்ந்தவுடுப்புகள் தங்களின் கிருபையால் தூக்கப்பட்டிருக்கிறது. ஆட்டிய கையுடன் வந்து ஆசைப்பட்டதை யெடுத்துக் கொள்ள, என்ன தடையிருக்கிறது? இது புறத்தியாரின் வீடல்லவே. தங்களுடைய வீடுதானே யென்று ஆறுதல் கூறினாள்.

ஹூர்முஜ். வணக்கத்துடன், என் பிரிய நாயகியே, தாங்கள் இராஜபுத்திரியாகவிருக்கிறீர்கள். என்னுடைய குற்றத்தை மன்னிப்பீர்களாக. சகலமும் தங்களுக்கு வசப்பட்டிருக்கின்றன. தாங்கள் இந்த அரசாக்ஷியின் வஜ்ரதீபப்பீடமாயிருக்கின்றீர்கள். நானோ, கேவலமான ஒரு தோட்டக் காவற்காரனின் புத்திரனாயிருக்கிறேன். எனக்கு தாங்கள் கூறியபடிக்கான வேட்கையுண்டாக ஒரு வழியுமில்லையென்றார். அதற்கு, இளவரசி, நேசரே, தங்களுடைய நாட்டமென்னவென்று கேட்டால் ஏதேதையோ கூறுகின்றீர்கள். கடித்த வாய் துடைத்ததுபோல் கேள்விக்கு மறுமொழி கொடுத்தாலல்லவோ சந்தோஷமாயிருக்கும். தாங்கள் இங்கிருந்து வெறுங்கையுடன் சென்று, படைக்களத்தடைந்து வெறுமனே சனங்களை என்னத்திற்காக மடித்தீர்கள்? சொல்லுங்களென்று கேட்டாள்.

அதற்கு ஹூர்முஜ் என் கண் குளிர்ந்த வாழ்வே, ஈரான் படைவீரர்கள், தங்களின் படைவீரர்களுடன் எதிர்த்துப் போராடி ஜெயித்து, தங்களைச் சிறை வாரிக்கொண்டு போகவந்ததைக் கேள்வியுற்ற எனக்கு, அந்த வெகுமதியை நானே பெறவேண்டுமென்கிற ஆசை மீறியதால் இவ்வாறு செய்தேனென்றார். இளவரசி, அப்படிக்கிருக்க என்னிடத்தில் கரவடங்கூறிப் போவானேனென்றாள். ஹூர்முஜ், பெண்ணே, தாங்களே யோசித்துப் பாருங்கள். தங்களுடைய அருமையான வார்த்தைகளால் நான் எவ்வளவு அவதிப்பட்டவனாயிருக்கிறேன். இருந்தும் தாங்கள் என்மீதிரக்கி, என் மனப் பிணிதீர என்ன மருந்து கொடுத்தீர்களென்றார். அதற்கிளவரசி, போனது போகட்டும், இப்போது தங்களின் நாட்டமென்ன? வெளிப்படுத்துங்களென்றாள்.

ஹூர்முஜ், நானென்ன சொல்லுகிறது. தாங்கள் தான் சொல்லவேண்டும். இந்த அரண்மனையை விட்டு விட்டுப் போகிறது கூடாத விஷயமாயிருக்கிறது. நாம் எங்கே போனாலும் திரும்பி யிங்கேதான் வரவேண்டியதாக வந்து லபிக்குமென்றார்.

இந்தப்படி ஒவ்வோரிரவும் வெகுநேரம்வரையில் பரிகாசத்திலும் கைச்சரசத்திலும் காலத்தைக் கழித்து வந்தார்கள். கடைசியில் ஹூர்முஜ், தன் மன வருத்தத்தை அவளிடத்தில் வெளிப்படுத்தினார். நடக்கப் போகிற விஷயங்களைத் தெளிவா யெடுத்துக் கூறினார். பெண்ணே, இவ்வளவு சனங்களும் இரணகளத்தில் மடிய நேர்ந்தது என்னாலானதால் வேண்டுமென்றே நான் என் உயிரைப் பலி கொடுக்கப் படைக்களத்துக்குச் சென்றேன். என் வாளுள் மீதிருப்பதால் ஜெய வீரனுகத் தங்கள் சமுகமடைந்தேனென்றார். அதற்கிளவரசி, என் பிரிய நேசரே, என்னுடைய மனதிலும் அப்படிப்பட்ட எண்ணமுண்டானதால் தான் பொறுதியும், உறுதியும் இழந்தவளாக நேர்ந்ததென்று பலவாறு புலம்பியழுதாள்.



## 12-ம் அதிகாரம்.

## சக்கரவர்த்தி கப்பம் வேண்டலும், ஹூர்முஜ், கொண்டுசெல்லலும்.



கூஜான் அரசர், ஜெயம் பெற்றதால் மகிழ்ந்து, ஒரு வருஷத்திய திறைப்பணத்தைப் பிரஜைகளிடத்தில் கேட்காது வெகுமதியாக விட்டுவிட்டார். சிறுவர் முதல் பெரியவர்களடங்கலும் பெருமகிழ்ச்சிகொண்டாடக் கட்டளையிட்டு, தானும் சந்தோஷங் கொண்டாடிக் கொண்டிருந்தார். ஒருநாள் அரசர், உன்னதமான மேடையிலுட்கார்ந்து சங்கீதத்தில் பராக்கைச் செலுத்திக் கொண்டிருந்தார். நாட்டியப்பெண்கள் நடித்துக்கொண்டிருந்தார்கள். நட்டுவர்கள் கொட்டிக்கொண்டிருந்தார்கள். வித்வான்கள் பாடிக் கொண்டிருந்தார்கள். கவலையின் நாமமே காணக் கிடைக்காதிருந்தது. அப்படிக்கிருக்கும் சமையத்தில் "சக்கரவர்த்தியின் திருடம் வந்திருக்கிறதாகச் செய்தியறிவிக்கப்பட்டது. அந்

நிரூபம் கொண்டு வந்தவனை உள்ளே வரவழைத்து மரியாதை புரிந்து, அந்நிரூபத்தை வாங்கி முத்திரை விடுத்து வாசிக்கக் கட்டளையிட்டார்.

அதில், சூஜான் தேசத்தரசரே, வருஷக்கணக்காக நமக்குத் திறையளக்காதிருக்கிறீர். நான்கு வருஷத்தின் திறைப்பணம் உம்முடைய தலையில் சுமத்தப்பட்டதாயிருக்கிறது. நீர் ஈரான் அரசரை ஜெயித்ததால் தன்னை மறந்திருப்பது போல் என்னையும் மறந்து விட்டீர். உம்மைப்போன்ற கோடானுகோடி சிற்றரசர்கள் என் கொடிக்கீழ் கப்பங்கட்டி வருகிறார்கள். நான் அவர்களுக்குக் கட்டளையிடுவேனேயானால் நீர் தக்கபடி சிக்ஷிக்கப்படுவீர். உமக்கு, சுக ஜீவிப்பின் பேரில் ஆசையிருக்கும் பட்சத்தில் சென்ற நான்கு வருடத்தின் திறைப்பணத்தையும், யாதொரு தரமதம், தடை, குறைவு முதலானவையின்றி சீக்கிரம் அனுப்பிவையும். குடிகள் பேரிலும் போர்வீரர்கள்பேரிலும் கிருபையாயிரும். ஒரு சல்லிக்காசு முதல் குறையும் பட்சத்தில் சக்கரவர்த்தியாகிய நாம் ஒருவரையுஞ் சுவனிக்கமாட்டோம். உம்முடைய பட்டணத்தைப் பாழாக்கிப்போடுவோம். இது சரதமென்று எழுதப்பட்டிருந்தது.

சூஜான் அரசர், அதைக் கேட்டவுடனே, ஆழ்ந்த ஆலோசனையிலாகிக் கலங்கித் தன்னை மறந்து வுயிர்போகுந் தறுவாயிலாகி, மந்திரிமார்களை வரவழைத்து, என் உயிர்த்துணைவர்காள், சகலவிதத் துன்பங்களையும் சஹித்து ஒருவாறு முன்னுக்கு வந்தோம். இத்திறைப்பணத்தின் சங்கடிப்பை எவ்வாறு நீக்குவோம். ஒரு சல்லிக்காசேனுங் குறையாமல் நாம் அனுப்ப வேண்டியவர்களாயிருக்கிறோம். குறைந்தால் நம்முடைய கழுத்தில் கத்தியின் ஊறேயன்றி வேறில்லை. நான்கு வருஷத்தின் திறப்பணத்தையும் ஒருமிக்க அனுப்ப நாம் எங்கிருந்து சக்திபெறுவோம். இதற்கென்னயோசனையென்று கேட்டார்.

 A. T. [illegible]

அதற்கு, மந்திரிமார்கள். எஜமானே, தங்களிடத்திலிருந்த, இரத்தினதிகளடங்கலையும் ஹூர்முஜுக்கு வெகுமதியளித்துவிட்டீர்கள். சேமநிதிகளடங்கலும் யுத்தச்செலவில் செலவாகிவிட்டது, தற்போது பொக்கஷமென்னும் பேர்மட்டிலுந்தானிருக்கிறது. தாங்கள் எவ்வாறு கட்டளையிடுகின்றீர்களோ அவ்வாறு செய்யக்கடமைப் பட்டவர்களாயிருக்கிறோமென்று வணக்கத்துடன் கூறினர்கள்.

கூஜான் அரசர், மந்திரிமார்களே, அப்படியானல் நாம் கொல்லப்படுவதில் சந்தேகமில்லை. ஒரு தொகைப்பணத்திற்காக நம்முடைய வுடலடங்கலும் பூமியிற் புதைக்கப்பட நேர்ந்திருக்கிறது. அப்படியாவதை விடநாமேநஞ்சையுண்டு மரணத்தை யனுபவிப்பதுமேன்மையாகக் காணப்படுகிறது. அதனல் நம்முடைய பிரஜைகள் உயிர்ச்சேதமடைய மாட்டார்கள். இவ்வூரை யாருக்குக்கொடுக்க, நம் சக்கிரவர்த்திக்குப் பிரிய மேற்படுகிறதோ, அவர்களுக்குக்கொடுத்து ஆக்ஷிபுரிந்து வருவாரென்றார். மந்திரிமார்கள் மிகவும் தட்டழிந்தவர்களாகி, இரண்டுநாள் கெடுவாங்கிக்கொண்டு, ஒரு தனித்ததலத்திற் போயிருந்து யோசித்து, தத்தம் வீடுகளிலிருக்கும் சகல வஸ்துக்களையும் விற்றுமுதல் செய்து திறையளப்போமெனத் தீர்மானித்து யாவற்றையும் விற்றுமுதல் செய்தார்கள்.

இரண்டு வருஷத்தின் பணந்தான் சேர்ந்தது. சக்கரவர்த்தி அரைவாசிப் பணத்தை ஒப்புக்கொள்ளமாட்டாரே, யிதற்கென்ன செய்கிறதென்று மறுபடியும் ஆலோசிக்கத் தொடுத்து ஹூர்முஜ் பேரில் நம்முடைய அரசர். முழுப் பிரியத்தையும் செலுத்தியிருக்கிறபடியால் சேர்ந்திருக்கிற பணத்தை அவர் வசங்கொடுத்து, நாமுக்கனுப்புவோம். குறைச்சலான தொகை கொண்டு வருபவரைச் சிரச்சேதஞ் செய்வதாக, சக்கரவர்த்தியார் எழுதி யிருக்கிறபடியால் சேர்ந்திருக்கிற பணத்தை அவர் வசங் கொடுத்தனுப்புவோம். குறைச்சலான தொகை கொண்டு

வருபவரைச் சிரச்சேதஞ் செய்வதாக, சக்கரவர்த்தியார், எழுதியிருக்கிறபடியால், ஹாமுஜை, நிக்ஷயமாக வெட்டி யெறிவார். அதனால் நம்முடைய மனவெரிச்சல் நீங்கி அரசரிடத்தில் நேசமுடையவர்களாயிருப்போம். அல்லது ஹாமுஜ் பேரில் இரக்கமுற்று ஒப்புக்கொள்ளுவாரேயானால் நாமுடங்கலும் காப்பாற்றப்பட்டவர்களாவோம். இரண்டு விதத்தாலும் நமக்கு நயமிருக்கிறதென்று தீர்மானித்து, சேர்ந்திருக்கிற பணத்துடன, கூஜான், அரசரிடத்தில் வந்து வணக்கததுடன் நின்று வணங்கி, எஜமானே, இதைவிட அதிகமான பொருள் சேகரிக்க எங்களுக்கு ஒருவித வழியமில்லை, எங்களின் குற்றத்தை மன்னிக்கிறதானல் தகுந்த ஒரு யோசனையிருக்கிறது அதுபோல் நடத்திப் பார்ப்போம். என்று கூறினார்கள்.

அரசர், அதென்ன யோசனை, தீவிரமாகக் கூறுங்களென்றார். எஜமானே, தற்போது, ஹாமுஜின், கிரகம் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. அவருடைய பார்வை சகல பேரையும் வசப்படுத்தக் கூடியதாயிருக்கிறது. அவருடைய நாட்டம் நிறைவேற்றப்பட்டதாக விருக்கிறது. வீரத்தில் மஹா திடசாலியாயிருக்கிறார். ஒண்டியாகச் சென்று ஈரான் படைவீரர்களடங்கலையும் சர்வ சங்காரஞ் செய்து மீண்டதைக் கண்ணாரக் கண்டிருக்கிறோம். தங்களுக்கு அவர் பேரில் பூரணக் கிருபை யுண்டாக அவர் நடந்துக்கொண்டதைத் தாங்களறிந்து மிருக்கிறீர்கள். ஆகையால் அவர் சக்கரவர்த்தியவர்களை வசப்படுத்தி, எந்தவிதத்தாலாவது. பாக்கிப்பணத்துக்குக் கெடுப்பெற்றுக் கொண்டு வருவாரென்று வுறுதியாக நம்புகிறோமென்றார்கள்.

அதற்கரசர், ஜனங்களே, நல்ல யோசனை சொன்னீர்கள். என்னுடைய உயிரைக்காப்பாற்ற வழிதேடுவதில் தலையிட்டு ஆயிரக்கணக்கான ஆலோசனையிலிருக்கிறேன். என் சீவனுக்கு, இடுக்கண்விளைக்கும் விஷயத்தையே நீங்கள் எடுத்து கூறுகிறீர்கள். என்னுடைய வுயிர் கண்டத்தில்நிற்கிறது. நீங்கள் மறுமுறையும்

அச்சொல்லை வாயிலெடுப்பீர்களேயானால் உடனே என்உயிர்பிரிந்துவிடுவதில் ஐயமில்லை. ஹாமுஜை, என் உயிர்க்குயிராக நான் பாவித்து வருவதை நீங்கள் சற்று சீர்தூக்கி யோசித்துப்பாருங்கள். அவரை நான் போகவிடுவேனா? அவர் செய்த பெரியநன்றிக்கு இதுதானா பிரதிநன்றி.? அபாயநேர்ந்தால் அவரைத்தானா பலிகொடுக்கவேண்டும்? கடவுள்பேரிற் சத்தியமாக ஒருக்காலும் அவரை விடமாட்டேன். உங்களில் யாரேனுந்தான் போகவேண்டுமென்றார்.

மந்திரிமார்களுக்கு வந்ததையா சஞ்சலம். வயிற்றைப் பிசைந்தார்கள். நெஞ்சிலறைந்து கொண்டார்கள். தரையில் விழுந்து புரண்டு தாரை தாரையாய்க் கண்ணீர் வடித்தார்கள். பிறகு எழுந்து நின்று அரசரைப் பணிந்து கைகூப்பி, எங்கள் நாயகமே, எங்களுடைய சீவன் தங்கள் கைவசத்திலிருப்பதால், எங்களைத் தங்களின் சிறப்பான கையால் வெட்டி யெறிந்துவிடுங்கள் தங்கள் பாத தாமரையின் பேரிற் சத்தியமாக, எங்களுக்கு நன்றி கெட்டவர்களென்ற பேர் கிடைத்தாலுங் கிடைக்கட்டும். ஒருக்காலும் நாங்கள் அங்கே போகமாட்டோமென்று விண்ணப்பஞ் செய்தார்கள். அதனால் அரசர், பெருந் திகில் கொண்டார். உயிர் பதைத்து வுடலை விட்டோடப் பார்த்தது. அரசரின், காரியத்தைக் கண்டவொருவன் பிடரியிற் காலிடபடவோடி, ஹாமுஜைக் கண்டு வந்தனமளித்து, எஜமானே, தாங்கள் இவ்வாறு வுட்கார்ந்துக் கொண்டிருந்தால் ஞாயமாகுமா? கொலுக் கூடத்தில் நடக்கும் அமளி துவளியைப் பார்த்தால், யுக முடியப் போகிறதென்றே சொல்லக் கூடியதாயிருக்கிறது. தாங்கள் எழுந்து வந்து பார்த்தாலல்லவோ அதன் உண்மை யின்னதென்று விளங்குமென்று படபடத்துக் கூறினான்.

ஹாமுஜ், திகில் கொண்டவராக எழுந்தோடி கொலுக்கூடத்துக்கு வந்தார். அரசரின் பாதத்தில், மந்திரிமார்களடங்கலும் விழுந்து கிடக்கிறார்கள். அரசரோ, தன்னிரு கைகளால்

தலையிலும், நெஞ்சிலும் மாறி மாறியடித்து அழுதுக் கொண்டிருக்கிறார். அது அவருக்குப் பெரிய வியப்பாகக் காணப்பட்டமையால் கிட்டநெருங்கி, எஜமானே, இதோ, தங்களின் சிறறடிமை தட்டழிந்து சாகப் பார்க்கிறேன். சீக்கிரம், இந்த அல்லோல கல்லோலத்தின் காரணத்தை வெளிப்படுத்தி அடிமையைக் காப்பாற்றுங்களென்று வெகு நயினமாக அரசரை வேண்டி நின்றார்.

அரசர், ஹாறூமுஜின் சப்தத்தைக் கேட்டவுடனே தலை நிமிர்ந்து அழுகையை நிறுத்தி, ஹாறூமுஜைக் கட்டியணைத்து நெற்றியை முகந்து, மகனே, இந்த வீரமிழந்த பேடிகளாகிய உலுத்தர்களடங்கலும், ஒன்று சேர்ந்து, சக்கரவர்த்தியவர்கள் சமுகத்துக்கு, திறைப்பணங் கொண்டு போகப் பயந்து வும்மையே அனுப்பச் சொல்லி யோசனை கூறினார்கள். நான் அவர்களில் ஒருவரைப் போகக் கட்டளையிட்டேன். அதனாலேயே இந்தப்படியான அமளியாய்க் கிடக்கிறதென்றார்.

ஹாறூமுஜ், அவரைப் பார்த்து நாயகமே, இதற்குத்தானோ? இவ்வளவு கலக்கமும் அழுகையும், ஏன் இதைப்பற்றித் தாங்கள் மெத்த வியசனப்படுகின்றீர்கள். சாகத் துணிந்த தங்களுடைய சிற்றடிமை யிதோ போகத் தயாராயிருக்கிறேன். அஃதென்ன, ஒரு கஷ்டமான வேலையா? கட்டளையை யெதிர் பார்த்திருகிறேனென்றார். அதற்கு கூஜான் அரசர், மகனே, உன்னுடைய பிரிதல் என் சீவன் பிரிவது போலாகிறது. உனக்கு நான் விடை கொடுத்தனுப்புவது மரணத்தை யெதிர் பார்ப்பது போலாகிறது.

என் உயிர் போனாலுஞ் சரியே, என்னுடைய பட்டணம் பாழாய்ப் போனாலுஞ் சரியே, என் மனசார, வுன்னை அங்கு போகவிட ஒருக்காலும் நான் பொருந்தமாட்டேன். பிரகாசம் பொருந்திய என் கண்மணி போன்ற வுன்னுடைய பழியை ஒருக்காலும் நான் சுமக்கமாட்டேனென்றார்.

ஹார்முஜ். என் தந்தையரே, மெத்த நல்லது. என்னுடைய பிரயாணத்தில் நயமிருக்கிறபடியால் சொற்ப நாளைக்கு எனக்குத்திரவு கொடுத்தனுப்புங்கள். இந்த வேலை என்னாலல்லாது, மற்றவர்களால ஒருக்காலும் ஆகமாட்டாது. தங்களுடைய கிருபா கடாக்ஷத்தால் நான் போய் அவ்விடத்திய வேலையை முடித்துக்கொண்டு மீளுகிறேன். தாங்கள் என்னைப் பயணமனுப்பத் தாமதப்படுத்துவீர்களேயானால், அதிக நாள் கடந்துவிட்டதின் பேரில், சக்ரவர்த்தியவர்களுக்கு நம் பேரில் அதிக கோபமுண்டாகிவிடும். தாங்களும் காப்பாற்றப்படமாட்டீர்கள். நாங்களும், அநியாயமாகக் கொல்லப்படுவோம். அதைப்பற்றியே நான் மெத்தக்கலக்கமடைந்தவனாயிருக்கிறேன். எனனுடைய முரண்டாட்டத்தின்பேரில் மன்னிப்பளித்து எனக்கு விடை தரத்தான வேண்டி நின்றார்.

அரசர், ஹார்முஜின் பிடிவாதவார்த்தையைக்கேட்டு ஆலோசனைக்கடலில் முக்குளியிட்டெழுந்து அப்பிடிவாதத்தை மறுத்து நிறுத்த வழியில்லாமல், அவரைப் பார்த்து, நான் எவ்வளவாக யோசித்தும் பிரயோசனப்படவில்லை. உமக்கு விடை கொடுத்தனுப்பவேண்டியதாகவே வந்து நேருகிறது. எழுதப்பட்ட விதியைத் தட்டி விலக்க ஒருவருக்கும் சக்தியிராது. கற்பனைப்படியே யாவும் நடைபெறும். கடவுளின் காவலில் போய் விட்டு வருவீராகவென்று ஆசிகூறி, லிகிதர்களில் கைதேர்ந்த ஒருவரையழைத்து சக்கரவர்த்தி யவர்களுக்கு திருமுமெழுதி முத்திரை வைத்து மஞ்சள்பட்டிற் பொதிந்து, ஹார்முஜின் கையிற் கொடுத்துப் பயணமனுப்பினார்.

அந்திருபத்தின் வாசகமாவது, கடலிலும், கரையிலும் நெறி நீதி நடத்துஞ் சக்தியையும் தயாள குணத்தையும், பிரஜைகள் பேரில் உருக்கத்தையும், சகல சற்குணங்களையும் உடைய, அலக்ஜாண்டர் சக்கரவர்த்தியவர்களின் பாத தாமரைகளின் காணிக்கையாக, கூஜான் தேசத்தின காவற்காரனாகிய, தங்களுடைய

அடிமையெழுதிக்கொள்ளும் விண்ணப்பப் பத்திரம், என்னவெ ன்ருல், தங்களின் சிறப்பான கையொப்பமிடப்பட்ட திருமுகம் வரப்பெற்று வாசித்தோர்ந்தேன். நான் எக்காலத்திலும் தங் கள் கட்டளைக்கு ஒழுகி நடப்பவனுகவிருந்தும், எனக்குச் சம்ப வித்த சில விஷயங்களால் தங்களுடைய ஏவற்படி நடந்துக்கொள் ளக் கூடாதவனுகிச் சிலகாலம் இருந்துவிட்டபடியால், அக்குற்ற த்தைத் தாங்கள் மன்னிப்பீர்களென்று நம்பி யிருக்கிறேன். திடீரென்று, ஈரான் அரசர் படையெடுத்து வந்து, யாதொரு குழ ப்பமுமில்லாதிருந்த இந்த வூரைக் கலக்கி யென்னுடன் யுத் தந்தொடுத்தார். அவர் அநியாயமாக என்னுடன் போராட வந் தபடியால் அபஜெயமடைந்துப் பின் வாங்கி, ஈரானுக்குப் போய் விட்டார்,

பின்பு நான் சீரழிந்த பட்டணத்தைச் சீர்திருத்துவதில் பராக்காயிருந்துவிட்டேன். அதனுல் தங்களுக்குத் திறைப்பண மனுப்ப வேண்டுமென்னும் ஞாபகமிருந்தும் கூடாமையாகி விட் டது. அதனுல் தங்களுக்கு என்ன மறுமொழி கொடுக்கிறதெ ன்கிற ஆலோசனையில் முங்கியவனுக கலக்கமுற்றிருக்கும்போது தாங்கள் அனுப்பிய திருமுகம் வந்து சேர்ந்தது. அதைப்பார்த் தவுடனே முன்னிலும் பதின்மடங்கு எனக்குக் கவலை மூண்டு தங்களுடைய அச்சம் என் மனதைக் கலங்கச் செய்து விட்டது. மஹா கஷ்டத்தின் பேரில் இரண்டு வருஷத்தின் திறைப்பணத் தைச் சேகரித்து, கூஜான் தேசப் படைத்தலைவராகிய ஹூர்முஜ் வசம் கொடுத்துத் தங்களின் திருச்சமுகத்துக் கனுப்பியிருக்கி றேன்,

இந்த மனிதன் என் அரண்மனைப் பாதுகாவலருள் முதன் மையானவர். அழகில் இவருக்கிணை ஒருவருமிருக்கமாட்டார்க ளென்று வுறுதியாய் நம்புகிறேன். இவருடைய சிறந்த அழகை த்தாங்கள் கண்ணுற்று, இவருக்காக என்மீதிரங்கி, மீதி யிருக்கப் பட்ட இரண்டு வருஷத்தின் பணத்திற்கும் கெடுத்தர வேண்டும்

தங்களின் கட்டளை யெவ்வாறு பிறக்கின்றதோ அவ்வாறு நடக்கக் காத்திருக்கின்றேன். இவருடைய முகத்தை யின்னொரு முறை நான் காணுகிறவரையில், என்னுடைய வுடலில் உயிரிருக்கிறதென்று கூற, எனக்கும், ஏனையோருக்கும், ஒருக்காலும் இடம் பாடாகாதென்பதே.

அந்நிரூபத்தை, ஹாரூம்றுஜ், வாங்கிக்கொண்டு, அரசரிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்டு தன் இருப்பிடத்துக்கு மீண்டார். ஆனால் தன் மனதுக்குள், நான் என்னவேலை செய்தேன். என் காலில் நானே விலங்கிட்டுக் கொண்டேன். இளவரசியிடத்தில் என்ன சொல்லித் தீர்ப்பேன். அவளைப் பிரிவதின் கவலையை எவ்வாறு சஹிப்பேன்? எந்த வழியில் என் மனக் கவலையை யெடுத்தெறிவேன். உரோசம் அதிகரித்துவிட்டால் ஒன்றையும் கவனிக்கக் கூடவில்லையே. கண்மறைந்து, மண் முதல் புலப்படாமற் போய்விடுகிறது சகஜமாகவே யிருக்கிறதென்று பலவாறு சிந்தித்துக்கொண்டிருந்தார்.

இங்கே யிப்படியிருக்க, தாதியானவள், ஹாரூம்றுஜின் சமாச்சாரத்தைக் கேட்டுக் கலங்கி நிறம் மஞ்சணித்து வுசாரற்றவளாக இளவரசியிடத்துக்கோடிச் சென்று, மகளே, ஹாரூம்றுஜ், ரோமாபுரிக்குப் போகவிருக்கிறதை நீ அறிவையோ? வென்று கேட்டாள். அதற்கு, “இளவரசி” தாதியே ஒருக்காலும் அப்படிக்கிருக்கமாட்டாது. சனங்களின் கட்டுவார்த்தையாயிருக்கக் கூடுமென்றாள், “தாதி” சிரித்துக்கொண்டு சும்மாயிருந்து விட்டாள். பொழுதடைந்தவுடனே, இளவரசியிடத்துக்கு, ஹாரூம்றுஜ், வந்து சேர்ந்தார். சமாச்சாரம் என்னவென்று கேட்டாள். அவர் மிகுந்த சாந்தத்துடன் சொல்லிக் காட்டினார்.

“இளவரசி” குளிர்ந்த மூச்செறிந்து, பிரிய நேசரே, சாகவும் விடமாட்டீர். பிழைக்கவும் விடமாட்டீர். ஒவ்வொரு சமயத்திலும் ஒவ்வொரு நூதனமான செய்கையை வெளிப்படுத்துகி

றீர். சூஜான், அரசர், உமக்கென்ன வுதவியைச் செய்து போட்டாரென்று வெறுமனே நீர் உயிர் கொடுக்க முயலுகிறீர். வெறும் பகையைக் கைவிலைக்கு வாங்குகிறீர். உம்முடைய காரியம் இன்னதுதானென்று சொல்ல என்னுலாகாது ஆனல் உம்முடைய சீவனை, நீர் கைசழுவிவிடுவதுடன், என்னுயிரையும் வீணுகப் போக்கத் துணிந்தீரென்று மட்டில் தடையின்றிக் கூறுவேன். என்னுடைய நனறியறிதல் உமக்கு வேண்டும் போலிருநதால் இவ்வளவு குழப்பங்களையும் நீர் செய்யமாட்டீர். அதிகமாய்ப் பேசுவதில் பிரயோசனமில்லை. இதோ நான் சாகத்துணிந்தவளாக வுமக்கெதிரிலிருக்கிறேன். நீர் என்னைக் கொன்றுபோட்டு வுமக்கு எங்கிருக்கப் பிரியமோ அங்கிரும். றாமுக்குப் போகிறதானுலும், ஷாமுக்குப் போகிறதானுலும் உம்மைத் தடுப்பவர் யாருமில்லை. நான் இவ்வுலகத்தை விட்டு எமலோகத்துக்குப் பயணப்படுகிறேனென்று கூறி, உசாரிழந்து, அபபடியே மல்கார்ந்து படுத்து, சூத்திரப் பிரதிமை போன்று கிடந்தாள். வெளிப் பார்வையில் அவள் இறந்துபோனவளாகவே காணப்பட்டாள்.

ஹாரூமுஜ், அவளின் கெதியைப் பார்த்துப்பயந்து நடுக்கங் கொண்டார். ஈரல் தெறிதது வாயால் இரத்தம் பீறிட்டுப் பாய்ந்தது. அப்போது அவர் உரத்த சப்தமிட்டு, ஆ, என் பிரிய நேசியே, நான் சூஜான் தேசத்தைவிட்டு ஒரு அடியெடுத்து அப்புறம் போகிறதில்லையென்று வுறுதியாய்க் கூறுகிறேன். தங்களின் நனறியறிதலின்பேரிற் ஆணையாகத் தங்களை நான் ஒரு நொடி நேரமாகிலும் மறந்திருக்கிறதில்லையென்று சத்தியஞ் செய்கிறேன. தங்களுடைய கோபத்தைப் போக்கிக் கண்ணைத்திறந்து பாருங்கள். நான் சீவித்திருக்க வேண்டும் போலிருந்தால் சீக்கிரத்தில் என்னுடன் பேசுங்களென்று கூறி ஓலமிட்டழுதார்.

“ குல் இளவரசி ” ஹாரூமுஜின் சொல்லைக் கேட்டவுடனே தன் நாட்டப்படி கிடைத்ததென்று மகிழ்ந்து, கோபத்தையும் கவலையையும் போக்கி, உசார்பெற்று, போனவுயிர் மீண்டவாறுகி

யெழுந்துட்கார்ந்தாள். என்றாலும், அப்போது அவள் மனம் மிதமிஞ்சிய துக்கத்தை அனுபவித்திருந்தபடியால் அவள் அன்று நண்பகலான பிறகு தான் சரியான வுணர்ச்சி பெற்றாள். "ஹார்முஜ்" அவளைப் பார்த்து, பெண்கள் திலகமே, ஒருவர் பேரில் இச்சை வைத்தால் அதற்கும் ஒரு அளவிருக்கவேண்டும். பொறுதியும் வேண்டும். அதில் தான் இன்பமிருக்கிறது. அவ் விஷயத்தில் எவ்வளவு பாரிய கஷ்ட நிஷ்டூரங்கள் சம்பவித்தாலும், கலங்கவும் கைசேதப்படவுங் கூடாது. கணக்கிலடங்காத கஷ்டத்தை யனுபவித்தும் நான் தைரியத்தைக் கைவிட்டதுண்டுமா யோசித்துப் பாருங்களென்று ஆறுதல் கூறினர்.

"இளவரசி" என் பிரிய நேசரே! தங்கள் மனம் கல்லே, தங்களுக்குக் கண்ணேறுபடாமல் கடவுள் காப்பாராக. சுபசோபனமுண்டாவதாக. நித்திரையிற் கூடத் தாங்கள்வாய் புலம்பாத வன்னெஞ்சையுடையவர்களா யிருக்கின்றீர்கள். என்னுடைய மனம் பளிங்கியைவிட மெல்லினமானது. காற்றின் வாடைப்பட்டாலும் நுறுங்கிப் போய்விடுகிறது. எவ்வளவாகப்பொறுதி கூறினாலும் அது இதப்படுகிறதில்லையென்றாள். கடைசியாக, "ஹார்முஜ்" என் மனங்கொண்ட மாணிக்கமே; இரவு குறுகிவிட்டது. பிரிதலின் வார்த்தை கொஞ்சமிருக்கிறது. அதை சுருக்கிக்கூறுகிறேன். தாங்கள் அதைச் சீர்தூக்கிப் பார்த்து விடைதரவேண்டும். நாமோ இருதலைக் கொள்ளியின் நாப்பணுறும் எறும்புபோன்றிருக்கிறோம். மனிதர்கள் துன்பத்தில் சிக்குண்ட காலத்தில் மீட்சிபெறுவதையே முதன்மையாய்க் காணுவார்கள்.

ஆகையால் நான் அங்கு போகாதிருப்பேனேயானால், தங்கள் தந்தையர் முதல் மற்றவர்களடங்கலும், சொல்லப்படுவது சரதம். அப்படிவராமல் கடவுள் காப்பாராக, நான் சக்கிரவர்த்தியிடத்திற் சென்று அவருடைய மனதை மெழுகாக்கி வசப்படுத்திக்கொண்டு அதிசீக்கிரததில் தங்கள் சமுகம்வந்து சேருகிறேன். கடவுளின் கிருபையாலும் என்னுடைய தந்திரோபாயத்தாலும்

கோடானுகோடி ஜனங்களின் உயிர்ச்சேத மடையாதிருக்கச் செய்கிறேன். பாருங்களென்றார். இளவரசி ஆம், ஆம். எல்லாம் சரியே, இந்த வேலை, மகா கொலை பாதகர்களாகிய மந்திரிமார்களின் கரவடத்தாலுண்டுபட்டதென்பதில் சந்தேகமேயில்லை. தாங்கள் என் சொல்லைக் கேட்டிருந்தால் இவ்விதமான கஷ்டங்களிலெல்லாம் தலையிட நேராது.

என் தந்தையரின் நேசத்தைப் பெறவு மாட்டீர்கள். மந்திரிமார்கள் வயிற்றெரிச்சற் படவுமாட்டார்கள். தாங்களும் நானும் தனித்த தலத்திற் போய்ச் சுகத்துடனிருக்கலாம். நடக்க வேண்டியது நடந்துவிட்டது. இனிமேல் நான் தடுப்பதால் நின்றுபோகிறது மில்லை என்னுடைய பிடிவாதத்தில் பிரயோசனமுமில்லை. இச் சஞ்சலத்தைபும் சுமந்துக் கொண்டு இன்னமும் சில காலத்தை போக்குகிறேன். என்றாலும், தாங்கள் என்னை மறந்து விடுவீர்களோ, மண்ணைப் மடிந்து போகச்செய்வீர்களோ, சீக்கிரம் வந்து சேர்வீர்களோ, எனக்கு யாதொன்றுந் தோற்றவில்லையேயென்று கரைந்து கூறினாள்.

ஹார்முஜ், கண்ணீர் வடித்தவராக, ஆ, என்னுயிர்த்துணைவியே! தாங்கள் எப்போதும் இப்படிப்பட்ட வார்த்தையைத்தான் துணிந்து கூறி விடுகின்றீர்கள். அதனால் நான் உயிரிழந்த பிணத்துக்குச் சமதியாகிறேன். இப்போது நான் தலையிட்டிருக்கிற விஷயம் முக்கியமான ஒன்றாயிருக்கிறது. அதை மறுத்து நிற்க சக்தியில்லாதவனாகவு மிருககிறேன். மூச்சு விடுந்தோறும் தங்களுடைய ஞாபகமாகவே யிருக்கிற நான் தங்களையெவ்வாறு மறக்கப்போகிறேன். மனதிற் படிந்திருக்கும் கரும்புள்ளியை அகற்றியவர்கள் யாரேனுமுண்டா? என் மனதிற்படிந்திருக்கும் தங்களின் காதற்புள்ளியை நான் எவ்வாறு நீக்குவேனென்பதைத் தாங்களே நன்றாய் ஆலோசித்துப்பாருங்கள். நான் எங்கிருந்த போதிலும். என் மனமென்னும் தீபஸ்தம்பத்தில் என் கண்ணீராகிய எண்ணெய்யைவிட்டு விரகவேதனையென்னும்

தீயைக் கொளுத்தி, என் உடலாகிய விறகை வாட்டிக்கொண்டே யிருப்பேனென்பது சரதம். இப்பிரிவினையாகிறது, நமக்குச் சில நாள் விரகமிருப்பது போன்றிருக்க வேண்டுவதே யன்றி வேறில்லை யென்றார்.

இவ்வாறு சம்பாஷித்துக் கொண்டிருக்கும்போது சேவல் கூவிற்று. இளவரசியின் சிறம்பேதலித்தது "ஹுர்முஜ்" பெருமூச்செறிந்தார் "இளவரசி" அழத்தொடுத்தாள். கண்ணீராகிய பன்னீரால் முகத்தைக் கழுவினாள் "ஹுர்முஜ்" எழுந்து நின்று விடைவாங்கினார். இளவரசியும் எழுந்துநின்று விடையளித்தாள். பிரிய நேசர்கள், பிரிவினைக் காலத்தில் செய்து கொள்ள வேண்டிய ஒழுங்குகள் செய்யப்பட்டன. தாதியானவள், இளவரசியின் பிரிவாற்றமையையும், பிரகாசம் பொருந்திய அவளுடைய கண்கள்மஞ்சணித்ததைபுங்கண்டு பரிதபித்து, அப்படியே அவளைக்கட்டியணைத்து நெற்றியை முகந்து ஆறுதல் கூறி, சிறு குழந்தையைப் படுக்கையிற் கிடத்துவதுபோலக் கிடப்பாட்டினாள் "ஹுர்முஜ்" கண்ணீர் வடித்தவராக, அங்கிருந்து புறப்பட்டு தன் இருப்பிடத்துக்கு வந்து உடையணிந்து, அரசர்முதல் மற்றவர்களுக்கும் பயணஞ் சொல்லிக் கொண்டு, யானைகளின்மீது தயாராக வைக்கப்பட்டிருந்த திரைப்பணத்துடன், அஸ்வாரூடராகப் பிரயாணமானார்.

——:(*):——

## 13-ம் அதிகாரம்.

### ஹுர்முஜ் ரோமாபுரிக்குச்சென்று சக்கரவர்த்தியானது.

——:(·):(·):——

கூஜான் தேசத்தைவிட்டு, ஹுர்முஜ், பரிவார சகிதமாகப்புறப்பட்டு, காடுமலை, வனம் வனாந்திரம், ஆறருவி, முதலானவைகளைக்கடந்து நடந்து, இடைக்கிடை யெதிர்ப்படும் பட்டணங்

களின் அதிசியங்களைப் பார்த்துக்கொண்டும், புதிது புதிதான தின்பண்டங்களைப் புசித்துக்கொண்டும், சிலமாதத்தின் பிறகு "ரோமாபுரி" எல்லைச்சராகத்தில் வந்து சேர்ந்தார். முகவரைகிறு தபதினுறுவயதுப்பாலியன் ஒருவன், கூஜானிலிருந்து, இரண்டுவ ருஷத்திறைப்பணத்துடனும் நிரூபத்துடனும் வந்திருக்கிறுனென்று, சக்கரவர்த்திக்குச் செய்தியறிவிக்கபட்டது. அதைக்கேட்டவுடனே, அவருக்குக் கோபமும் புதுமையுமுண்டாகி, ஆ, கடவுளே, இந்த கூஜான் அரசருக்கு ஏன் இவ்வாறுன புத்திவந்தது. முதிர்ந்தவயதில் அறிவையும், ஆலோசனையையும் இழந்துவிட்டார் போலிருக்கிறதே. இச்செய்கையைப்பார்ததால் நம்மைப் பரிகாசஞ்செய்கிறதாகவே காணப்படுகிறது. தன்னைத்தானே ஏளனஞ் செய்துக்கொள்ளுகிறுரென்று எண்ணவு மிடம்பாடாகிற தென்று பலவாறு ஆலோசித்து ஒன்றும் தோற்றுமற் சினங்கொண்டு, பாதிப்பணங்கொண்டுவந்திருக்கும் தூதுவனின்சிரசைத்தறித்து என் முன்னுல் கொண்டுவாருங்களென்று தன் படைத்தலைவர்களுக்குக் கட்டளையிட்டார்.

அவர்கள் ஹாமுஜின், சமுகத்தில், வந்துசேர்ந்து, அவருடைய பிரகாசமான முகத்தைக்கண்டார்கள். இரக்கமும் கிருபையும் அவர்பேரில் உண்டாகிவிட்டது. அவரை வெட்டுவதற்கு ஒருவருக்காவது துணிகரமுண்டாகவில்லை. சில மணித்தேசகால ம்யோசனைபிலிருந்து கடைசியில், ஹாமுஜை, அரசரிடத்தில் கொண்டுபோய் நிறுத்துவோம். அவருடைய பிரியப்படி செய்துகொள்ளட்டுமென்று தீர்மானித்து, அதுபோற்செய்தார்கள்.

சக்கரவர்த்தியென்னும் பூமி முகத்தில் ஹாமுஜென்னும் பாலசூரியன் உதயஞ் செய்தபோது, செந்தாமரை மொக்குப் போன்ற அரசரின் மனம் விமமி, அவ்விம்மலின் குறி அவர் முகத்தில் தோன்றிற்று. "ஹாமூஜ்" முழங்காலிற் மடிந்து அரசரை வணங்கினுர். அரசர், அவரை யேறிட்டுப் பார்த்தார். "ஹாமூஜ்" இதுதான் சமையமென்று அரசரின் இரண்டு கா

லேயுமிறுகப் பிடித்துத் தன் தலையை அவரின் பாதத்தில் வைத்துக் கும்பிட்டார். அரசரின் மனம் அந்தரத்திலாயிற்று. சரீரம் விலவிலப்புற்றது, "சுஜான்" அரசரின் திருபத்தை வாங்கவுமில்லை. ஹாரூன்முஜிடத்தில் யாதொன்றைக் கேட்கவுமில்லை. ஹாரூன்முஜின் சிரசைத் தன் பாதத்தை விட்டு நீக்கி, அவரை நெஞ்சோடணைத்து நெற்றியை முகந்து கொண்டார்.

மந்திரிமார்கள் இதைக்கண்டு ஆச்சரியமும் பிரமிப்பும் அடைந்தார்கள். ஒருவருக்கொருவர், தங்களுக்குள் பலவாறு பேசத்தொடுத்தார்கள். கடவுளின் கற்பனையை நாம் என்னவென்று கூறுவோம். சில சமையங்களில் புகழ்க்குரிய அரசர்கள் ஒருஅடிமையின் அடிமையாகவும் போயிருக்கிறார்கள். நம்அரசரிடத்தில் இவ்விதச் செய்கை சம்பவித்ததை நாம் கண்டதேயில்லை. முன்பின் அறியாத ஒரு சிறு பாலியனின் கழுத்தைக் கட்டிவிட்டார், அவர் பேரிலும் குற்றங் கூறற்கிடமில்லை. கொலை செய்வதில் மனத்திடம் பெற்ற நாமெல்லாம் அவருடைய அழகின் பேரில் அதிசயமும் உருக்கமும் அடைந்து அவரைக் கொல்லாது விடவில்லையா? என்று பலவாறு பேசத்தொடுத்தார்கள்.

சக்கரவர்த்தியும், தனக்குத் தானே புதுமையுற்று ஆ, கடவுளே, இதென்ன அற்புதம்? இக்குழந்தை, பரியரசனின் பாலகனோ? யாதோ அறிகிலனே என்னுடைய அரண்மனையில், ஹிந்து, சிந்து, சீனம், சிங்களம், துலுக்கு, மலுக்கு, அறபு, ஆங்கிலம், முதலான தேசங்களின் அழகிற் சிறந்த எத்தனையோ, கோடிக்கணக்கான பாலியர்களிருக்கின்றார்கள். இருந்தும் ஒருவர் பேரிலாவது எனக்கு இவ்வாறான கிருபை பூத்ததில்லையே. ஒருவரையாவது கட்டி முகந்ததில்லையே. அப்படிக்கிருக்க, இப்படிப்பட்ட கிருபை இப்பிள்ளை பேரில் எனக்கு வரவேண்டிய காரணமென்னவோ, உமக்கே விளக்கமென்று பலவாறு சிந்தித்துக்கொண்டிருந்தார். அவருடைய மனம் ஒருவித நிலைப்பாடுமில்லாதிருந்தது. ஹாரூன்முஜாக்குத்தன் மனதைப் பலியிட்டவராயிருந்தார்.

அதைக்கண்ட மந்திரிமார்கள், அரசரை வணங்கி, எஜமா னே, யிதென்ன புதுமை? யிதென்ன அமளி? இப்படிப்பட்ட செய்கையானது, தங்கள் பேரிலிருக்கும் அச்சப்பாட்டை நீக்குகிற தாயிருக்கும். திறைப்பண மனுப்புவதில் சிற்றரசர்கள் தாமசப் படுத்த நேரிடும். நம்முடைய பொக்கசத்தின் வரவு குறைந்து போகும். கடவுளறிய, நம்முடைய அதிகாரம் விருத்திபெறமாட் டாது. அடிமைகள் வசப்பட மாட்டார்கள். நம்அரசாங்கத்தின் பெயர் மட்டிலுந்தானிருக்கும். பெலமிருக்க மாட்டாது. ஆகை யால், கடவுளுக்காக, தாங்கள் அத்தூதுவனை உருக்கிப்பார்த்து, கோபித்து, அக்கோபத்தீயால் அவனின் அழகைக் கரித்து, அவ னுடைய மனதில் அச்சமுண்டாகச் செய்யுங்களென்று விண்ணப் பஞ் செய்தார்கள்.

சக்கிரவர்த்திக்கு, அவர்களின் யோசனை சரியானதாகக் கா ணப்பட்டமையால், தன் கண்ணையுருட்டி, ஹூர்முஜைப் பார் த்து, கூஜான் அரசரைப் பலவாறு நிந்தித்துப் பேசி, எடா, சிறுவா, எதுவரையில் மீதிப்படுகிற இரண்டு வருஷத்தின் திறை ப்பணத்தையும் உன்னுடைய அரசர் அனுப்பாதிருக்கிறரோ, அதுவரையில், நீ, கூஜான் தேசத்துக்குப் போக வாய்க்காது, இங்குதானே சிறைச்சாலையிலிருக்க வேண்டுமென்று கடிந்து கூறி னார். அரசரின் கட்டளைப்படி, "ஹூர்முஜ்" மறியல் வீட்டுக்கு க்கொண்டு போகப்பட்டார். விதிப்படியே யாவற்றும் நடைபெறு மென்றெண்ணிக்கொண்டு, "ஹூர்முஜ்" பொறுதியுடன் சிறை ச்சாலையிலிருந்தார்.

அவருடைய முகப்பிரகாசம் அரசர்முதல் யாவர்களின் மனங் களையும் கொள்ளை கொண்டு விட்டபடியால், அதை அவருக்கு முன்னால் அரசர் வெளிப்படுத்தாமல் மறைத்து, கோபக்குறியை க்காட்டி, சிறைச்சாலைக் கனுப்பிவிட்டு, சிறைக்காப்பாளர்களை வர வழைத்து "ஹூர்முஜுக்கு" எவ்விதமான கஷ்டமும் நேரிடா மல் அவர் ஆரோக்கியத்துடனிருக்க விடவேண்டும், அவருக்கு

யாதொரு குறைவுமின்றி இராஜமேரையான அறுசுவைச் சுடுப தார்த்தங்களளித்து வரவேண்டும். குளிர்ந்த ஜலத்தைக் குடிப் பாட்ட வேண்டும். காலத்துக்கேற்ப, சூடும், குளிர்ச்சியுமான வுடைகள் கொடுக்கவேண்டும். இரவுபகல், இடைவிடாது, வெகு பக்திரமாக நீங்கள் காவல்புரிந்து அவரின் மனோபீஷ்டப்படி நடத்திவரவேண்டும் என்று கட்டளையிட்டனுப்பினர்.

சக்கிரவர்த்தியார, நாள்தோறும், "ஹார்முஜைக்' கொலு க்கூடத்திலும், சபாமண்டபத்திலும் வரவழைத் திருத்தி, அவரை ப்பார்த்து உள்ளுக்குள் மகிழ்ந்து, வெளிக்குக் கோபக்குறியைக் காட்டி, ஏ, சிறுவா? நீ, ஏன் இன்னமும், மீதித் திறைபணத்தைச் சீக்கிரத்தில் அனுப்பும்படிக்கு, கூஜானரசருக்குக் கடிதமெழுதா திருக்கின்றாய். கடவுள் உன்னுடைய விதியில் சிறையிருப்பைத் தான் எழுதிவிட்டார்போ லிருக்கிறதென்று கேட்பார். ஒருநாள் "ஹார்முஜ்" எஜமானே. அரசர்களுக்குப் பணிந்து நடப்பது குடிகள்பேரில் விதியாயிருக்கிறது, அன்றியும், அவர்களுக்குச்சங் கடம் நேரிட்ட காலத்தில் உயிரைக்கூட ஒரு திரணமாக மதிக்கா மல் உதவிசெய்ய வேண்டியதா யிருக்கிறது. அப்படிப்போலவே அரசர்களும் குடிகள்பேரில் பட்சம்பாராட்டி அவர்களுக்கு நேரி ட்டிருக்குங் கஷ்டங்களை நிவர்த்தியாக்கி உதவிசெய்ய வேண்டிய வர்களா யிருக்கிறார்கள்.

ஆகையால் தயாள குணத்தை யுடைய தாங்கள், என்னு டைய அரசரின் குற்றத்தை மன்னித்து, இப்போது நான் கொண்டு வந்திருப்பதை அங்கீகரித்துக் கொண்டு மீதித் தொகைக்கு ஒருதவணை கொடுத்தருள்வீர்க ளென்ற நம்பி க்கையுடன் தங்களின் திருச்சமுகத் தடைந்தேன். என் விதியி லிருந்தபடி நான் சிறைப்படுத்தப் பட்டேன். தாங்கள் என்பே ரில் கிருபைகூர்ந்து, என்னை விடுதல்செய்தால், நான்போய் மீதிப் பணத்தையும் சேகரஞ் செய்துக்கொண்டு தாங்கள் கட்டளையி டும் தவணையைக்கடக்காமல் வந்து சேருகிறேன். நான் அங்கு

போகாதபடிக்கு எவ்வளவாக எழுதினாலும் அவர்களால் சரிப்ப
டுத்தி யனுப்ப முடியாதென்பது சரதமாகையால் தங்களின் திரு
வாக்கை எதிர்பார்க்கிறேனென்றார். "ஹார்முஜ்" விடைகேட்
குந்தோறும், அரசருக்கு விலவிலப்புண்டு படுகிறதுடன், எவ்வி
தமாக இப்பிள்ளையைவிட்டுப் பிரிந்திருப்போமென்று மனசுக்குள்
எண்ணிக் கலங்குவார்.

"ஹார்முஜோ" குல் இளவரசியின் ஞாபகத்திலேயே மன
தைச்செலுத்தி இரவுபகல் இடைவிடாது அழுதுக்கொண்டேயிரு
ந்தார். இச்சையின் கடூரம் அவர் நெஞ்சை யிருத்திக்கொண்டிரு
ந்தது. தென்றற்காற்று வீசுமகாலத்தில், ஆ, தென்றலே, நான்
உனக்குப் பலியாகிறேன். நான் எப்போது, கூஜானுக்குப்போய்
ஆரோக்கியமடைவேன்? இரகசியமாக இராஜமாளிகையிற் புகு
ந்து, இளவரசியின் படுக்கையறையை யெப்போது சேருவேன்?
அவளின் பளபளப்பான கூந்தலின் பரிமளத்தை யெப்போது
முகரப்பெறுவேன். அவளின் சிறந்த அழகை மீறச்செய்ய, எப்
போது கடவுளைவேண்டுவேன்? எப்போது அவளுடைய செந்தா
மரை புட்பத்துக்குச் சமதியான பாதத்தை என் நெஞ்சிற் படச்
செய்துக் கொள்ளுவேன்? என்று பலவாறு புலம்பிக்கொண்
டிருப்பார்.

அப்படிக்கிருக்கும்போதொருநாள், அவர் சக்கிரவர்த்தி
யைப்பார்த்து, எஜமானே, நான் கூஜான் அரசரின நன்றியறிதலை
யுடைய ஒரு சிற்றடிமையாகவும், ஒரு சுத்தவீரரின் புத்திரனாகவு
மிருக்கிறேன். தங்களின் மேலான கிருபையைப் பெற்றுக்கொ
ண்டு திரும்பவேண்டுமென்ற எண்ணத்துடன் இங்கடைந்தேன்.
என்னுடைய காலக்கூறு இவ்வளவு கோலத்தையும் வெளியாக்கி
விட்டது. என்னுடைய சிறையிருப்புஎன்னைமிகவும் நலிவடையச்
செய்துவிட்டது. உயிரிழக்குந் தருவாயிலாய்விட்டேன், ஆகை
யால், தாங்கள் கட்டளையளித்தால் கொல்லப்படுகிறேன். உத்திர
வளித்தால் ஊர்போய்ச்சேருகிறேன் என்று வெகுவுருக்கமாகவும்
வணக்கத்துடனும் வேண்டிநின்றார்.

அதைக்கேட்ட சக்கரவர்த்தியின் மனம் பேதலித்துத் தட்டழிந்து, தன்னையறியாமற்கண்ணீரைத் தாரைதாரையாக வடித்தது. அப்போது, சக்கரவர்த்தியார், அச்சபையிலுள்ளாரனைவரையும் பார்த்து, என் பிரஜைகாள், எனக்குப் பிள்ளையில்லை யென்பதை நீங்களறிந்திருக்கிறீர்கள். பிள்ளை யிருந்தாலும் இல்லாதபோனாலும சரியே. இவரை நான் பிள்ளையாகப் பாவித்துக்கொண்டேனென்பதை நீங்களனைவரும் அறிந்து கொள்ளுங்களென்று கூறியதுடன், ஹார்முஜைப்பார்த்து, என் அருமந்தப்புத்திரரே, நீர் கொண்டுவந்திருக்கிற திறைப்பணத்துடன், அதுபோன்ற ஒரு தொகைப்பணத்தைச் சேர்த்து, உம்முடைய அரசருக்கு அனுப்பி, இதையும், அந்த நான்குவருஷத்தின் திறைப்பணத்தையும், நம்முடைய வெகுமதியாக அவரை ஒப்புக் கொள்ளும்படிக்கும், இதுமுதல் கப்பமின்றி, காலங்கடத்தக் கட்டளை யிடப்பட்டதென்றும் தங்களுடைய சிற்றடிமை, சக்கரவர்த்தியின் சுவீகாரபுத்திரராக்கப்பட்டாரென்றும், நிருபமெழுதியனுப்பிவிட்டு, நீர், என்னுடைய செங்கோலை ஒப்புக்கொண்டு நீதியுடன் ஆக்ஷிபுரிந்துவர வேண்டுமென்றார்.

சக்கரவர்த்தியின் கட்டளைப்படிக்கு, ஹார்முஜ், சக்கரவர்த்திப்பட்டம்வகிக்கப்பெற்றார். கூஜானுக்குக் கடிதமெழுதியனுப்பினார். என்றாலும் இளவரசியை விட்டுப்பிரிந்திருப்பது அவருக்கு பாரிய சஞ்சலத்தையுண்டாக்கிக் கொண்டிருந்தது. சில சமயங்களில் தன்னுடைய பிரகாசமான முகத்தைக் கண்ணாடியிற்பார்த்து வாயில் வந்தபடிக்குப் புலம்புவார். இந்த அழகில் தீப்பிடிக்க, இதுதானே, இளவரசிக்கு இச்சையை உண்டாக்கித்துன்பப்படச்செய்தது. இந்த அழகில் இடிவிழ. இதுதானே என்னை, கூஜானிலிருந்து புறப்படுத்தி, இங்கு கொண்டுவந்து இருப்பாட்டிவிட்டது, என்று பலவாறு புலம்பித்தன் துற்கெதியை நினைத்து ஓலமிட்டு, பளபளப்பானகன்னங்களில் ததும்பேறக் கண்ணீர்வடித்து அழுவதே வேலையாயிருந்தார்.

ஹாரூர்முஜ், எழுதிய நிரூபத்தை "கூஜான் அரசர்" வாசித்தோர்ந்து, தனக்கு, சர்வமான்யமாக, கூஜான்தேசமுழுவதும் கொடுக்கப்பட்டதால் மகிழ்ந்து சந்தோஷங்கொண்டாடினர். ஆனால், ஹாரூர்முஜின் பிரிவினையானது அவருடைய சந்தோஷத்தை வேருடன் களைந்தெறிந்து, ஹாரூர்முஜே, ஹாரூர்முஜே, எனச் சப்தமிட்டழுது, பைத்தியக்காரனைப்போல் புலம்பச்செய்தது.

கபடர்களாகிய மந்திரியார்கள், அரசரைப்பார்த்து, எஜமானே, எங்களுடைய யோசனையின்பேரில், ஹாரூர்முஜை, ரோமாபுரிக்கனுப்பினீர்கள். அவர் தந்திரமாகத் தன்னுயிரைக்காப்பாற்றிக் கொண்டார் அப்படிக்கில்லாதுபோனால், இத்தேசமடங்கலும், சர்வமான்யமாகத் தங்களுக் கெங்கிருந்து கிடைக்கப்போகிறது. சக்கரவர்த்தியாருடையமனம் இவ்வாறுபதப்பட்டு நம்பேரிலிரங்குமென்பதையாரேனு நினைத்ததுண்டுமா? கடவுளே துதிக்குடையவர். ஒரு தந்திரத்தால் இவ்வளவு சுகத்தையு மடையப்பெற்றோம். நம்முடைய நாட்டம் நிறைவேறப்பெற்றோம். ஆகையால் எங்களுக்கு வெகுமதி கொடுத்தருள்வீர்களாகவென்று கூறி, அவர்களின நாட்டப்படி ஹாரூர்முஜ், கூஜானுக்கு வராதுபோன சந்தோஷத்தை மனதுள்ளடக்கி, வெளிக்கு வேறு பாவனையைக்காட்டி, சந்தோஷக் கூத்தாடினார்கள்.

சக்கரவர்த்தியார். ஹாரூர்முஜூக்குப் பிரதியுத்தர மெழுதக்கருதி, ஒரு கடிதத்தில், மகனே, என்னுடைய பெந்துக்களடங்கலையும் விற்று நான் கொடுக்கவேண்டிய திறைப்பணத்தைக் கொடுத்துவிடுவேனேயன்றி, உம்மைவிட்டுப்போட்டு ஒருக்காலுமிருக்கமாட்டேன், இன்னும் சிலநாள் காலத்தை யெதிர்பார்த்தவராகவும், கடவுளின் அற்புததத்தைக் கண்ணுற்றவராகவும் நம்பிக்கையுடனிருப்பீராக வென்றெழுதியனுப்பினார். ஹாரூர்முஜை, ரோமாபுரிச் சக்கரவர்த்தி, சுவீகாரப்புத்திரராக ஆக்கிக்கொண்டதுமுதல் சகல அதிகாரமும் அவருக்குடையதாயிற்று. மந்திரி பிரதானிகளடங்கலும் வந்து தெரிசனைபுரிந்தார்கள். பலதிசையாலும் வாழ்த்துப்பத்திரங்கள் வந்து குவிந்தன.

அந்தப்புரத்திலும் சந்தோஷ கோஷ்டமானது மலிந்திருந்தது. சிலருக்கு ஹுஸைர்முஜைப்பார்க்கவேண்டுமென்ற ஆசைமிகைத்தது. சிலர் வயிற்றெரிச்சலால் உயிரிழந்தவர்களைப் போலப்பிரமித் திருந்தார்கள். அந்தப்புர ஸ்திரீகளடங்கலும், அரசரைப்பார்த்து, எங்கள் புருடநாயகரே, ஹுஸைர்முஜைத் தாங்கள் புத்திரராக்கிக்கொண்டதால், எங்களுக்கும் அவர் பிள்ளையாய்விட்டார். அவருடைய பிரகாசமான முகத்தைப்பார்க்க, எங்களுக்கு வுத்திரவளித்தால் நாங்கள் அவரைப்பார்த்துச்சந்தோஷமடையலாமென்னும் நம்பிக்கையுடையவர்களாயிருக்கிறோம். கண்பார்க்கிறதாகவும், மனம்நாடுகிறதாகவு மிருக்கிறதென்று விண்ணப்பஞ் செய்துக் கொண்டார்கள்.

சக்கரவர்த்தியார், புன்சிரிப்புடையவராக, பெண்களே, எண்ணம் பரிசுத்தமுடையதாயிருக்கவேண்டும். உங்களுக்குப்பிரியமிருந்தால் அவரை அந்தப்புரத்துள் அழைத்துக்கொள்ள யாதொரு தடையுமில்லை. அவரை யிங்கு வரவழைத்து ஆசிகூறி, நவரத்தினங்களால் ஆலாத்தியெடுத்துக் கண்ணேறுகழித்து, நீங்களடங்கலும் அவர் பேரில் பட்சமாயிருக்கக் கடவீர்களென்று கட்டளையிட்டார். அதுபோல் அவரை அந்தப்புரத்துக்கு அழைத்து வந்து, ஆலாத்தியெடுத்து அன்புபாராட்டினார்கள். மறைப்பின்றி அவருக்கெதிரேயெல்லாப்பெண்களும் முகங்களைக்காட்டினார்கள். பின்பு, பட்டத்தரசிகள், அவருக்கெதிரில் வந்து சற்று நாணத்துடன்நின்று ஆசிகூறிமீண்டார்கள்.

ஹுஸைர்முஜின், தாயாருக்கு அவர்பேரிற்பார்வைபட்டவுடனே, இரத்தம் பொங்கித் தனங்கள் விம்மின. அந்தரங்கவுதிப் பொன்றுண்டாகிச் சந்தேகமின்றி இவர் நம்முடைய ஈரற்குலையாயும், கண்மணியாயுமிருக்கவேண்டுமென்று தீர்மானித்து, சஹித்திருக்கமாட்டாதவளாகி, அங்குள்ளவர்களைப் பார்த்து, சனங்களே, இவரோ, சக்கரவர்த்தியின் சுக்கிலமும், என்னுடைய சுரோணிதமும் சம்பந்தப்பட்டு வுற்பவித்த குழந்தையென்பதில் எவ்விதமான

சந்தேகமுமில்லையென்று சப்தமிட்டுக்கூறினாள். பெண்டுகளெல்லாம் கெக்கொலியிட்டுச்சிரித்து, வசையும்புறமும் கூறினார்கள். சிலர், ஹே, ஹே, இவளை மஹாபதிவிரதையென்றல்லவோ, எண்ணிபிருந்தோம். இவள் மஹா துஷ்ட மோகினியென்பதை இவ்வாலிபனைக்கண்டவுடன் இவன்பேரில் மயல்கொண்டு மயங்கிவிட்டதால் திட்டமாய் அறிந்துக் கொண்டோமென்றார்கள்.

சிலர், பலே, ஷபாஷ், இதுவும் நல்ல வேலைதான். வெளிரங்கத்தில் பிள்ளையாகப்பாவித்து, அந்தரங்கத்தில் ஆம்புடையானாக்கிக்கொள்ள ஆசை வைத்துவிட்டாளே என்றார்கள். சில பரிகாசக்காரிகள், ஒருவருடைய மனக்கருத்தை யின்னொருவர் இலேசிலறிந்து கொள்ளக்கூடுமா? அவளுக்குத் தெரியும். கடவுளுக்குத்தெரியும். நமக்கென்ன தெரியப்போகிறதென்றார்கள். பட்டத்தரசி, சிரித்துக்கொண்டு சக்கிரவர்த்தி யிடத்தில் வந்து நாயகமே, யின்ன யிராஜாத்தி, தங்களின் சுவீகாரப் புத்திரர்மீதில் இச்சைகொண்டிருக்கிறதாகத் தெரிகிறது. அதனால் தங்களுக்கு இழிவுண்டாவதைப் பயப்படுகிறேன். ஆகையால், அவ்விஷயத்தில் தாங்கள் கிஞ்சிற்றுக் கவலையுடையவர்களா யிருப்பதுதான் காரியமென்று நினைக்கிறேனென்றாள்.

அச்சொல் சக்கிரவர்த்தியின் செவித்துவாரத்தில் அக்கினிபாணம் போன்று புகுந்து நெஞ்சைக்கலக்கிக் கண்களிற் றீப்பொறி தெறிக்கச்செய்தது. உடனே, அவளை வெட்டி யெறியக் கட்டளையிட நாடினார். மறுபடியும் ஒரு யோசனை யுண்டாயிற்று. அநியாயமாகக் கொலை செய்து பெண்பழியைச் சுமப்பதைவிட தீரவிசாரித்தறிந்து தீர்ப்பிடலாமென்று தன்னுக்குள் தீர்மானப்படுத்திக்கொண்டு, அந்த இராஜாத்தியை அழைப்பித்து, பெண்ணே? சற்றுமுன்னர், பட்டத்தரசி முதலானவர்களின் முன்னிலையில் நீ யென்னசொன்னாய்? அதை யின்னொருமுறை, என்பேரிற் சத்தியமாக மறைக்காது கூறுவாயாகவென்றார். அவள்மிகுந்த வணக்கத்துடன் கைகட்டி நின்று, நாயகமே, தாங்கள் சரா

ன்தேசத்துக்குப் பிரயாணமான பிறகு, நான் கருப்பவதியாயிருப்பதை பட்டத்தரசியறிந்து, என் கருவைச்சிதைக்க ஒரு மருத்துவச்சியை அனுப்பினார்கள். கிருபையையுடைய "கடவுள்" அவளையென்பேரில் இரங்கச் செய்துவிட்டார். அவளும் என்னுடைய கவலையில் கூட்டானாள்.

அப்போது இக்குழந்தை பிறந்தது. பட்டத்தரசியின் அச்சத்தால் இக்குழந்தையை, அம்மருத்துவச்சியிடத்தில் ஒப்புவித்து தங்களுடைய முத்திரை மோதிரத்தை அடையாளத்திற்காக அவளிடத்திற் கொடுத்துப் பிறதேசத்திற் போயிருந்து வெகு பத்திரமாகக் குழந்தையை வளர்த்து நடை பழகிய உடனே, தங்களிடத்தில் கொண்டு வந்து சேர்த்து, சகல விஷயங்களையும் தங்களுக்குத் தெரிவிக்கும்படிக்குப் போதித்தும், நீ, அந்தப்படி செய்யும் பக்ஷத்தில் சக்கிரவர்த்திபவர்கள் உனக்கு அனேக வெகுமதிகளைக் கொடுப்பார்களென்று கூறியும் பயணப்படுத்தி யனுப்பினேனென்றும், தங்களுக்குக் கனவிற் கட்டளையானபடிக்கே, இக்குழந்தைக்கு நானே, "ஹார்முஜ" என்று பெயரும் சூட்டினேனென்றும் தெளிவாக விவரித்துக்கூறினாள்.

அரசர் "ஹார்முஜைப்பார்த்து" மகனே, உம்மைப்பெற்றோர்யாவர்? நீர் யாரால் வளர்க்கப்பட்டீர்? சொல்லுமென்றுகேட்டார். "ஹார்முஜ்" எஜமானே, இவ்வடிமை, கூஜான், தேசத்தில் ஒரு தோட்டக்காவற்காரனுடைய வீட்டிற் பிறந்தேன். அவ் வீட்டிலேயே பதினாறுவயது வரையில் வளர்க்கப்பட்டேன், இதில் எவ்விதமான சந்தேகமுமில்லை. ஆனால் நான் சிறுவயதிலேயே அத்தோட்டக்காரனின் நடவடிக்கை முதலானவைகளில் வித்தியாச முடையவனாக விருந்துவந்தேன். அவனை தகப்பனென்று சொல்லவுங்கூட எனக்கு வெட்கமாயிருந்தது என்று விடைகொடுத்தார். அரசர் ஒன்றுந் தோன்றாமல் வெகுநேரம் ஆலோசனையிலிருந்து, கடைசியில் கூஜான் அரசரை விசாரித்தறிய வேண்டுமென்று நினைத்து, ஒரு கடிதத்தில், அரசரே, "ஹார்மு

ஜின்" பிறப்புவளர்ப்ப முதலானவைகளைத் தோட்டக்காரனிடத்தில், தெளிவாய் விசாரித்துத் தாமசப்படுத்தாமல் எனக்கெழுதுகிறதுடன் வெகுசீக்கிரத்தில் அவனையும் என்னுடைய சமுகத்துக்குப பிரயாணப்படுத்தி யனுப்பவேண்டியது நும்பேரிற் கடமையாக்கப் பட்டதென்றெழுதிக் கையொப்பமிட்டு, ஒரு தூதுவன் கையிற் கொடுத்தனுப்பினர்.

கூஜான் அரசர் அக்கடிதத்தைக் கண்டவுடனே, தோட்டக்காரனை வரவழைத்து, சங்கதியைத் தெரியப்படுத்தினர். அவன் ஓஹோ, அந்தரங்கம் வெளியாய் விட்டதுபோலிருக்கிறது. சந்திரனைக் கைக்குடையால் மறைத்தால் மறைந்திருக்குமா? அந்தரங்கத்தை மறைப்பதில் பிரயோஜனமில்லை. சொல்லிப்போடுவதில் சுகமிருக்கிறதென்று தீர்மானித்து, வணக்கத்துடன் கைகட்டிக் கொண்டுநின்று, எஜமானே? ஒரு பெண்பிள்ளை இக்குழந்தையைக் கொண்டுவந்து என்னிடத்திற் கொடுத்து, இதற்கு வயது வந்தபோது சக்கிரவர்த்தி யவர்களிடத்திற் கொண்டுபோய் ஒப்பித்து, அவர்கள் இக்குழந்தையை தன்னுடைய குழந்தையென்றறிந்துக் கொள்வதற் கடையாளமாக இந்த மோதிரத்தையுங் கொடுமென்று கூறிவிட்டு இறந்துபோய்விட்டாள்.

எனக்குப் புத்திரவாஞ்சை மிகைத்திருந்ததாலும் அழகிற் சிறந்த குழந்தையாயிருந்ததாலும், அவளுடைய சொற்போற் செய்யப் பொருத்தப்படாமல், என்னுடைய பத்தினி புத்திரனைப் பெற்றுளென்று பஹிரங்கப்படுத்தி என்னுடைய மனக்கவலையைப்போக்கி அக்குழந்தையை ஒரு பெரிய பாக்கியமாக மதித்து வெகு அருமையுடன் வளர்த்து வந்தேனென்று விவரித்துக் கூறினன்.

கூஜான் அரசர், இதைக் கேட்டவுடனே, கையை முறுக்கிப் பிசைந்து, கைசேதமே, முந்தியே நான் இவ்வாறென்றறிந்திருந்தால் நானே அந்த வெகுமதியைச் சக்கரவர்த்தியவர்கள் முன்னிலையில் கொண்டு போய்ச் சமர்ப்பித்து மேலான பதவியைப் பெற்

ழுக் கொள்வேனே, இனிமேல் என்ன செய்கிறதென்று பலவாறு பிரலாபித்து, உடனே தோட்டக்காரனை ரோமாபுரிக்குப் பிரயாணப்படுத்தி யனுப்பி, சகல விஷயங்களையும் தெளிவாய் எழுதியனுப்பினுர். சக்கரவர்த்தியார, மந்திரி பிரதானி முதலான சகல பேரையும் வரவழைத்து சபை கூட்டி, தோட்டக்காரனைப் பார்த்து நடந்த விஷயங்களை மறைக்காது கூறென்றுர். அவன் ஆதிமுதல் அந்தம் வரையில் நடந்தவைகளை விவரித்துக் கூறி, மருத்துவச்சி கொடுத்த மோதிரத்தையெடுத்து முத்தமிட்டு அரசரின் சமுகத்தில் வைத்தான்.

அரசர் அதை யெடுத்துப்பார்த்து, இராஜாத்திக்கு, தான் கொடுத்த மோதிரம் அதுதானென்று அறிந்து, சந்தோஷத்தால் ஆனந்தக் கூத்தாடினுர். தோட்டக்காரனுக்கு, ஒருகோடி தங்கக் காசுகளை வெகுமதியளித்து, மருத்துவச்சியின் சொற் போல் நீ செய்திருப்பையேயானல், கூஜான் தேசத்துக்கு உன்னையே அரசனுக்குவேன். நீ அந்தரங்கத்தை மறைத்த குற்றத்திற்காகக் கொல்லப்பட வேண்டியவனுயிருந்தும், என்னுடைய பிள்ளையை வளர்த்த அருமைக்காக வுனக்கு மன்னிப்பளித்தேனென்று கூறிவிட்டு, ஹூர்முஜைக் கண்டு வாழ்த்தி வெகுமதி பெற்று மீண்டார்கள்.

பூலோகத்தின் எப்பாகத்திலும் கிடைத்தற்கரிதான அளவிறந்த இரத்தினங்களை ஹூர்முஜின் சிரசிற் சொரிந்து அவைகளையேழைகளுக்குப் பங்கிட்டார்கள். அந்தப்புர ஸ்திரீகளடங்கலும் வந்து தெரிசித்து சுபசோபனங் கூறி நாட்டியமாடினுர்கள். சிலர் சிங்காரப்பாட்டு பாடினுர்கள். சிலர் கைகோர்த்து நெட்டை வாங்கினுர்கள். அந்தப்புரத்தில் வெகு ஆரவாரமாகவிருந்தது. காவற்காரர்களடங்கலும் கணக்கிலடங்காச் சந்தோஷப் பாட்டுப் பாடினுர்கள். இராஜ பத்தினி முதலானவர்கள், நம்முடைய இரத்தினம் இன்னமும் அந்தப்புரத்துள் வராதிருக்கிற காரணமெ

ன்ன ? அறிந்துவாருங்களென்றார்கள். சிலர் அந்த மாணிக்கத்தின் வரவை யெதிர்பார்ப்பது, மரணத்தை எதிர்பார்ப்பதைவிடக் கடப்பாகக் காணுகிறதேயென்று புலம்பினார்கள்.

சிலர், இன்னும் சற்றுநேரத்துள் அவர் இங்கு வராதுபோவாரேயானால் நாங்கள், நாணம், மடம், அச்சம், பயிற்பு, என்னு நான்கு குணங்களையும் விட்டொழித்துக் கொலுக்கூடத்துக்குப் போய்விடுவோமென்று கூக்குரலிட்டார்கள். "ஹாரூர்முஜின்" மாற்றான் தாயாகிய, பட்டத்தரசியும் இளவரசரை யிங்கழைத்துவாருங்கள், நானும் ஒருமுறைபார்த்து கண்குளிர்ச்சி பெறட்டுமென்று வுண்மையாகவே சொல்லிக்கொண்டிருந்தாள். "ஹாரூர்முஜின்" தாயார் எல்லோரைவிட அதிகப் பதட்டத்துடன் ஒவ்வொரு நிமிடந்தோறும், கொலுக்கூடத்திலிருந்து சமாச்சாரம் தருவித்துக் கொண்டிருந்தாள், அப்படிக்கிருக்கும்போது, சக்கிரவாத்தியார் "ஹாரூர்முஜை" அழைத்துக்கொண்டு அந்தப்புரத்துள் வந்து, சிரித்தவராக, ஹாரூர்முஜின் தாயாரைப் பார்த்து, பெண்மணியே, உமக்குச் சுபசோபனமுண்டாவதாக, இதோ வும்முடைய மனையின் விளக்கு, என் சிம்மாசனத்தின் தீபம் வந்திருக்கிறது. சந்தோஷத்துடன் ஒப்புக்கொளவீராக. இன்றுமுதல் உம்மையே இவ்வரண்மனையின் அதிகாரியாக்கினேன். உமக்கே பட்டத்தரசி யென்னும் பட்டத்தைக் கொடுத்தேன். என்றார்.

இராஜாத்தி, அரசரைப் பணிந்து துதித்து, தன் புத்திரரை நெஞ்சோடணைத்து நெடுமூச்செழும்பத் தேம்பித் தேம்பியழுதாள். அந்தப்புர மெய்க்காப்பாளர்களிற் சிலர், ஆலாத்தி யெடுத்தார்கள். சிலர், காற்களை முத்தமிட்டார்கள். சிலர் கடவுளை நமஸ்கரித்தார்கள். சில பாலியப் பெண்கள் ஹாரூர்முஜின் சரீர அழகைக் கண்டு பிரமித்து சித்திரம்போன்று நின்றார்கள். சிலருக்கு விரக வேதனை வேலை செய்யத் தொடுத்தது. சிலருடைய நெஞ்சங்களில் பிரகாசம் பொருந்திய அவருடைய முகத்தின் ஊறு தாக்கியது. சிலர் அவரின் பளபளப்பான கன்னங்களில்

ருத்தைச் செலுத்திப் பதைத்துக்கொண்டிருந்தார்கள். வேறு
பிதமான அனேக வேடிக்கைகளெல்லாம் அங்கு நடைபெற்றன.
முன்னூல் விரித்துக் கூறினும், இந்நூலிடம் பெறாது மறுத்து
விட்டது. கடைசியில், ஹுார்முஜின் கையை, சக்கரவர்த்தியார்
பிடித்துக் கொண்டு அந்தப்புரத்தைவிட்டு வெளிப்பட்டுக் கொ
லுக்கூடத்தில் வந்து மந்திரிமார்களைப் பாாத்து, நன்றியறிதலை
புடைய என் மந்திரி, பிரதானிகளே, இன்றையிலிருந்து, நான்
பேருக்கு அரசனாயிருப்பேன். சகல சக்கிராதிபதித்துவமும்
இதோ நான் கையிற் பிடித்திருக்கிற இக்கருணாநிதிக்குடைய
தாகிவிட்டது. இவரையே நீங்கள் அரசராக ஒப்புக்கொண்டு
இவருடைய கட்டளைக் கொழுகி நடக்கவேண்டுமென் றுக்ஞாபி
த்து, ஹுார்முஜை, சிம்மாசனததிலிருத்தி மகுடஞ் சூட்டினார்
கள். மங்கள வாத்தியம் முழக்கப்பட்டது. ஹுார்முஜ், சிம்
மாசனமேறிய சமாச்சாரம் உலகடங்கலிலும் பரம்பிற்று. கப்பம்
கட்டும் சிற்றரசர்களுக்கெல்லாம் கடிதமூலமாகத் தெரியப்படுத்
தப்பட்டது.

——(*)——

## 14-ம் அதிகாரம்.

### {இளவரசியின் பதட்டமும், ஹுார்முஜின் துரதிட்டமும்.}

——:◌◌:——

"ஹுார்முஜ்" கொலுவேறிய சமாச்சாரம், கூஜான் தேசமு
ழுதும் பரந்து, குல்இளவரசியின் செவியிலும் நுழைந்தது. அவள்
உணர்வற்றுவீழ்ந்தாள். அவர், கூஜானுக்குவருவாரென்னும் எண்
ணத்தைக் கைநெகிழவிட்டாள். ஆதியிலேயே பிரகண்டப்பட்டு
க்கொண்டிருந்தவளானதால் அப்போது பதின்மடங்கு திகில்கொ
ண்டாள். ஆ, என் காலக்கிரகமே, நேர்மாற்றமான செய்கையால்

என்னை நிலைகலங்கச்செய்துவிட்டாயே, அடே, அநியாயக்காரனே, நான் செய்த குற்றமென்ன? நீமுன்செப்தநலவெல்லாம் நலவல்ல, இப்போது என் பிரியநேசரின் தெரிசனையைப் பெறும்வழியைக் காட்டுவதே பெரிய உபகாரமென்று பிதற்றினள்.

தன்தாதியைப்பார்த்து, தாயே, பார்த்தையா? இந்த இருதலைமணியனை கிரகம் என்னவேலை செய்துவிட்டது? என்னை எவ்விதமான கஷ்டத்திலாக்கி விட்டது. என் பிரிய நேசராகிய "ஹார்முஜ்" ரோமாபுரிச் சக்கிரவர்த்தியின் புத்திரராகிவிட்டார். இனிமேல் இங்கு எதுக்காக வரப்போகிறார். இந்த ஏழையின் முகத்தை யென்னத்திற்காகப் பார்க்கப் போகிறார். அப்படியிருக்கவும், அவருக்கு தகுதி யேற்பட்டு விட்டது. நானோ அவருக்குக் கப்பமளக்கும் ஒரு சிற்றரசரின் புத்திரியாயிருக்கிறேன். அவரோ கரையிலும் கடலிலும் அதிகாரம் செலுததக்கூடியவராய்விட்டார். அன்னப்பக்ஷி மயிலின் சினேகத்தைநாடவேண்டியதில்லை யென்பதுபோல் நாமே அவருடைய தராதரத்தைச் சீர்தூக்கிப்பார்க்கவேண்டாமா? ஆ என் அருமைத்செவிலித்தாயே, என்னுடைய ஆசை, அடியோடு மாண்டுவிட்டது. அநியாயத்தின் கல் என் தலையில் விழுந்தது. இனி நான் எவ்வாறு சீவித்திருப்பேன்? மரணத்தின் குடிப்பை யெவ்வாறுகுடித்து மாய்வேனென்று பலவாறு புலம்பியழுதாள்.

இளவரசியின் பரிதாபப் புலப்பத்தைச் செவியேற்ற, தாதியானவள், அவளைப்பார்த்து மகளே, இதென்னக் காலக்கொடுமை இதென்ன வீண்புலப்பம்? ஆ என் கண்மணியே, தாங்கள் இதுவரையில் மன்மதனுடன் சிநேகஞ் செய்யவில்லைபோலிருக்கிறது. மஹா தத்துவத்தையுடைய மன்மதனின் குணம் ஒருக்காலும் வேறுபடமாட்டாது. அவருடைய சமுகத்தில் அரசரும், அடிமையும், ஒன்றுபோலத்தா னிருப்பார்கள். ஒருவரை யின்னொருவரைபோலாக்கக்கூடியவர், சிலசமயங்களில் அரசரை அடிமையுடனும், அடிமையை அரசருடனும் இணக்கப்படுத்தி விடு

வார். அரசரென்னும் பதவி, காமராஜனின் கூடாணபார்வை படு கிறவரையில்தானிருக்கும். யாருடைய தலையில் அவருடைய கிழ ற்பட்டதோ, அவர்களுக்கு மண்ணே தலைக்குட்டையாகும். அவ ருடைய இருப்பிடத்தைப் பார்க்கச்சென்ற, கால், பிரேதக் கல்ல றையைத் தேடிப்புறப்படுமே யல்லாது வேறுவழியிற் போகாது. கடவுளுக்காகத் தாங்கள் தங்கள் மனதைப் பதப்படுத்திக்கொ ண்டு பொறுதியுடனிருங்கள். அக்காமராஜன், அவரைக் காதைப் பிடித்திழுத்து தாங்களிருக்குந் தானத்துக்குக் கொண்டு வந்துசே ர்க்கும் வேடிக்கை யெவ்விதமென்பதைக் கண்டறிந்துக்கொள்வீ ர்களென்று அநேக ஆறுதல் கூறினாள்.

இளவரசி, முகத்தைத் திருப்பி, தாரை தாரையாய்க் கண்ணீர் வடிய அழுதவளாக, தாமே, அவர் எப்பவருவார். எப்பொழுது என சமுகத்தில்வந்து, இளங்குரும்பைபோன்ற என் கனதனபார த்தின்கட்டையவிழ்ப்பார். அவர்வருமுன்நான் இறந்துபோவேனோ யிருப்பேனோ, என்பதை, யாரறியவல்லார்? இவ்வுலகவாழ்க்கை க்கு என்ன நிட்சயமிருக்கிறது? என்னுடைய விதியில் என்ன எழுதப்பட்டிருக்கிறதென்பதை, சகலமும் அறிந்த "கடவுள்" ஒருவரே அறிவாரல்லாது, வேறேயாரும் அறியமாட்டார்களே, எனமாறியும் புலம்பினாள்.

அதற்குத்தாதியானவள், மகளே, தாங்கள் யாதொன்றையும் சிந்திக்காமல், தங்களின் கவலையைப்போக்கி கடவுளிடத்தில் தங் களுடைய நாட்டத்தை முறையிட்டுக் கொண்டிருங்கள். அவரிட த்தில் கேட்டவர்கள். வெறுங்கையாக மாட்டார்கள். அவருடைய கட்டளைப்படி நடந்து, நம்கருத்தை அவரளவிற் செலுத்திவந்தால் இந்த ஒரு இலேசான கருமத்தை முடித்துவைப்பது அவருக் கொரு அணுவிலும் அணுவாகமாட்டாது. அவருடைய கிருபை யில் அவநம்பிக்கை வைக்கக்கூடாதென்று தேறுதல் கூறினாள்.

என்னதேறுதல் கூறினாலுமென்ன, இளவரசியோ தாதிக்கு முன்னால் அழுகையை நிறுத்தி யாதொன்றும் பேசாமல், தன்படு

க்கையறையுட்புகுந்து இரவுபகல் இடைவிடாது அழுதகொண்டேயிருந்தாள். காய்ந்தவிறகில் தீப்பற்றுவதுபோல, கவலைத்தீயில் கரிந்து கொண்டிருந்தாள்.

(இவள் இங்கே கரைந்துகொண்டிருக்கட்டும், ஹாரூர்முஜ், என்ன கதைக்கிறாரென்பதையுஞ் சற்றுகவனிப்போம்.)

"ஹாரூர்முஜ்" சிம்மாசனாதிபதியான பிறகு, இளவரசியின், பிரகாசமான முகத்தழகு அவருக்கு ஞாபகத்தில் வந்துற்றது. உடனே, தனித்த ஓரறையில் புகுந்து, தன்னாலானவரையில் அழுதழுவித்தார். உடைகளைக் கிழித்தெறிந்தார். கிரீடத்தைக் கீழே கிடக்கினார். ஆ, என்மதியீனமே, நான் காமராஜனின் காலாளாயிருக்க, இந்த சக்கிராதிபத்தியத்தில் எனக்கு, என்ன வேலையிருக்கிறது.

நான் அந்த அழகு நாயகியின் நிழலாயிருக்க அரசரென்னும் பெயரை ஏன் அடையவேண்டும்? என்னை, கூஜானிலிருந்து புறப்படுத்தி இங்குகொண்டுவந்து சேர்த்த நாளானது மெத்தவும் புதுமைப்படக்கூடிய நாளாயிருக்கிறது. என்னுடைய காலக்கிரசமாக்கும், என்னை இங்கு கொண்டுவந்து சேர்த்தது. ஆ, ஆ, என்னசெய்வேன்? என்ன தந்திரத்தால் இங்கிருந்து புறப்பட்டு கூஜானைச்சேர்ந்து குல் இளவரசியின் பாததாமரையைப் பணிந்து இன்பசுகத்தைப் பெறுவேன்? என்னுடைய சஞ்சலத்தை முறையிட இச்சமயம் ஒருவரும் என்சமுகத்திலில்லையே. எனக்கு ஆறுதல்கூறி என்மனதை தேற்றக்கூடிய ஒருவரும் என்கண்ணுக்குத் தென்படவில்லையே. இறப்பதைவிட, வேறுவகை யிருப்பதாக நினைக்கக்கூடவுமில்லையே. மரணத்தையடைய வழியறிந்தவனாகவுமில்லையே.

நான் வீற்றிருக்கப் பெறும் சிம்மாசனமானது, எனக்குப், பிரேதப்பெட்டியாகத் தோற்றப்படுகிறதே. என் சிரசிலிருக்கும் நவரத்தினக்கிரீடம் எனக்கு நரகம்போன்றிருக்கிறதே

நான் உடுத்தியிருக்கும் சரிகையுடை நெருப்பாகி என்னைக் கரித்துக்கொண்டிருக்கிறதே. நான் கரிந்து சாம்பராய்விட்டாலும் எனக்கு ஒரு வழியுங் கிடைக்காதுபோ லிருக்கிறதே. ஆ, கடவுளே, நான் உலகில் உற்பத்தி யாகாதிருந்தேனில்லையே. உற்பவித்தபிறகு இவ்விதமான துன்பத்தில் சிக்குண்டு உழலாதிருந்தேனில்லையே. எனப் பலவாறு புலம்பினர்.

பின்பு "ஹாரூன்" கொலுமண்டபத்துக்கு வந்தார். வந்தாலுமென்ன? அவருடைய மனம் அரசாக்ஷிவிஷயத்தில் அணுவளவும் பராக்காகவில்லை. தன்னுடைய வேலையை ஆரம்பிக்கவுமில்லை. மனுதாரர்களின் முறைப்பாட்டில் செவி சாய்க்கவுமில்லை. ஒருவருடனும் பேசவுமில்லை. மற்றவர்களின் பேச்சைக்கேட்கவுமில்லை. இவ்வாறாகச் சிலநாள் சுவரிலெழுதிய சித்திரம்போன்று சிம்மாசனத்திலும் மற்றவிடங்களிலும் உட்கார்ந்திருப்பார். கடைசியில் மந்திரிமார்கள் தட்டழிந்து ஒன்றுந் தோற்றாதவர்களாகி சக்கிரவர்த்தியிடத்திற் சென்று ஹாரூனின், காரியம் இன்னதென்று எங்களுக்குப் புலப்படவில்லையென்று முறையிட்டார்கள்.

அவரும் தட்டழிந்து ஹாரூனை யழைத்து, நெஞ்சோடணைத்து, நெற்றியை முகர்ந்து, என் அருமை மகனே, நீர் அரசாக்ஷி விஷயத்தில் ஏன் சிந்திக்காதிருக்கிறீர். இவ்விதமான சக்ராதிபதித்துவம் உமக்குக் கிடைத்ததற்காக மூச்சுவிடுந்தோறும் நீர் கடவுளைப் புகழ வேண்டியவராயிருக்க, வேறென்னென்னவோ கூறுகின்றீராமே, அதன் கருத்தென்ன? அவ்விஷயத்தில் வேறேதேனும் உமக்குத் தேவையிருந்தால் கூச்சமின்றிக் கூறும்.

யாவற்றும் உமக்குடையதாயிருக்க நீர் கவலையடையவேண்டியகாரணமென்ன? உம்மையல்லாது எனக்கு, வேறே புத்திரர் அல்லது புத்திரியுண்டோ? 'நான் எதையேனும் அவர்களுக்குக் கொடுத்து விடுவேனென்று நீர் கவலைப்படுகிறீர். அப்படியுமில்லையே. என்று மிகவும் நளினமாகக் கேட்டார்.

ஹார்முஜ், மிகுந்த வணக்கத்துடன் கைகட்டிக் கொண்டு சக்கரவர்த்தியின் சமுகத்தில் நின்று என் அருமைப்பிதாவே, தாங்கள் யாதொரு குறைவுமின்றி, சூரியனும் சந்திரனும் உலாவித்திரியும் காலமெல்லாம் சீவித்திருக்கக் கடவுள் கருணைபுரிவாராக. தாங்கள் என்னுடைய நாட்டத்தை அறியவிரும்புகிறபடியால் நான் மறைக்கக் கூடாதவனாகிறேன். தங்களின் அடிமையாகிய நன்றியறிதலையுடைய நான், கூஜான் தேசத்தில் ஒரு கேவலமான தோட்டக் காவற்காரன் வீட்டில் வளர்க்கப்பட்டு, அவ்வூரெல்லைகளடங்கலிலும் உலாவித் திரிந்தவனானதால் இப்போது ஒருதடவை என் பரிவார சகிதமாக அங்குசென்று, என்னுடைய சிறப்பை அத்தேசவாசிகளுக்குக் காட்டி மீண்டு தங்களின் திருச்சமுகமடைந்துற வேண்டுமென்று எண்ணங் கொண்டதே, என் கவலைக்குக் காரணமென்றார்.

சக்கிரவர்த்தி, புன்சிரிப்புடன், மகனே, இதற்காகத்தானா? இவ்வளவு கவலையை நீர் கொண்டீர். எப்போதாகிலும் உமக்குப் பிரீதியான விஷயங்களில் நான் தடை கூறியதுண்டா? உம்முடைய நாட்டப்படி நான் செய்து வைக்க அணுவளவும் பின் வாங்கமாட்டேனென்பதை நீர் நம்பும், இதோ ஒரு நொடியில் சிறுவர் முதல் பெரியவரீறாக, யாவரையும் கூஜானிலிருந்து இங்கு வந்து சேரும்படிக்குக் கட்டளைப் பத்திரமனுப்புகிறேன். நீர் கவலைப்படவும் கஷ்டமடையும் வேண்டாமென்றார். "ஹார்முஜ்" என் தந்தையரே, நம்முடைய காரியத்துக்காக ஒரு தேசத்தாரடங்கலுக்கும் நாம் கஷ்டத்தைக் கொடுப்பது அழகல்ல. அவர்கள் தங்களின் கட்டளையானவுடனே வந்து சேருவார்களென்பதில் சந்தேகமில்லை, வயோதிபரும், வறியவரும், சிறார்களும், பெண்களும் வழிப்பயணத்தாலடையுங் கஷ்டத்தை நான் சுமந்துகொள்ள ஒருககாலும் என் மனம் பொருந்தாது. ஆகையால் ஏழை பேரில் கிருபை கூர்ந்து, கொஞ்சநாளைக்கு எனக்கு விடை கொடுங்கள். எனக்கே தங்களை விட்டுப் பிரிந்திருப்பது கூடாத விஷயமாயிருக்கிறது. மின்வெட்டி மறைவது போல் வெகு சீக்

கிரத்திற் சென்று, கண் மூடித் திறப்பதுபோல் இங்குவந்து சே
ருகிறேன். என்னுடைய பிரிதலின் கவலையைப்பற்றித் தாங்கள்
பேசி முடிப்பதற்குள், நான் தங்கள் சமுகத்திலாகக் கடவுள்
கருணை புரிவாரென்றார்.

அப்போது, சக்கரவர்த்தியார், மகனே, உம்முடைய பிரியத்
தைத் தடுக்கக் கூடவுமில்லை. நீர் என் கண்மணியாகவும், ஈரல்
துண்டமாகவுமிருக்கிறீர். உம் பிரியம் போற் போய் விட்டு வர
லாமென்று கூறியதுடன், மந்திரிமார்களே, என் அருமந்தப் புத
ல்வரும், உங்களின் சக்கிரவர்த்தியுமாகிய "ஹார்முஜ்" கூஜானு
க்குப் பிரயாணமாகப் போகிறார். நீங்களும் துணையாய்ச் செல்ல
த்தயாராகுங்கள். நம்முடைய கடலலை போன்ற சேனைகளைத்
திரட்டுங்கள். பத்திரம், பத்திரம், ஒரு வாரத்துக்குமேல் அவ
ரை, கூஜானிலிருக்க விடாதீர்கள். அவர் எவ்வளவாகப் பிடி
வாதம் பண்ணினாலும், நீங்கள் இணங்கக் கூடாது. என்று கண்
டிப்பான கட்டளையிட்டார்.

மந்திரிமார்கள், அரசரின் சொல்லைக் கேட்டவுடனே, தலை
வணங்கி யெழுந்து சென்று பிரயாணத்திற்கான அலுவல்களை
அதி சீக்கிரத்தில் செய்து முடித்தார்கள். சேனாவீரர்கள வெகு
ஆரவாரத்துடன் அணிவகுத்து நின்றார்கள். அரண்மனையின்
பணிவிடையாளர் முதலானவர்களடங்கலும் அணியணியாக வெ
ளிப்பட்டார்கள். பிரஜைகள் பெருந்திரளாகக் கூடினார்கள்.
மேள வாத்திய கோஷ்டம் மேக மண்டலமளாவ முழக்கப்பட்
டது. குடை, கொடி, ஆலவட்டம், மயிற்பீலி, சிவிறி முதலான
விருதுகள், சூரியனின் வெப்பத்தையடக்கி நின்றன. இங்கே
இவ்வாறு நடை பெறுகிறது.



## 15-ம் அதிகாரம்.

{ஈரானரசர் கூஜானையழித்ததும்.
இளவரசியைச் சிறைவாரியதும்.}



முன்னர், ஹார்முஜுடன் அமராடித் தோல்வியடைந்து புறங்காட்டியோடிய ஈரானரசர், தன் சுயதேசமடைந்த சில காலத்தின் பிறகு, அவருக்கு, றாம் சக்கரவர்த்தின் சமாச்சாரங்கிடைத்தது. தன்னுக்குள் தானே ஆலோசிக்கத் தொடுத்தார். அதாவது, நான் "ஹார்முஜ்" இளவரசரால் தோற்கடிக்கப்பட்டேன். நம்முடைய அரச புத்திரர், அங்கிருந்து புறம் பாக்கப்பட்டார் இப்போது நான் கூஜான், அரசருக்குத் தக்க பாடங் கற்பித்து என் மனவருத்தத்தைத் தீர்த்துக் கொள்ளுகிறேன். குல் இளவரசியை யெனக்குக் கொடுக்க மறுத்தாரல்லவா? இப்போதும் என்ன சொல்கிறாரென்பதைக் கண்டறிகிறேன். என்னுடைய பிரியப்படி நடப்பதில் அவருக்கென்ன குறைவிருக்கிறது. அவர் இப்போதும் இணங்கிவந்தாரானால் மெத்த நல்லகாரியம். இல்லாதுபோனால் அவர் அருந்திய அமுதின் ஞாபகத்தை அவருக்குண்டாக்கி வைக்கிறேன்." என்பதே.

அவரின் ஆலோசனை முடிந்த பிறகு, மந்திரிமார்களை வரவழைத்து, மந்திரிமார்களே, கூஜான் தேசத்தை அழித்துச் சமதரையாக்கக் கருதி விட்டேன். ஆகையால சகல பரிவாரங்களையும் அதிக சீக்கிரத்தில் பிரயாணத்துக்குத் தயாராக்குங்களென்று கட்டளையிட்டார். அவர் வாய் மூட முன்னரேயே, மந்திரிமார்கள் படைகளைத் திரட்டினார்கள். பழிக்குப் பழி வாங்க வேண்டுமென்று ஈரானிகள் கருத்துக் கொண்டிருந்தவர்களானல், அரசரின் கட்டளை பிறந்தவுடனே யாவரும் வந்து கூடினு

ர்கள். ஈரான் அரசர், இராதாரூடராஞர். பயண முரசடிக்கப் பட்டது. ஒரு பகற் பொழுதில் நூற்றுக்கணக்கான காததூர வழியைப் போக்கி அன்று நடுச்சாம வேளையில் "கூஜான்" வந்து சேர்ந்தார்கள். அடித்தார்கள். வெட்டினூர்கள். குத்தினூர்கள். எதிர்ப்பட்ட ஒருவரும் தப்பிப் பிழைக்கவில்லை. ஆண், பெண், சிறுவர், பெரியவரடங்கலையும் சர்வ சமஹாரஞ் செய்தார்கள். கோட்டை கொத்தளங்களை யிடித்துச் சமதரை யாக்கிஞர்கள். பேருக்காவது ஒரு கட்டிடத்தையேனும் விட்டு வைக்கவில்லை.

கூஜான் அரசரும், அவரின் குடும்பத்தார்களும், தட்டழிந்து தலைகளிலடித்துக் கொண்டு ஓடி, அவ்வூர் மலைக்குகைகளை யிருப்பிடமாக்கி ஒளித்துக் கொண்டிருந்தார்கள். "குல் இளவரசியும்" கடின வேகப் புரவியில் ஆரோகணித்துத் தன் தாதிப் பெண்களுடன் ஒளித்தோடினுள். அவள் ஒளித்தோடிப் போம் போது, அவளுடைய பிரகாசமான முகத்தழகால் அவள் தான் இளவரசி யென்று ஈரான அரசர் நிச்சயித்து அவளின் புரவிக்குப் பின்னே தன் புரவியைச் செலுத்தி இரண்டுகாத தூரத்திலாகி முன் மறித்துச் சிறைவாரிஞர்.

அவளை அவர் பிடிக்கும்போது நாணத்தால் அவளுடைய சரீரம் நடுங்கிச் சப்தமிட்டாள். எவ்வளவாகக் கதறினூலும், ஈரானரசர் விட்டு விடுவாரா? அவளைத் தன் முதுகிலாக்கி, தாதியை அவளுக்குப் பின்னுலிருத்திக் கட்டிக் கொண்டு தன் பரிவாரங்களிருக்குந் தானத்துக்குத் திரும்பி வந்து அங்கிருந்து பிரயாணமாகி முன் பின் திரும்பிப் பாராமல், (என்னவோ, செய்துவிடப் போகிறவரைப் போலே) ஈரான் தேசம் வந்து சேர்ந்து இளவரசியை அரண்மனையுள் கொண்டுபோய் இறக்கி அவளைப் பார்த்து, பெண்ணே, நானும் ஒரு ஆண்பிள்ளையல்லவா? மானிடவுருவத்தில் ஏதேனும் குறைவு பட்டவஞ? நான் உன் மோக வலையுள் சிக்குண்டு, உன்னுடைய தெரிசனை கிடைக்குமோ, கிடைக்காதோ, என்பதில் தட்டழிந்து கிடந்தேன். நீ என்னை

மணக்கப் பொருந்தாமல் மறுத்த காரணம் யாதோ, கல் மனத்
தார் சினமென்னும் கனத்த கல்லை வீசி யெறிந்ததுபோல் நான்
வேண்டலை மறுத்தெறிந்தனையல்லவோவென்றார்.

அதற்கு "இளவரசி" ஈரான் அரசருக்குக் கடூரமான மறு
மொழி கொடுக்கக் கருதினாள். அக்குறிப்பை, அவளுடைய
தாதியறிந்து, மகளே, இப்போது நம்முடைய காலம் விரோத
மாயிருக்கிறபடியால் கோபத்தையடக்கிக் குணத்தைக் காட்டி
அவருக்கு சந்தோஷமுண்டாகும்படிக்கான வார்த்தைகளால் நம்
மை நாமே காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்று சைகையிற்
கூறினாள். அதனால் இளவரசி, உசாராகி, ஈரான் அரசரைப் பார்
த்து, நாயகமே, தாங்கள் கூறிய தவறுதல் என் தந்தையுடைய
கருத்தேயன்றி, என்னுடைய மறுப்பல்ல. தங்களை மணக்கப்
பொருந்தாதிருக்க எனக்கென்ன கேடு, நானோ, தங்களுடைய
பிரதிவிம்பத்தைப் பார்த்து, தங்கள் பேரில் இச்சையுற்று தத்த
ளித்துக் கொண்டிருந்தேன். தங்களுடைய அழகுக்குச் சமதி
யானவர்கள் உலகத்தில் எங்கேனுமிருக்கிறார்களா? இதோ எதி
ரிலிருக்கிற நிலக்கண்ணாடியில் தங்களுடைய முகத்தைத் தாங்க
ளே பார்த்தால் என்னுடைய சொல்லை நிசமென்று நினைப்பீர்கள்.
தங்களுக்குக் கண்ணேறு படாதிருக்கக் கடவது. தங்கள் கண்
ணிமைகளின் அருகுகளோ, அஞ்சனத்தைத் தேடாது. தங்
கள் சிரசின் இலக்ஷணமோ கிரீடத்தை நாடாது. தங்களின்
வெண்மையான தாடி மயிருக்கெதிரே வாள் முனையின் பிரகாச
மும் ஈடாகமாட்டாது. அதில் தப்பித் தவறியிருக்கும் ஒன்றி
ரண்டு கறுத்த மயிர்களோ, வாலிபப் பெண்களை வசப்படுத்திக்
கட்டும் கயிறு போன்றிருக்கின்றன. தங்களுடைய சிரசில் மயிர்
வளர்ந்திருந்தால் அதின் வெண்மையின் பிரகாசத்தால் சூரியன்
வெட்கியடையும். இப்போது சிரைத்து விட்டிருப்பதால் சந்தி
ரன் சாளயப்பட்டுக் கொண்டிருக்கிறது. நான் மரியாதைக்
குறைவாய்ப் பேசுகிறதைப்பற்றி மன்னிக்க வேண்டும். தங்க
ளுடைய கண்களோ, குஜ்ராத்துப் பசுவின் கண்கள் போன்றி

ருக்கின்றனவென்று ஒவ்வொருறுப்பையும் எடுத்தெடுத்து நிந்தாஸ்துதியாகக் கூறினள்.

அதைக் கேட்டுக் கொண்டிருந்த ஈரான் அரசர் பெண்ணே உண்மையாய்ப் பேசுவதுபோற் பேசி, பரிகாசம் பண்ணுகிறது போற் காணப்படுகிறதே யென்றார். இளவரசி, நாயகமே கடவுள் மன்னிப்பாராக. பரிகாசம் பண்ணத் தகுதியுடையவர்கள் தாங்களே. தங்களைக் கடவுள், அதிகாரமுடையவர்களாகப் படைத்திருக்கிறார். சிற்றடியாளாகிய நான் பரிகாச வார்த்தையாடுவது அழகாகுமா? இவ்விஷயத்தில் தாங்கள் அதிகமாய் சந்தேகங் கொண்டால், தங்கள் பேரில் நான் வைத்திருக்கும் இச்சையை யில்லாதாக்கி, முன் பின் யோசிக்காமல் கடூரமான வார்த்தைகளைக் கூறத் தலைப்பட்டு விடுவேனென்றாள். அதனால் அரசர் அச்சமுற்று யாதொன்றும் பேசாமல், நல்லதிருக்கட்டும். விவாக முகூர்த்தம் எப்போது வைக்கலாம் அதைமட்டில் தெளிவாகச் சொல். மற்ற விஷயங்களில் உனக்குப் பிரியமிருந்தால் பேசலாம், இல்லாது போனால் மவுனமுற்றிருக்கலாமென்றார்.

அதற்கிளவரசி, அரசரே, என்னை இரண்டு வருடமாய் ஈரற்குலை நோய் துன்பப்படுத்திக் கொண்டிருக்கிறது. என் சுயதேசத்திலிருக்கும் போதும் அதற்காக அனேக பக்குவங்கள் செய்து வந்தும் பிரயோசனப்படாமற் போய் விட்டது. இப்போது சவுக்கியமடைவதை வழி பார்த்துக்கொண்டிருக்கிறேன். மேலும், நான் தங்கள் கையில் சிறைவாரப்பட்டு, தங்களுடைய அரண்மனையிலேயே யிருக்கும்போது நான் சுகப்பட்டவுடனே தங்கள் பிரியப்படி செய்துக்கொள்ள யாதொரு தடையுமில்லை யென்றாள். அதற்கரசர், இளவரசியே, விவாக முகூர்த்த காலம் நிட்சயிக்கப்பட்டு விட்டால், உன் பரிசவுணர்ச்சியின சுகமும், முத்தமிடுவதின் இன்பமும் நான் அடையக் கூடியவனாகிறேன். விரக வேதனைத் தீயால் கரிக்கப்பட்டு, பொறுதியற்றவனுக்கவும்,

உறுதியற்றவனாகவுமிருக்கிறேன். நாம் செய்துக்கொள்ள வேண்டிய அந்த விஷயம், காலத்தை யெதிர்பார்த்து நிற்கிறதாயிருப்பதால் அந்தரங்கத்தில் அந்த வேலையில் நடை பழகிக்கொள்வது நயமாகக் காணப்படுகிறதென்றார்.

அவருடைய சொல்லைக் கேட்டவுடனே, இளவரசிக்கு, அடக்கமுடியாக் கோபமுண்டது. நெற்றியிற் புருவமுமேற முகத்தைச் சுளித்து, அரசரே ஒருத்தி பேரில் மோகமுற்ற ஆண்பிள்ளை, அவளுடைய இன்பத்தைப் பெற்றுக் கொள்ளுகிறவரையில் அவளுக்கு வசப்பட்டு அவள் சொற்போல் நடந்து வருவது வழக்கமாயிருக்கிறது. தாஙகள் கொஞ்சம் பிடிவாதமுடையவர்களாய்க் காணப்படுகிறீர்கள். ஆண்பிள்ளைகள் விரகத்தையடக்கக் கூடாதவர்களாயிருக்கிறார்கள். தங்கள் விரகவேதனையைத் தணித்துக் கொள்ளத் தேடுகிறார்களேயல்லாமல் மற்றவர்களுடைய சொல்லையும் துன்பத்தையுங் கவனிக்கிறார்களில்லை. என் தந்தையர் பேரிற் சத்தியமாக, இன்னொருமுறை முன் கூறியதுபோல் தாங்கள் கூறப் புகுந்தால் என்னைப் பிணமாகவே காணப்பெறுவீர்களென்று கடிந்து கூறினாள். முதிர்ந்த வயதையுடைய ஆண்பிள்ளைகள் இளம் பருவப் பெண்களுடைய விருப்புக்குத் தணிந்து நிற்பது வுலக வழக்கமானதால், நம் தாத்தாவாகிய ஈரானரசர், அச்சமுற்று, யாதொன்றும் பேசாமல், அவளுடைய பாசாங்கு நோய்க்குப் பரிகாரந் தேடுவதிற் பராக்கானார்.

ஆனாலும், காம லாகிரியின் மிகைப்பால் தினந்தோறும் அவளிடத்து வந்து அவளைப் புகழ்ந்து, நயவசனங்கூறித் தன்னுடைய நாட்டத்தை முறையிடுவார். முறையிடுந்தோறும் அவள் குற்றுடை வாளையுருவி, தற்கொலை செய்துக்கொள்ள எத்தனிப்பாள். குய்யோமுறையோவெனக்கூக்குரலிடுவாள். இவ்வாறாகத் தன் மானத்தைக் காப்பாற்றிக்கொண்டிருந்தாள். அரசரோ கைதேர்ந்த பண்டிதர்களடங்கலையும் வரவழைத்து, இளவரசிக்குப்பரி

காரஞ்செய்யக் கட்டளையிட்டார். அவர்களாலானவரையில் கோடிக்கணக்கான மருந்துகளைப் பிரயோகித்தார்கள். மன நோய்க்கு மருந்துண்டுமா? எவ்வளவுக்குப் பக்குவஞ் செய்கிறார்களோ, அவ்வளவாக, ஈரற்குலைநோய் அதிகப்பட்டுக்கொண்டேயிருந்தது.

——:(*):——

## 16–ம் அதிகாரம்.

### ஹூர்முஜ் கூஜானுக்கு வந்ததும். ஈரானுக்குப் போக இடைக்கட்டியதும்.

——:(:):——

"ஹூர்முஜ்" கூஜானுக்குச் சென்று, இளவரசியின் காலில் கும்பிடு போடத் தயாரானது, 14-ம் அதிகாரம் பார்த்தவர்களுக்குப் பரிஷ்காரமாய்த் தெரிந்திருக்குமல்லவா? அவர் றாம் சக்கரவர்த்தியின் உத்தரவு பெற்றுக்கொண்டு சப்தசாகரம் போன்ற இரதகஜதுரகபதாதிகள் புடை சூழப் பிரயாணமாகி, காடுமலை, வனம் வனாந்திரம், ஆறருவி முதலான யாவற்றையுங் கடந்து, சொற்ப காலத்திற்குள்ளாக "கூஜான" எல்லைச் சராகத்தில் வந்து சேர்நது தாணயமிட்டுத் தங்கினர். கூஜான் கோட்டையே யில்லாதிருந்தது. கட்டிடங்களின் அடையாளங்கள் காணாது போயிருந்தன. தரைமட்டத்தில் அஸ்தி பாரக் கற்கள் காணப்பட்டன. மேற் கூறையின் தளபாடங்கள் சில சிதறிக்கிடந்தன. சில கரிந்து கிடந்தன. துர் வாசனை வீசிக் கொண்டிருந்தது. மிருக சாதிகள் மேய்ந்து கொண்டிருந்தன. பட்சியினங்கள் பறந்துக் கொண்டிருந்தன. மனித சஞ்சாரமென்பது அறவேயில்லாதிருநதது. ஆந்தையுங் கூகையும் அலறிக் கொண்டிருந்தன.

கூஜான் தேசம் இவ்வாறிருப்பதை, ஹூர்முஜ், கண்டு திகில் கொண்டு, திசைதப்பி வந்துவிட்டோமோ, யாதோவெனச்

சந்தேகித்துச் சண்ணைச் சசக்கிச் கருத்தைச் செலுத்திப் பலவாறு ஆலோசித்து ஒன்றும் புலப்படாமலிருந்து கடைசியில், நான்கு திசகிலும் சனங்களை யனுப்பி யெதிர்ப்பட்ட மனிதர்களைப் பிடித்து வருமபடிக்குக் கட்டளையிட்டார். அது போல் சில குதிரை வீரர்கள் நான்கு திசையிலுஞ் சென்றார்கள். ஒரு திசை யிற் சென்றவர்கள் ஒரு வாலிபனைக்கண்டு பிடித்து, ஹாரூமுஜிடத்திற்குக் கொண்டு வந்தார்கள். இரண்டு காவதத் தூரத்துக் கப்பால் பிடிபட்ட அவ்வாலிபனிடத்தில், கூஜான் தேசச் சமாசாரத்தைப்பற்றி "ஹாரூமுஜ்" விசாரித்தார்.

அவன் மிகுந்த வணக்கத்துடனும் துயரத்துடனும், எஜமானே, ஈரான் அரசர், படையெடுத்து வந்து இவ்வூரையழித்து நிர்மூலமாக்கி, நுல் இளவரசியைச் சிறைவாரிக் கொண்டு போய் விட்டார். கூஜான் அரசர், தன் பெந்துக்களுடன் மலைக் குகைக்குள் மறைந்திருக்கின்றாரென்று விவரித்துக் கூறினன். அவனுக்கும் அவர் ஒளித்திருக்கும் மலைக்குகை யின்னதென்று தெரியாது. இவ்வித துயரமான சொற்களைக் கேட்டவுடனே, ஹாரூமுஜ், அறுபட்ட குக்குடம் போல் அலமரல் கொண்டு கிடந்தார். அடிக்கடி பெருமூச்செறிந்து, ஆ, என் பிரிய நேசியாகிய இளவரசியே,யெனக் கரைவார். ஆ, என்னுடைய கிரஹசாரமே, என் முகத்தைக் கறுப்பாக்கி விட்டாயே, என்னுடைய நம்பிக் யென்னும் குடிப்பில் கைசேதமென்னும் கைப்பைக் கலந்து விட்டாயே. நன்றியறிதலையுடைய என் பிரிய தேசிக்கு என்ன துன்பங்கள் கஷ்டங்கள் சம்பவித்தனவோ? அறியேன். நான் உயிருடனிருநது அவள் இறந்தாளென்னும் சொல்லைக் கேட்காதிருக்கக்கடவுள் கருணைப்புரிவாராக. ஆ! தறிபட்ட என்நெஞ்சத்தை தைப்பவராருமில்லையே. இரத்தங் கொதித்து ஈரல் விம்மி உயிர் பிரிய நெருங்கி விட்டதே யெனப் புலம்புவார். ஈரானுக்கு, பரிவார சகிதமாகச் சென்று அழ்வூரை நிர்மூலமாக அழித்துவிட வேண்டுமென்று கருதுவார். தற்கொலை செய்துக் கொள்ள ஆரம்பிப்பார். அப்படி நாம் செய்துக்கொண்டால், இளவரசி

யை ஈரான் அரசர் இம்சிப்பாரே, அவள் கலங்குவாளே யென அவ்வெண்வெண்ணத்தை மறுப்பார். இவ்விதமான யோசனையிற் சிந்தையைச் செலுத்தியவராகக் கலங்கிக் கொண்டிருந்தார்.

அப்படிக்கிருக்கும்போது, ஈரானிலிருந்து தூதுவர் வந்திருக்கிறதாக, ஹுர்முஜுக்குச் செய்தியறிவிக்கப்பட்டது. அவர் உடனே அங்கிருந்த சகல பேர்களையும் வெளியிற் போகச்செய்துவிட்டு, தூதியை உள்ளே வரவழைத்து வுட்கார்த்தி விசாரிக்க ஆரம்பித்தார். வந்தவள், ஹுர்முஜுக்கு வந்தன மளித்துச் சுபசோபனங்கூறி வணக்கத்துடன் நின்றுக்கொண்டு எஜமானே நான் ஈரான் அரசரின் அரண்மனைப் பணிவிடைக் காரிகளுள் ஒருத்தியாயிருக்கும். எங்களரசர், கூஜான் தேசத்தை நிர்மூலப்படுத்தி, குல் இளவரசியைச் சிறைவாரிக்கொண்டு வரும்போது இளவரசியின் தாதி யொருத்தியும் கூடக் கொண்டு வரப்பட்டு இளவரசிக்குத் துணையாயிருந்து வருகிறாள்.

இளவரசியோ, வயிற்று நோயால் வாதனைப்பட்டுக் கொண்டிருக்கிறாள். அவளுடைய காரியங்களைப்பற்றி, தாதியானவள் எனக்கு விவரமறிவித்திருக்கிறாள். எப்போதும், என் வயது வெறுமனே முதிர்ந்து போகிறதே யென்று பலவாறு புலம்பியழுதவளாகவேயிருக்கிறாள். நானும், என்னாலான அனேக தேறுதல் கூறினேன். ஒன்றும் பிரயோசனப்படவில்லை. அப்படிக்கிருக்கும்போது, ஒரு நாளிரவு, இளவரசி, என் பேரில் அதிக பட்சங்காட்டி, அவளுடைய அந்தரங்கம் யாவற்றையுங் கூறி, இந்திருபத்தை, ரோமாபுரிக் கரசராகிய தங்களிடத்தில் கொடுத்து மறுமொழி வாங்கி வர வேண்டு மென்றும், இல்லாது போனால் உன் பேரிற் சத்தியமாக என் உயிரைப் போக்கிக் கொள்ளுவேனென்றும் மெத்த வுசாருடன் போய் வர வேண்டுமென்றும் என்னை வேண்டிக்கொண்டாள். என்றால் ஒருவரும் ஒரு வுபகாரத்தையும் பெற்றதில்லை யென்றாலும் இந்த ஒரு கருமத்தில் நாம் இடையிறுக்கி நிற்க வேண்டுமென்றெண்ணி, அக்கா

சித்தை வாங்கிக்கொண்டு, மஹா கஷ்டத்துடன் மண்ணுடன் மல்லுக்கு நின்றவளாக இவ்வளவுதூரம் வந்து சேர்ந்தேன். போர்வீரர்கள் தாணயமிட்டிருப்பதைக் கண்ணுற்றேன். தங்களின் திருநாமத்தைக் கேட்டேன். ஹார்முஜ் சக்கரவர்த்தியென்று கூறினார்கள். இதோ, அக்கடிதமிருக்கிறது. ஒப்புக்கொண்டு, மறுமொழிக் கடிதம் கொடுங்கள், என்று வேண்டி நின்றாள். ஹார்முஜ், அவளுடைய வார்த்தைகளால் சந்தோஷமுற்று, பிறகு இளவரசியை நினைத்து அழுதுத் தாதியைக் கழுத்தைக் கட்டி வாழ்த்தி, பிரிய நேசியின் நிருபத்தை வாங்கிக் கண்களிலொத்தி முகர்ந்து, முத்திரை விடுத்து வாசித்தார்.

குல் இளவரசியின் நிருபம் வருமாறு.

ஆ, என் நம்பிக்கை யென்னும் சிங்காரவனத்தின் விருக்ஷமே, ஆ, என் செவிக்கினிமையான மன நிறைந்த வைடூரியமே. ஆ. என் கண்ணின் ஒளியே, ஆ, என் உடலின் துன்பத்தையும் மனதின் கவலையையும் நீக்க வந்த மாணிக்கமே, ஆ, புட்பத்துடன் வாதாடும் பூங்காவனமே, ஆ. அன்று மலர்ந்த புட்பங்கள் அஞ்சலி செய்ய வந்த அருமலரே, இதென்ன கோபம்? ரோமாபுரிச் சக்கிரவர்த்தியாகி சந்தோஷத்துட னிருக்கின்றீரே. துக்க சாகரத்தில் ஆழ்ந்து கிடக்கும் அடியாயளை மறந்து விட்டிருப்பது நன்றிமறத்தலல்லவா? சீக்கிரத்தில் வருவதாகச்சொல்லிப் போனீரே. என்னை விரகத்தீயிலவேக விட்டு விட்டு, அங்கு சென்று மவுனமுற்றிருக்கின்றீரே. ஆ, நன்றி மறந்த நரசிம்மமே என்னளவில் உம் முகத்தைத் திருப்பி என்னிடத்தில் என்ன சொல்லிப் போனீரென்பதை யெண்ணிப்பாரும். பிரியா நேசம் இவ்வாறென்பதில் புத்தியைச்செலுத்தி ஆலோசியும்.

நாம் அரசரும் அரசியும்போன்றிருந்தோம். நீர் இப்போது அரசர்களுக்கரசராய் விட்டீர். காமராஜனே எல்லாரை விட மேலானவன். அனேகமாயிரம் அரசர்கள பேரில் அதிகாரஞ் செலுத்தக் கூடியவன். நக்ஷத்திரம் பல, மதியொன்று, என்பது

போல், கோடானு கோடி அரசர்களிருந்தும் அவர்களை யெல்லாம் அடக்கியாளக் கூடிய அரசர் ஒருவருமிருக்கிறார். யோசேப் என்பவர், எஜிப்துக்கரசரான பிறகும், ஸலீச்சாவுக்கு அடிமை போன்றிருந்தது, காமத்தின் காக்ஷியல்லவா? என்பதைக் கவனித்து சீக்கிரம் வந்து சேரும். என் கழுத்தைக் கட்டிமினவி நான் பேசும் இனிமையான வார்த்தைகளின் இன்பத்தைப் பெற்றுக் கொள்ளும்.

நான் அனேக நாளாய் உம்மைப் பிரிந்த துக்கத்தால் ஒலமிட்டழுதவளாகவே யிருக்கிறேன். ஒரு இரவிலாவது நான் ஆரோக்கியத்துடன் நித்திரை போனதில்லை. நீர் பிரயாணமாகிற போது அதி சீக்கிரத்தில் திரும்பி வருவதாக வுறுதி வாக்களித்ததை நினைத்துப்பாரும். என் சரீரத்தை உமக்குப் பலியிட்டவளாக விருந்தும், உம்முடைய வாக்கு மறுதலின் பேரில் துக்கித்தவ்ளாகவேயிருக்கிறேன். உம்முடைய நேசத்தாலேயே அனேக வசைகளைக் கேட்டும், கஷ்டங்களை அனுபவித்தும் வருகிறேன். என் தந்தையரின் உபதேசங்களைத் காறுமாறுக்கினேன். தாயுடைய சொற்களைத் தட்டிவிட்டிருக்கிறேன். அநியாயக்காரராகிய நீர்சற்று என்பேரில் இரக்கம் வைத்து, நான் ஏதேனுந் தப்பிதஞ் செய்திருந்தால், உமக்கும் எனக்கும் மாமனுராகிய மன்மத ராஜனுக்காக மன்னிப்பருளும். நான் தற்போது வுயிரிழக்குந்தறுவாயிலிருக்கிறேன். இதற்கு மேல் கவலையைச் சுமக்க எனக்குச் சக்தியில்லை.

சுரான் அரசனின் கோட்டையில் இடிவிழ. அவனுடைய கழுத்திற் கத்திபாய. நான் துக்கக் கடலுள் முக்குளியிட்டுக் கொண்டிருக்கும்போது, கூஜானுக்குப் படையெடுத்து வந்து, பட்டணத்தையழித்துப் பாழாக்கி, என் அரண்மனை முதலானவைகளையும் இடித்துத்தரையாக்கி, என்னையும் சிறைவாரி, இங்கு கொண்டு வந்து வைத்திருக்கிறான். எனக்கோ, உம்முடைய முகதெரிசனையின் பேரிலேயே நாட்டமிருக்கிறதன்றி வேறொன்

திலுமில்லை. நான் வயிற்று நோயால் வாதனைப்படுவதாகக் கூறி அவன் என்னைத் தொடாதிருக்கும்படியாக எப்போதும் என் கையில் ஒரு குற்றுடை வாளை வைத்து, என் மானத்தைக் காப்பாற்றிக் கொண்டு வருகிறேன். தப்பித்தவறி, ஏதேனும் அவன் பிடிவாதஞ் செய்ய முனைந்தால் அக்குற்றுடை வாளால் என்னை நானே சேதஞ் செய்து கொள்ளத் தீர்மானித்திருக்கிறேன். உமக்கு ஒரு மானக் குறைவும் நேரிடாதிருக்க வேண்டுமானால் கூடிய சீக்கிரத்தில் இங்கு வந்து சேர்ந்து, எவ்விதத் தந்திரோபாயத்தாலாவது என்னை யிங்கிருந்து வெளிப்படுத்திக் கொண்டு போய்ச் சேரும், இல்லாதுபோனால் என் உயிரை மாய்த்தவர் நீரேயாவீர். நானும் இவ்வுலகத்தை விட்டு, பரலோக யாத்திரைக்குத் தயாராகவேயிருக்கிறேன். இதைவிட அதிகமா யெழுதவெனக்குச் சாவகாசமும் சக்தியுமில்லை. கடவுள் உமக்குக் கிருபைபுரிவாராக. என்பதே.

இதை, ஹார்முஜ் வாசித்து முடித்து, குல் இளவரசியை நினைத்து மிகுத்த கைசேதப்பட்டு, தாரைதாரையாய்க் கண்ணீரோட வழுதார். விதிகெட்ட நான் கிஞ்சிற்று முன் யோசனை செய்யாது போனேனே. றாமிலிருந்து, கூஜானுக்குத் தெளிவான கடிதப் போக்கு வரததுச் செய்திருப்பேனேயானால், கூஜான் தேசத்தை யேறிட்டுப் பார்க்கவும் ஈரான் அரசனுக்கு சக்தியிராதே. நானே இவ்வூரை யழித்தவனாகிறேன். ஆ, நான் என்ன செய்வேன்? நேசங்காட்டி மோசஞ் செய்தவர்களை நினைத்து வருத்தப்படுவதில் என்ன பிரயோசன மிருக்கிறது. எனப் பலவாறு சிந்தித்து துக்கத்தாழ்ந்தவராகவே மறுமொழிக் கடிதமெழுதிக் கொடுத்து, தாதியைப் பபணப்படுத்தி அனுப்பி வைத்தார்.

———(*)———

## ஹூர்முஜின் கடிதம் வருமாறு.

கஸ்தூரிவாசங் கமழும் அளகபாரத்தின் அருங்கிளியே,
நீ. பூவாயிருக்கிறாய் நான் புல்லாயிருக்கிறேன். என் மனப்
பிணியை யகற்ற வல்ல மருந்து நீயே, ஆ, என் மனநிறைந்த வா
ழ்வே, என் கண்பார்வையே, அப்பார்வையின் பிரகாசமே, நீ அர
சியாயிருக்கிறாய். நான் அடிமையா யிருக்கிறேன். நீ, சந்திர
னாயிருக்கிறாய். நான், அதின் களங்கமா யிருக்கிறேன். நான்,
வீடா யிருக்கிறேன். நீ, விளக்கா யிருக்கிறாய். நான், முள்ளா
யிருக்கிறேன். நீ, முத்தாயிருக்கிறாய், விண்ணப்பத்தின் பின்
னால் விருப்பத்தை வெளியாக்கிறேன். நீ, செவிசாய்த்துக் கே
ட்பாயாக. என்னுடைய வந்தனத்தை ஒப்புக் கொள்பவளாக
வும், என் வாசகத்தைக் கேட்பவளாகவும், நீ, இருக்கவேண்டும்.
பட்ச நிறைந்த உன்னுடைய கடிதம் வரப்பெற்றேன். மின்ன
லைப் பூவாசமதிக்கும் தூக்கணாங் குருவிபோன்ற நான் அந்நிரு
பத்தைப் பிரித்து நோக்கினேன்.

அது நெருப்பாகி என் நெஞ்சைக் கரித்துவிட்டது. அதி
லெழுதப்பட்டிருந்தவை யெண்ணெயாகி என் நெஞ்சில்
நின்று எரிந்துக் கொண்டிருக்கிறது. அதை நான் வாசித்த வுட
னே உன்னை நினைத்து வுணர்வற்று புழுதியிற் வீழ்ந்து புரண்
டேன். சற்று நேரத்தின் பிறகு நெஞ்சில் நின்ற நெருப்பு ஈர
லிற்றுவவே பதறி யெழுந்தேன். ஈரான் அரசனின் தலையில்
இடிவிழ. அவனுடைய ஆசையில் மண்விழ. அவன் செய்த
கொடுமைகளை நான் தெளிவா யறிந்துக்கொண்டேன் ஒன்றி
ற்கும் நீ கலங்கவும் கைசேதப்படவும் வேண்டாம்.

இன்னம் சில நாள் பொறுத்திரு. கடவுளின் கிருபையை
ஆதரவு வைத்திரு. நான் ஹாமிலிருந்து, தற்போது இங்கு வந்
திருக்கிறேன், நம்முடைய காலக்கிரகம் என்னசெய்யப் போ
கிறதென்பதைக் கண்டறிவோம். நீ, அந்தரங்கத்தை வெளிய

படுத்தாது அடக்கத்துடன், நான் அங்கு வந்து சேர்வதை யெதிர் பார்த்தவளாயிரு. நான் வெகு சீக்கிரத்தில் அங்கு வருகிறேன். கடவுள்பேரிற் சத்தியமாக ஒரு நிமிட நேரமாவது நான் உன்னை மறந்திருக்கவில்லை. நான் பெற்றுக்கொண்ட, மகுடாபிஷேக முதலிய வற்றை மண்ணாக மதித்து விட்டுப் போட்டு உன் பேரிற் கொண்டிருக்கும் இச்சையைப் பெரிதாக மதித்து இவ்வளவு தூரம் வந்து விட்டேன். றாம் சக்கரவர்த்தி முதலானவர்கள் என்பேரில் வைத்திருக்கும் கிருபையை இவ்வாறென் றெடுத்துக்காட்ட இக்கடிதம் இடம் பெறாது. சுருக்கிக்கூறுகிறேன். என்னுடைய பிரியத்தை மறுப்பவர் ஒருவருமில்லை. உன்னுடைய நன்றியறிதல் என் மனதில் கல்லிற்றீட்டிய அட்சரம் போன்று நிற்கிறது. அப்படியிருக்க, உன்னை மறந்துவிட்டு சந்தோஷத்துடனிருக்க எனக்கு எங்கிருந்து இடம் வாய்க்கப் போகிறது. என்னுடைய காலக்கிரஹம் என்னைச் சிம்மாசனத்தில் ஏற்றிவிட்டது. அச்சிம்மாசனம் எனக்குப் பிணப்பெட்டி போன்றிருந்தது. பிரஜைகள், எனக்கு ஆலாத்தியெடுக்கும் தங்கக்காசுகள் என் பார்வையில் அக்கினி போன்றிருந்தன. என் கிரீடத்தில் பதிக்கப்பட்டிருக்கும் வைரங்கள், என் கண்டத்தைத் தறிக்கும் கத்திபோன்றிருந்தன.

நான் அணிந்திருந்த சரிகை யுடைகளின் பிரகாசம் எனக்கு நெருப்பின் துளிர்போன்றிருந்தது. அங்கு முழக்கப்படும் மேளவாத்தியத் தொனிகள், எனக்கு ஒப்பாரிபோன் றிருந்தது. நான் அணிந்திருந்த வுள்ளுடை, யெனக்குப் பிணவுடை போன்றிருந்தது. அரசாக்ஷிக் குரியவைகளைக் காணுந் தோறும், என்னுடைய கெட்டவிதி என் ஞாபகத்துக்கு வந்துக்கொண்டிருந்தது, மூச்சுவிடுந்தோறும் உன்னுடைய நினைவாகவே யிருக்கும்போது எனக்குக் கெட்ட எண்ணம் எவ்வாறு வுண்டாகப் போகிறது. நான் உடலாகவும், நீ, உயிராகவு மிருப்பதை நீ அறியாத்தவளல்ல. இதைவிட அதிகமாக எழுத எனக்குச் சக்தியுமில்லை. கதை அதிதமாகவும், இரவு கொஞ்சமாகவு மிரு.

க்கிறது, ஆ, கடவுளே, என்னுடைய வேண்டுதலைச் செவியேற்று, என் நாட்டத்தை நிறைவேற்றுவீராக—என்பதே.

தாதியானவள் கடிதத்தை வாங்கிக் கொண்டு பிரயாணமான பிறகு, ஈரானுக்குத் தனித்துப்போக, ஹூர்முஜ், நாட்டங்கொண்டு, தன் பரிவாரங்களை அவ்விடத்தில் நிறுத்தி, தான் வருகிறவரையில் அங்குதானே யிருக்கவேண்டுமென்று கட்டளையிட்டார். மந்திரிமார்கள் தடுத்தார்கள். ஹூர்முஜ், கேட்கவில்லை. ஐயோ, பரிதாபமே, இதற்கென்ன செய்கிறது? ஹூர்முஜ், தன்னைத்தானே கொல்ல வழிதேடிக்கொண்டாரே சக்கரவர்த்திக்கு, நாம் என்ன மறுமொழி கொடுப்போம். என்று பலவாறு யோசித்துக் கடைசியில் தனித்துச்செல்வதையே பிடிவாதமாகக் கொண்டு நிற்கும் ஹூர்முஜை, கடவுளிடத்தில் பரஞ்சாட்டி விடையளித்துவிட்டு அங்குதானே தங்கியிருந்தார்கள்.



## 17-ம் அதிகாரம்.

### ஹூர்முஜ், மயில்வனத்திலானதும், 'பத்லீமூவின் சூனியத்திற் சிக்கியதும்'



"ஹூர்முஜ்" விடைபெற்றுக்கொண்டு, துக்க சாகரத்தில் கால்வைத்தவராவும், இரவு பகல், பசித்தவராகவும் தாகித்தவராகவும், நடந்து செல்லும்போது, இடைவழியிலுண்டாகும் கஷ்டங்களையும் துஷ்ட மிருகங்களின் அச்சத்தையும், வெய்யலின் காங்கையையும், பூமியின் கொதிப்பையும், காலின் கொப்பளத்தையும் ஒரு திரணமாகவும் மதிக்கவில்லை. மலைகளிலிருந்து, கிளம்பும் அக்கினி, பெரிய அபாயத்துக் கிடமாயிருந்தது.

நச்சரவங்கள் நாற்பாலும் ஓடிக்கொண்டிருந்தன. வேங்கைப்புலிகள் வீறிட்டுக்கொண்டு திரிந்தன. கடூரமான நடையாலும் பசியாலும் தாகத்தாலும் ஹாரூன் சஹிக்கமாட்டாதவராகி, உணர்வற்று நிலத்திற் சாய்ந்துவிட்டார். வெகுநேரத்தின் பின்னல் உசார் பெற்றெழுந்து உதிர்ந்து கிடந்த பழுப்பிலைகளைப் பொறுக்கிப் புசித்துக் களையாறிக்கொண்டு முன்னேறிக் கொஞ்சதூர நடந்தார். திடுகூறாக விசாலமான ஒரு பெரிய வனந்திரம் எதிர்ப்பட்டது. அதில் ஆயிரக்கணக்கான சிறுத்தைகளும், காட்டுமாடுகளும் கழுதைகளும், ஒன்றோடொன்று முட்டிக்கொள்ளுவதும், ஒன்றின் தலையில் வேறொன்று கால்வைத்து நிற்பதுமாகவிருந்தன. அவைகளுக்கு நடுவில் பிரகாசமான செழித்த மரமொன்று தென்பட்டது. அதன் இலைகள், மின்னலைப்போல் பிரகாசித்துக்கொண்டிருந்தன, ஹாரூன் அவைகளைக்கண்டு மிகுந்த வியப்படைந்து, அம்மிருகங்களுள் ஒன்றை அம்பால் எய்து அல்லது கைப்பிடியாய்ப் பிடித்து அறுத்துப் புசிப்போமென்று நினைத்தார். அவருடைய எண்ணம் முடிவு பெறுவதற்குள்ளாகவே ஒரு பசு, கிர்றென்று சுழன்று பூமியில் விழுந்தது. ஆகாயத்தினின்று நெருப்பிறங்கி அம்மாட்டைச் சுட்டுவைத்தது. அவர், இந்த அதிசயத்தைப்பார்த்து அதைத்தின்பதற்கு மனமில்லாதவராக, ஆலோசனையில் மூங்கியிருந்தார்.

அப்படியிருக்கும்போது, அந்த சுட்ட மாமிசம்தானே குதித்துப்பாய்ந்து ஹாரூனின் வாயுட்புகுந்து, வயிற்றுக்குள் சென்றுவிட்டது அப்போது அவருக்குத்தாகம் அதிகரித்துத் தன்னை மறந்தவராகித் தண்ணீர்த்தேட ஆரம்பித்தார். எதிரில் ஒரு குளம் தென்பட்டது, அக்குளததிலிறங்கி ஒருமிடர் தண்ணீரைக்குடித்தார். உடனே யவருக்கு பிரக்கினையற்று அக்குளக்கரையில் சாய்ந்துவிழுந்தார். சற்றுநேரததின் பிறகு தெளிவுபெற்றெழுந்தார். நான்குபக்கமும் சுற்றிச் சுற்றிப் பார்த்தார். முன்னிருந்தவனமும் குளமும் காணப்படவில்லை. ஆனல் அதைவிட மிக்வும் அலங்காரமான ஒரு சிங்காரவனம் தென்பட்டது.

அதின் பூமி, நீலமாகவும், மரங்கள் பச்சைமரகதமாகவும், இலைகள் பேரோஜாகவும், பூக்கள் புஷ்பராகமாகவும், ஆறுக ளின் ஜலம் கபில நிறமாகவும், பனித்தண்ணீர் நீல நிறமாகவுமிரு ந்தன. அத்தோட்டத்தின் ஆச்சரியமான நிறத்தை அவர் பா ர்த்து அதிசயப்பட்டு, ஆ, கடவுளே, இதென்ன அற்புதமெ ன்று வியந்து கேட்டார். அவருடைய நினைவு முடிவதற்குள் ளாக அவ்வனத்தின் விருக்ஷங்களில் புஷ்பித்திருந்த பூக்களெ டங்கலும் திடீரென்று மயிலுருக்களாகி, மரக்கிளைகளில் நின்று ஆடவும் பாடவுமாயின. பசு நிறம் பொருந்திய ஆயிரக்கணக் கான சர்ப்பங்கள் தலை நிமிர்த்து அங்கு மிங்கும் ஊர்ந்து கொண்டிருந்தன.

இவற்றை, ஹாருமுஜ், பார்த்துப் பயந்து ஓட்டம் பிடிக்க ஆரம்பித்தார். அதைக்கண்ட, மஞ்ஞைகள் பறந்துவந்து அவ ருடைய தலையிலுட்கார்ந்துக்கொண்டு கொத்தத் தலைப்பட்டன, பாம்புகள் அவருடைய காற்களில் வளையமிட்டுச் சங்கிலிபோல் சுற்றிக்கொண்டன. பரதேசியாகிய, ஹாருமுஜ், தன்னுணர் வற்றுக் கீழேவீழ்ந்தார். அப்போது அவருடைய தலையிலு ட்கார்ந்திருந்த மயில்கள் பறந்துபோயின. காலைச்சுற்றிக்கொண் டிருந்த சங்கிலிகள் பழயபடிக்குப் பச்சை நிறப் பாம்பாகிப் பூமியில ஊர்ந்துக்கொண்டிருந்தன. இவ்வாறு இரண்டு மூன் றுமுறையான பிறகு ஒருவித சப்தம் அவருக்குக் கேட்டது. திரும்பிப் பார்த்தார். யௌவன ரூபீகாரத்தையுடைய ஒரு பரி ப்பெண் மிகவும் மேன்மையான பச்சைமரகத மயில் வாகனத் தில் வெகு காம்பீரமா யுட்கார்ந்திருக்கக்கண்டார். நீலோற் பல மலர்போன்றவுடையும், விலையுயர்ந்த நீலக்கற்கள் பதித்த கிரீடமும் ஆபரணங்களும் அணிந்திருந்தாள். தேவரம்பை களை மிகைக்கக்கூடிய அழகுடையவளா யிருந்தாள். பச்சையு டை தரித்த ஆயிரக்கணக்கான பரிப்பெண்கள் அந்த வாகன த்தைத் தலைகளிற் சுமந்து நின்றார்கள். அவர்கள் ஒருவரை யொருவர் பார்த்துச் சிரித்துக்கொண்டிருந்தார்கள்.

"ஹுர்முஜ்" மிகுந்த வணக்கத்துடன் அப்பெண்களுக்கு வந்தனமளித்தார். அப்பெண்கள் நாணமடைந்தவர்களைப்போல் தலைகுனிந்து முக்காட்டால் முகங்களை மறைத்துக் கொண்டார்கள். மயில் வாகனத்தின் மீதிருந்த, பரிப்பெண், சப்தமிட்டு சனங்களே நீங்கள் அவனுடைய மாயலையிற் சிக்கி மானத்தை யிழக்காதீர்கள். அபபாதகனுல் நமக்கு அவமான முண்டாகாதிருக்க வேண்டும். யாருடைய சிங்காரவனத்தில் யார் வந்துலாவுகிறது. காற்று புகாத இவ்விடத்தில் நம்முடைய வுத்தரவின்றி, இவன் எவ்வாறு காலெடுத்து வைத்தான். அவனைப் பிடித்து என்னிடததிற் கொண்டு வாருங்களென்று கட்டளை பண்ணினள். உடனே, சில பரிப் பெண்கள் அவரைத் தூக்கிக் கொண்டுபோய் அப்பெண்ணுக்கருகில் உட்கார்த்தினர்கள்.

பிறகு அச்சிம்மாசனத்தைத் தூக்கிக் கொண்டு பறந்து போனர்கள். போகப் போக அச்சிங்காரவனம் பின்னலாய்க் கொண்டிருந்தது. ஹுர்முஜின் சரீரம் இவ்வற்புதத்தால் விலவிலத்துக்கொண்டிருந்தது. பரிப்பெண்கள் அவரை, சேட்டை செய்துக் கொண்டிருந்தார்கள். சில சமையம் கடுமையாய்ப் பேசுவார்கள். சிலவேளை நளினமாய்ப் பேசுவார்கள். நீர் எங்களுடைய பிரியத்துக்கிணங்கி நடப்பீரேல், நாங்களும் எங்களரசியும் உமக்குச் சொந்தமாயிருப்போமென்பார்கள். யார் என்ன சொன்னல்தானென்ன? ஹுர்முஜின் மனம், குல் இளவரசி பேரில் படிந்து போயிருந்ததால் அவர்களுடைய சொற்களில் காது தாழ்த்தவுமில்லை. முகங்களில் பார்வையைச் செலுத்தவுமில்லை, சரீரங்களில் கையை நீட்டவுமில்லை. குல் இளவரசியை நினைத்து நினைத்து சஞ்சலப்பட்டவராகவேயிருந்தார். சில சமையம் நெஞ்சிலடித்துக்கொண்டு ஒலமிட்டழுவார்.

அவருடைய காரியத்தைப் பரியரசி பார்த்து, அவரை அணைத்து ஆறுதல் கூறி, ஓ, ஹுர்முஜே, பத்லீமூஸ் என்பவரின் சூனியத்தால் உற்பத்தியாயிருக்கிற, மயில் வனத்துச்கு நான்

அரசியர்யிருக்கிறேன். அச்சூனியத்திற் சிக்குண்டவர்கள் ஒருக்காலு மீளுகிறதில்லை. நீர் என்னுடன் கலந்திருப்பீரேல் நான் உம்மை விடுதலாக்கிவிடுவேனென்றாள். அப்போதும் அவர், அவளை மேயெற்றெடுத்துப்பார்க்கவில்லை. அப்போது, அவள், ஹூர்முஜைப்பார்த்து, அடே, மதி கெட்ட மண்ணாங்கட்டியே, சாலமோன் பேரிற் சத்தியமாக இதோ பார், உன்னை மண்ணாய் மடித்துப் போடுகிறேன். நான் எவ்வளவோ உனக்குப் போதித்தும் பிரயோசனப்படவில்லை. என்னை யின்னாளென்று, நீ, அறிந்துக்கொள்ளவுமில்லை. நான், மருந்தில்லா வியாதி யென்பதைச்சற்று நேரத்திற்குள் கண்டறிந்துக்கொள்வாயென்று கடு கடுத்துப் பயமுறுத்தினாள்.

ஹூர்முஜ், யாதொன்றையும் பயப்படாமல் வந்தது வரட்டுமென்று வைராக்கியத்துடனிருந்தார். பொழுது வுச்சி சாய்ந்த நேரத்தில் ஒரு அலங்காரமான மண்டபத்தில் அச்சிம்மாசனம் கொண்டு வந்திறக்கப்பட்டது. எதிரில் அலங்காரமான ஒரு சிங்காரவன மிருந்தது. அம்மண்டபத்தின் அலங்காரத்தையிம்மட்டென்று கூற ஆயிரம் பணமுடிகளையுடைய ஆதி சேடனாலும் ஆகாது. சுவர்கள் வஜ்ரத்தால் வானமளாவக் கட்டப்பட்டிருந்தன. கதவுகள் நீலக் கற்களாலும், மேற்கூரை, பச்சை மரகதத்தாலும், தளவரிசை, செம்மாணிக்கத்தாலும், கிணறுகள் குளங்கள். நவரத்தினங்களாலும் ஆறுகள் வஜ்ரக்கற்களாலும்; அமைக்கப்பட்டிருந்தன. பார்வைக்கு மட்டில் தெளிந்த ஜலந் ததும்பிக்கொண் டிருப்பதுபோன்றிருந்தது. ஒரு தூசி ஜல்மேனுங் கிடையாது. இவைகளை ஹூர்முஜ், பார்த்து, வியப்படைந்தவராயிருந்தார்.

பரிப்பெண், சிம்மாசனத்திலிருந்து கீழே யிறங்கி, ஹூர்முஜை. தன் பக்கத்திலிருத்திக் கொண்டு கீழே உட்கார்ந்தாள். பரிப்பெண்கள் நாட்டியமாடவும், இராகம் பாடவும் ஆரம்பித்தார்கள். எல்லாரும் ஆநந்த சாகரத்துள் ஆழ்ந்திருந்தார்கள்.

நடுச்சாமம் வரையில் நாட்டியப் பெண்கள் நடித்து நிறுத்தினர்கள். பின்பு, வித விதமான அறு சுவைப் பதார்த்தங்களும், கனிவருக்கங்களும் கொண்டு வந்து பரத்தப்பட்டன. பந்தியிருந்து பசியாறினர்கள். ஹூர்முஜும் கொஞ்சம தின்றுக்கொண்டார். கடைசியில் படுக்கைகளுக்குப் போகக் கட்டளையிடப்பட்டது. பரிப்பெண்கள் விடைபெற்றுக் கொண்டுபோய்விட்டார்கள்.

ஹூர்முஜ், தன் பிரிய நாயகியாகிய, குல் இளவரசியை நினைத்து அழுதுக்கொண்டிருந்தார். பரியரசி, அவரைப் பல வாறு நிந்தித்தாள். பயமுறுத்தினள். கடைசியில், ஹூர்முஜ் தன்னுக்குள்தானே ஆலோசித்து, இவளுடைய பிரியப்படி நாம் இணங்காது போனல் இத்துன்பத்தில நின்றும் மீளப்போகிறதில்லையாகையால் இவளுடன் கூடிக்கலந்து விடுதலே பெற வழிதேடலாமென்று தீர்மானித்து, அவளுடன் இனிமையான பரிகாச வார்த்தைகளாடிக் கடைசியில் அவளுடைய கையைப் பிடித்திழுத்துப் படுக்கையிற் கிடத்த முயன்றார். அவள் மல்லார்ந்து படுத்துக்கொண்டு ஹூர்முஜுடைய நெஞ்சில் ஒரு வுதை கொடுத்தாள். அவர் தலை கீழாகவுருண்டு கீழேவிழுந்தார். பூமி பிளந்து வுள்ளே யிழுத்துக்கொண்டது. பாதாள லோகத்துக்குப் பயணமாய்விட்டார்.

"ஹூர்முஜ்" பாதாள யாத்திரை செய்யும்போது அங்குமிங்கும் பார்த்தார். பரியையும், மண்டபத்தையும் காணவில்லை. ஒரு மயிலின் வாலைப் பிடித்துக்கொண்டு துக்க சாகரத்தில் நீந்துவதாகக் கண்டார். சிலவேளை உயர வருகிறதும் கீழே போகிறதுமாயிருப்பார். கடைசியில் கடவுளே கடவுளேயென்றவராக ஒரு கரையிலேறினர். உடனே அவருக்கு நித்திரை மேலிட்டது. சற்று நேரம் கண்ணுறங்கிவிழித்துப்பார்த்தார். தன்னை, கறுத்த இராக்கதன் ஒருவன் தோளிலேற்றிக் கொண்டு கப்பலை விடப் பதின்மடங்கு வேகமாகப்பறந்து போகிறதாகக்கண்டார்.

அவன் இன்னவிடத்துக்குப் போகிறனென்பது அவருக்குப் புலப்படவில்லை அப்படிப்போய்க்கொண்டிருக்கும்போது, தனக்கெதிரில் இரண்டுபேர் பேசிக்கொண்டு நடநதுபோவதைக் கண்டு அவர்கள் என்ன பேசுகிறர்களென்பதைச் செவிசாய்த்துக் கேட்டார்.

அதில் ஒருவன் மற்றொருவனைப் பார்த்து, சிநேகிதரே, அஸ்தகிரியில் ஆரோக்கிய மண்டபமொன்றிருக்கிறது. அம்மண்டபத்தின் தலைவிக்கு இதோ இராக்கதன் கொண்டு செல்கிற மனிதன் புருடனுகி, அளவுக்கு மிஞ்சிய இன்பத்தை யனுபவிக்கப் போகிறன். ஆனல் சாகும்பரியந்தம், சிறைப்பட்டவனுகவே யிருப்பானென்பதில் சந்தேகமில்லை யென்ருன். அதை, ஹாரூர் முஜ், கேட்டுத் திகில் கொண்டு, ஆ, கடவுளே, இதென்ன வேடிக்கை? என்ன கஷ்டத்தில் என்னை யாக்கிப்போட்டீர்? குல் இளவரசியாலல்லவா? இவ்வளவு துன்பத்தையும் நான் அனுபவிக்கநேர்ந்தது. இத்துன்பத்தினின்றும் நான் விடுதல பெறுவேனே, இங்ஙனமேயிருந்து இறந்து போவேனே? அறிகிலேனே எத்தனையோ கோடிக்கணக்கான இடையூறுகளெல்லாம் என் தலையிற் சுமத்தப்பட்டன. இவ்வளவையும் சுமக்க நான் எவ்வளவு மனிதன் என்னைக்காக்க வல்லவர் நீரேயன்றி வேறொருவருமில்லையென்று வியசனத்துடன் புலம்பிக்கொண்டிருந்தார்.

இராக்கதன் அவரை ஒரு குளத்தடியிற் கொண்டு போயிறக்கி ஸ்நானஞ் செய்வித்து, விலையுயர்ந்த அழகான வுடையுடுத்தாட்டி, முன்னேறி நடந்து, அஸ்தகிரியின் அலங்கார மண்டபத்திற்குள்ளாகி விசாலமான ஒரு அறைவாசலையடுத்து நின்று முழங்காலிற் படிநது வந்தனமளித்தான். உடனே அவ்வறையின் கதவு திறக்கப்பட்டது. அதனுள்ளிருந்து எண்பது வயதையும், சிரமுதற் பாதமீறக நரைத்த மயிரையும், நீண்ட காதுகளையும், ஒரு பல்லேனுமில்லாத வாயையும், உடலோடொட்டிய வயிற்றையும் நெஞ்சிலிருநதிறங்கிக் காலில் அடிபட்டுக்கொண்

டிருக்கும் தோற்பை முலைகளையும், மலைப்புழை போன்ற கொப்பூழையும், அதற்கடுத்ததையும், செக்குப்போன்ற இடையையும் கோர ரூபத்தையும் உடைய ஒரு விருத்தை வெளியில் வந்து "ஹாமுர்ஜ்" நிற்பதைக்கண்டு சினந்து, அவரின காதைப் பிடித்திழுத்து ஒரு மூலையிற் கொண்டுபோய் நிறுத்தி, எடா, ஹார்முஜே, நீ, என்னை யின்னாளென் றறியமாட்டாய் போலும். மயில் வனத்தரசி, என் மகளல்லவா? என்னுடைய சம்மதமில்லாமல் அவளைமணக்கயாராலுமாகாது. நீ கொஞ்சமேனும்அஞ்சாமல் அவளைக்கட்டியணைத்து மல்கார்த்தினையல்லவா? என்று பலவாறு வசைகூறிக் கோபித்தாள். இடையில் நின்ற பரிப்பெண்களும் அவளுக்குத் துணையாய்ப்பேசினார்கள்.

அதனால் "ஹார்முஜ்" தட்டழிந்துக் கலங்கினார். அவரின் முகம், நிறப்பேதக முற்றிருப்பதைக் கிழவி பார்த்து, மகனே, நீர் யாதொன்றிற்கும் அஞ்சாதீர். நீர், செய்த தப்பிதத்தை நான் மன்னித்தேன். உம்மை என் மருமகராக்கிக்கொள்ள வுறுதிவாக்களித்தேன். ஆரோக்கிய மண்டபத்தின் ஐக்கிய சபை கூடுங்காலத்தில் உமக்கும் மயில்வனத்தரசிக்கும் மணமுடித்து வைக்கிறேன். அதுவரையில் நீர் இங்கு தானே யிரும். இவ்விடத்தில் உமக்கு எவ்விதமான கஷ்டமும் இனி நேரிடமாட்டாதென்று கூறி, சில பரிப்பெண்களை, அவருக்குத் துணையாக்கிவிட்டுப் போய்விட்டாள்.

அப்பெண்களில் சிலர் ஹார்முஜூடன் பரிகாச வார்த்தையாடிக்கொண்டிருந்தார்கள். சிலர் மோக மூட்டினார்கள். சிலர் கலை நெகிழ விட்டார்கள். சிலர் கட்டியணைத்து முத்தமிட்டார்கள். சிலர், மடிமேல் கிடத்தி முகத்தை தடவினார்கள். யார் என்னசெய்தாலும் செய்யட்டுமென்று ஹார்முஜ், குல் இளவரசி பேரில் ஞாபகத்தைச்செலுத்தி அழுகவராகவேயிருந்தார். ஐக்கிய சபை கூடும் நாள் வந்தது. சபா மண்டபம் வெகு அலங்காரமாய்ச் சிங்காரிக்கப்பட்டது. இராக்கதர்கள் பல திசையி

லுமிருந்து வந்து நிறைந்தார்கள். அச்சபை நடுவில் நவரத்தின கதிசதமான ஒரு சிம்மாசனம் வைக்கப்பட்டது.

மயில்வனத்தரசி, பன்னீரால் தலை முழுகி, வார்ந்து முடித்துக் கூந்தலைப் பின்னிப் பின்னால் விட்டு, நெற்றியிற் சுட்டிக் கட்டி, கைகளில் கங்கணமணிந்து, காற்களில் வஜ்ர கடகம் பூட்டிச், சிரசில் நவரத்தின கிரீடமணிந்து, கண்களில் அஞ்சனந் தீட்டி, உருவந் தெரியக் கூடிய விலையுயர்ந்த மெல்லிய ரவைச் சல்லாப்பட்டுடுத்து, காமராஜனின் இருப்பிடமாகிய கனதனபாரங்களுக்கு திலக்கச் சிறுக்கிப் பாலியர்களின் நெஞ்சங்களைப் பறித்தெடுக்கக் கூடியவிதமாகச் சிங்காரித்துக்கொண்டு, வெகு ஒய்யாரமாக அன்னநடை நடந்து அச்சபாமண்டபத்துக்கு வந்து அங்கிருந்த நவரத்தினப் பீடத்தில் உட்கார்ந்தாள்.

அவளின் தாயாகிய கிழவி வந்து ஹாமுஜின் கையைப் பிடித்தழைத்துச் சென்று மகளின் அருகில் அவரை உட்காரத் தித் தோளுடன் தோள் பொருத நெருக்கினாள். இவ்விதமாக ஏழுநாள் வரையில் நடைபெற்று வந்தது. எங்கு பார்த்தாலும் கல்யாண கோஷ்டமாகவேயிருந்தது. எட்டாவது நாள் சங்கராச்சாரியார் வந்து விவாகபந்தன முடித்து வைத்துப் போனார். சபையிலுள்ள சகல பரிப்பெண்களும் சுபசோபனங் கூறினார்கள். பிறகு இருவரும் பள்ளியறைக்குட் புகுந்து கபாடபந்தனஞ் செய்துகொண்டார்கள்.

அப்போது, பரிப்பெண், ஹாமுஜைப் பார்த்து, என் பிரிய நேசரே, நான் உம்முடைய அழகால் மதிமருண்டு மையலுற்றவளாயிருந்தும், இச்சிறையிருப்பில் உமக்கு அதிகக் கவலை நேரிடாதிருப்பதற்காக வும்மை நான் உதைத்துத் தள்ளினேன். அந்தப்படி நான் செய்யாதுபோனால் இத்தலத்தில் நீர் வரப்போகிறதில்லை. போனது போகட்டும். இப்போது வுமக்கும் எனக்கும் விவாகப் பந்தனமாய்விட்டபடியால் நான் சீவித்திருக்குங் காலமெல்லாம் உமக்கடிமையாயிருப்பேன். இது எனக்குப்

பெரிய சிறையிருப்பாய்விட்டது. இத்தலமோ, பரிப்பெண்க ளுக்கு விவாக முடிப்பதற்கென்றே பிரத்தியேகமாய் அமைக் கப்பட்டிருக்கிறது. குறித்த காலத்தில் இங்கு வந்து விவாகச் சடங்கை நிறைவேற்றிக்கொண்டு ஒரு இரவு தங்கியிருந்து மறு நாட் காலையில் தத்தமிடங்களுக்குப் போய்விடுவது வழக்கமாயி ருக்கிறது. இதைவிட்டு அப்புறப்பட்டு விட்டால் இவ்விடத்திய சகல வேடிக்கை விளையாட்டுகளும் கனவிற் கண்ட பொருளாய் விடுமென்றாள்.

இதை ஹார்முஜ், கேட்டு ஆ, கடவுளே, என் குற்றத்தை மன்னிப்பீராக. மாறியும் முன் நான் உதைபட்ட சிங்காரவனத் துக்கேக நேரிட்டிருக்கிறதே. காலன் வர முன் சாக நேரிட்டி ருக்கிறதே. ஆ, தெய்வமே, இத்துன்பத்தில் நின்றும் நான் மீள்வேனே, இல்லையோ? எப்போது, என் பிரிய நேசியாகிய குல் இளவரசியைச் சந்திப்பேன்? இப்படியிருப்பதைவிட இற ப்பது நயமாகுமே. ஆ, மரணமே, சீக்கிரம் வரமாட்டாயா? ஆ, கடவுளே, என் சீவனை வாங்கிக்கொள்ளமாட்டீராவென்று இரைந்து கரைந்தார். அதைக்கண்ட பரிப்பெண், அவருக்குச் சந்தோஷத்தையுண்டாக்க வேண்டுமென நினைத்து, தான் அணிந் திருந்த வுடையை நெகிழ விட்டு நிர்வாணியாகித் தன்னிரு கைக ளையும் அவருடைய கழுத்திற்போட்டு இறுக வணைத்தாள்.

ஹார்முஜ், அவளுடைய கையைத் தட்டிவிட்டுத் தூரப் போய் நின்றார். அவள் நெற்றியிற் புருவமேறச் சினந்து கடு கடுப்புடன் இதென்ன வம்முடைய செய்கை. நன்றி மறப்பது நரஜென்மத்தின் இயல்போவென்றாள். அதற்கு, ஹார்முஜ், பெண்ணே! நீ. சொன்னபடிக்கல்ல, நான் ஒரு விஷயத்தைப் பற்றி வெளிப்பட்டுவந்தேன். அந்த வேலையைச் சரிவர முடிக் காதவரையில் இவ்வுலக இன்பத்தை அணுவளவும் இச்சிக்கிற தில்லையென்று சத்தியஞ்செய்திருக்கிறேன். அப்படிக் கிருக்க இப்போது விவாகமென்னும் விலங்கிடப்பட்டவனானேன். இதில்

நின்றும் விடுதல் பெறுவேனென்கிற நம்பிக்கையும் போய்வி ட்டது. இன்பசுகத்தில் இச்சையுமில்லே. சரீரத்தில் வலுவு மில்லே யென்றார். அதற்கவள், அக்கருமம் என்ன? சொல்லு மென்று கேட்டாள். சில நாள்வரையில் வெளியிற் போய்வர விடைபெற்றுக் கொள்ளுவதே என்னுடைய நாட்டமென்றார்.

அதற்கவள், நான் பைத்தியக்காரியல்ல. உமக்கு விடை கொடுத் தனுப்பிவிட்டு, மனசார இருந்த இருப்பில் துக்கமெ ன்னுஞ் சுமையைத் தலேயிலேற்றிக் கொள்ளமாட்டேன். கடவுளு க்காக என் குற்றத்தை மன்னித்து, இன்னொரு முறை, அவ் விதமான வார்த்தையை வாயிலெடுக்காதிருக்க வேண்டுகிறேனெ ன்றாள். அதனால், இவளுடைய பிரியப்படி நடந்துக்கொள்ளா விட்டால் காரிய மாகாதென்று 'ஹார்முஜ்' நினேத்து, புன்ன கையுடன் அவளேப்பார்த்து, ஆ, என் பிரியநாயகியே, நீயோ, என் உடலுக் குயிராயிருக்கிறாய். நான் உன்னே விட்டு விட்டுப் போகிறதானால் உயிரிழந்த பிணம்போன் றிருப்பேனென்ப தில் என்ன தடையிருக்கிறது. நான் விடை வேண்டுமென் றது பரிகாச வார்த்தையே யன்றி உண்மையல்ல. உன்னு டைய மனம் என்னளவில் எவ்வாறிருக்கிற தென்பதை அறி வதற்காகவே அச்சொல்லேக் கூறினேன. என்று சொல்லி, அவளுடைய விலாப்பக்கத்தில் தன் கையை நீட்டி யணேத்து மல்கார‌க் கிடத்திக் கன்னங்கள் சிவக்க முத்தமிட்டு உதட் டைக்கடித்து அதரபானங் குடித்து, செய்யவேண்டிய சில முக்கியவேலேகளேயும் அன்றிரவு முழுதும் செய்துகளேத்து அயர்ந்த நித்திரையிலானார்கள்.

பொழுது புலர்ந்தபோ தெழுந்து மயில்வாகனத்திலேறி, மயி ல்வனத்துக்கு வந்துசேர்ந்து சிலகாலம் சுகித்துக்கொண்டிருந் தார்கள். இருவரும் உடலும் உயிரும்போல் சுகித்துக்கொண் டிருக்கும்போது, பரிப்பெண் கருப்பவதியாகி அழகிற் சிறந்த ஒரு ஆண் குழந்தையைப்பெற்றாள், அதனால், இவர் நம்மை

விட்டுப் பிரியமாட்டாரென்கிற நம்பிக்கையை அவள்கொண்டு அவரைத் தனித்தவராக மயில்வனத்தில் விட்டு விட்டு, தன் சினேகிதர்களைத் தெரிசிக்க அடிக்கடிபோய் வருவதாயிருந்தாள்.

ஒருநாள், அவள் சந்தோஷத்துட னிருப்பதை யறிந்த ஹார்முஜ், அவள் கிட்டநெருங்கி துடைமேல் துடைபடவுட்கார்ந்து, அவளுடைய பிடரியில் தன்னொரு கையைப்போட்டு மற்றொரு கையை மலைக்கிடைவைத்து, மிருதுவான தொனியுடன், ஆ, என் உயிருக்குயிரான பெண்கள் திலகமே, நீ, இங்கிருந்து வெளிப்பட்டவுடனே, வேறே ஒரு இராக்கதன் வந்து என்னைப் பிடித்துத் தூக்கிக்கொண்டு போகிறதற்கு முயலுகிறான். நான், என் கைகால் பலத்தால் அவனுடைய பிடிக்ககப்பட்டாமல் தப்பித்துக்கொண்டுவருகிறேன். புலிக்கெதிர்ப்பட்ட ஆடு எத்தனைநாளைக்குத் தப்பி யொளித்திருக்கக்கூடும். இன்றில்லாதுபோனாலும் நாளைக்குப் பிடிப்பட்டே தீரும். அதுபோலவே, என்னுடைய கெதியுமிருக்கிறதென்று வெகு நவினமாகக்கூறினார்.

பரிப்பெண் அவருடைய சொல்லைக்கேட்டவுடனே, உக்ரகோபங்கொண்டு, ஆ, ஆ, அப்படிவருவதுயார்? நல்லதிருக்கட்டும் இதோ நான் உமக்கொரு அட்சரத்தகடுகொடுக்கிறேன். என்முதுகுபக்கத்தில் நீர்கைநீட்டி அதை வாங்கிக்கொள்ளும். சூனியத்தாலுண்டாக்கப்பட்ட பரிப்பெண், அல்லது இராக்கதர்களை நீர் கண்ணுற்றபோது அவ்வட்சரத்தை அவர்களுக்கெதிரே காண்பியும். அது அவர்களைக்கரித்து சாம்பராக்கிப்போடும். சூனியத்தின் வலுக்குறைந்து சுத்த சூனியமாய்விடும். ஆனால், வெகு பத்திரமாக அதை உம் கையில்வைத்து மூடிக்கொண்டிருக்கவேண்டும். என்னைவிட்டும் நீர் விலகியிருக்கக்கூடாது. விலக நாடினீரானால் வேதனைக் காளாவீரென்றாள். ஹார்முஜ், கடவுளைத் துதித்தவராக. அவளுடைய முதுகுப்பக்கத்திலாகி

அவ்வக்ஷரத் தகட்டை கையில் வாங்கிக்கொண்டார். சற்று நேரத்தின்பிறகு, அவள் வெளியிற்போகத் தயாராளுள்.

ஹார்முஜ், அவ்வக்ஷரத்தை அவளுக்குக் காண்பித்து பெண்ணே, இதை, சத்ராதிகளுக்கெதிரே, இந்தப்படிக்குத் தான் காட்டுகிறதா, அல்லது வெறே விதமாகவா? என்று கேட்டார். அதை அவள் கண்டவுடனே, திகில்கொண்டு, ஆ, கைசேதமே, நான் மோசம்போனேனே. நான் நினைத்தபிரகாரமன்று. நடந்தது வேறாய்விட்டதே. அடே, மோசக்கார, நீ, என்ன வேலைசெய்தாய். நான் உனக்குச் செய்தவுதவிக்குப் பிரதி யிதுதானோவென்று வரத்தத்தொனியிட்டுக் கதறியழுதாள். அவளுடைய சப்தம் அடங்கியவுடனே, அம்மண்டபம் தீபற்றியெரிந்து நீறாய்விட்டது. அங்கிருந்த சாமான்களும், குழந்தையும், பரிப்பெண்களும், தோட்டமும், யாவற்றும் அறவேயில்லாதொழிந்தன.

ஹார்முஜ், முன்முறையில் சந்தித்த பிரகாசம்பொருந்திய விசாலமான வனாந்திரத்தின் சோதி விருக்ஷத்தின் நிழலிலானார். அதனால் அவர் சந்தோஷமுற்று. பன்முறை, கடவுளை வாழ்த்தி புகழ்ந்து, ஈரான. தேசத்தின்பாதையில் திரும்பி நடந்தார். சிலநாளைக்குப்பிறகு வழியில் ஒரு தபோனரைச் சந்தித்தார். அவருடைய சிரசில், மான் கொம்புபோன்ற இரண்டு கொம்புகள் முளைத்திருந்தன. புலிமீது ஆரோகணித்தவராக வந்தார். ஹார்முஜ், அதைக்கண்டு அச்சமும் ஆச்சரியமு முடையவராயிருந்தார். அத்தபோதனர் கீழேயிறங்கி, ஹார்முஜுக்குக் கைலாகுகொடுத்து வந்தனோபசாரம் புரிந்து, ஹார்முஜே, இவ்வேழையின் வீடு சமீபத்தி லிருப்பதால், நீர், தயைகூர்ந்து என் வீட்டுக்குவந்து, ஏதேனும் பசியாறிப்போகவேண்டும். என்னுடைய விருப்பத்தை விருதாவாக்கக் கூடாதென்று வேண்டிநின்றார். ஹார்முஜ் அவரை வணங்கி, தபோதனரே, கடவுளுக்காக என் குற்றத்தை மன்னித்து என்னைப் போகவிடுங்கள்.

தாங்கள் கூறிய இனியவார்த்தையே போதுமானது. என்னுடைய பிரயாணம் நீண்ட தூரமாயிருப்பதால் நான் தாமசப்பட்டிருக்க சாத்தியப்படாதென்றார்.

அதனால், தபோதனர் கடுஞ்சினங்கொண்டு, பலே, சபாஷ் நீர், எங்கு செல்லப்போகிறீர். இது, சாமரி, யென்பவரின் மந்திரத்தானமென்பதை யறியவில்லைபோலிருக்கிறது. இதின் இன்பத்தில் கொஞ்சத்தை யனுபவித்துப்பாரும். இவ்வனத்திற்கு வந்தவர்களை நான் வெறுமனே போகவிடுகிற வழக்கமில்லை. விதவிதமான சுவைகளை அவர்களுக்குக்கொடுத்தனுப்புகிறதே என்னுடைய அப்பியாசமென்று கூறி, ஒரு சிறு கல்லால், ஹாரூர்முஜின் சிரசிலடித்தார். உடனே அவர் மானுருவமானார். துள்ளித் துள்ளி வட்டமிட்டுத்திரிந்தார். ஆகாயத்தை அண்ணாந்துபார்த்து அழுதார். குல் இளவரசியை நினைத்து, தன் சிரசை மரங்களில் மோதிக்கொண்டு அங்குமிங்குந் திரிந்துக்கொண்டிருந்தார்.



## 18-ம் அதிகாரம்.

### மானுருமாறிக் காட்டுமிராண்டி தீவிலானதும் "மங்கலவாக்கி" நிலமுகி, என்பவர்களுடன் ஈரானுக்குப் பிரயாணமானதும்.



ஹாரூர்முஜ் மானுருவம்பெற்று, விதவிதமான துன்பங்களை யனுபவித்துக் கொண்டு ஒரு பெரிய வனத்துட் பிரவேசித்தார். அவ்வனத்தில் சூரியனின் கதிர்க் காற்கள் ஒருக்காலும் பட்டதேயில்லை. இரவு பகலென்பதும், அவ்விடத்திலில்லை. அவர் திகில் கொண்டு தத்தளித்துக் கொண்டிருந்தார்.

அப்படிக் கிருக்கும்போது திடீரென்று ஒரு கூட்டம் ஓனாய்கள் வந்தன. அவர், அச்சமுற்று மலைக்குகையொன்றிற் புகுந்தார். அக்குகையுள் ஒரு வேங்கை, மண்டியிட்டுட்கார்ந்து பல்லையிளித்துக் கறுமிக்கொண்டிருந்தது. அதைக்கண்டவுடனவாலை முறுக்கிக் கொண்டு ஓடினர். வழியில் மதங் கொண்ட ஒரு யானை யெதிரில் வந்து அதைப் பிடித்துத் தன் முதுகிலேற்றிக் கொண்டு, மண்ணை வாரி யிறைத்துக்கொண்டு நடந்தது. வழியில் வித விதமான வனங்களைக் கண்ணுற்ருர். மானிடச் சத்துருக்களாகிய கோடானுகோடி துட்ட மிருகங்களைக் கண்டார். இன்னவிடத்திற்குத் தான் போகிறதென்பது, ஹாமுஜனுக்குத் தெரியாதிருந்தது.

இந்தப்படியாக எட்டு நாள் வரையில் யானை முதுகிலுட்கார்ந்து துன்பப்பட்டுக் கொண்டிருந்தார். கைக்கெட்டிய இலைகளைப் பறித்துத் தின்றுக் கொண்டே போனர். எட்டாவது நாள், அந்த யானையின் காலில் ஒரு தேள், கொட்டிற்று. யானை நீர்த்து நீருய் விட்டது. ஹார்முஜ், தட்டழிந்தவராய் நின்ருர். அப்படிக்கிருக்கும்போது, ஒரு தபோதனர், மேற்றிசையிலிருந்து வந்தார். அவருடைய கையில் ஒலிவமரத்தின் தடிக்கொம்பிருந்தது. சந்தனமரத்தின் சட்டை யணிந்திருந்தார். கழுத்தில், இரண்டு நாகமணிமாலை கிடந்தன. அவர், ஹார்முஜ், கிட்டவந்து புன்னகை நகைத்து, மந்திரத்தின் வேடிக்கையை பார்த்திரா? என்ன என்ன அற்புதங்களையெல்லாம் உமக்கது காட்டிற்று. இப்போது நீர் உண்மையைச்சொல்லும். இன்னமும் வேடிக்கை பார்க்கப்பிரியமா? விடுதல்பெறப் பிரியமா? என்று கேட்டார். ஹார்முஜ், தட்டழிந்தவராகி, தபோதனரின் பாதத்தில் தன் சிரசைவைத்து வணங்கினர்.

தபோதனருக்கு, ஹார்முஜ்பேரில் இரக்கமுண்டாகி, அவருடைய முதுகைத் தடவிக்கொடுத்து, ஏதோ மந்திரோச்சாடனஞ்செய்து மேலே ஊதினர். ஹார்முஜ், சுயரூபம் பெற்

றெழுந்தார். தபோதனருமில்லை, வனாந்திரமுமில்லை, முன்னின்ற விடத்திலேயே நிற்பதைக்கண்டு மகிழ்ந்து, கடவுளை மிகவுந்துதித்துப் புகழ்ந்து, ஈராளை நோக்க முன்னேறி நடந்தார். காடு, மலை, வனம், வனாந்திரங்களைக் கடந்து அனேக கஷ்டத்தின்பேரில் ஒரு மலையடிவாரத்தில் வந்து சேர்ந்தார். அம்மலைமேல் நீர்க்காக முதலான பக்ஷியினங்கள் பறந்துக்கொண்டிருந்தன. அதனால் அம்மலைமேல் பழந்தரும் விருக்ஷங்களிருக்கப்போதுமென்று நினைத்து விழுந்தெழுந்து வெகு கஷ்டத்தின்பேரில் அம்மலை யுச்சத்திலானார். அங்கே தெளிந்த நன்னீர் அருவிகள் புலப்பட்டன. அங்கு வுதிர்ந்து கிடந்த பழங்களிற் சிலவற்றைப் புசித்துத் தண்ணீரருந்தி பசி தீர்த்துக் கொண்டு அவ்விடத்திலேயே அயர்ந்து நித்திரை போய்க் கொண்டிருந்தார்.

அப்படிக்கிருக்கும்போது, அவரைச்சூழ்ந்து, காட்டுமராண்டிகள் வந்துட்கார்ந்து, அவருடைய பிரகாசமான முகத்தழகைக்கண்டு சந்தோஷமுற்று ஆனந்தக்கூத்தாடினார்கள். பிறகு அவருடைய கையைக்கட்டித் தூக்கிக்கொண்டுபோக வாரம்பித்தார்கள். ஹார்முஜ், பதறி விழித்து, காட்டுமராண்டிகளைக் கண்டு கலக்கமுற்றிருந்தார். கடைசியில் அவர்கள் "ஹார்முஜைத்" தூக்கிக் கொண்டுபோய் ஒரு சிங்கார வனத்தில் விட்டு கதவடைத்துக்கொண்டு போய் விட்டார்கள். "ஹார்முஜ்" திகில்கொண்டவாராகநின்று நான்குதிசையிலும் கண்பார்வையைச் செலுத்தினார். ஒரு திசையில் இரண்டு பாலியர்கள் உட்கார்ந்து புலம்பிக்கொண்டிருந்தார்கள்.

பெருமூச் செறிந்துக்கொண்டும், புதிதாக வந்திருக்கிற, இராஜகுமாரர், நம்முடைய முகத்தைப் பார்க்கமாட்டாரா? நாம் இறந்துபோகமாட்டோமா? என்று ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டுமிருந்தார்கள். ஹார்முஜ், அவர்களிருக்குந் திசையில் முகத்தைத் திருப்பவே, அவர்கள் அவருடைய பிரகாசமான

முகத்தழகைக்கண்டு பூரித்து, கடவுளைத்துதித்தவர்களாக அவர் கிட்டவந்து நின்று வணக்கத்துடன் வந்தனமளித்து, நாயகமே, தாங்கள் யார்? எங்கிருந்து வந்தீர்கள்? தங்களுடைய திருநாம மென்ன? கிருபைகூர்ந்து சொல்லவேண்டுகிறோ மென்றார் கள். ஹாரூர்முஜ் அவர்களைப்பார்த்து, பாலியர்களே, என் பே ரைக்கேட்பதில் என்ன பிரயோசனமிருக்கிறது. நீங்களோ, என க்கு முற்பட இங்கு வந்தவர்களாயிருக்கிறீர்கள். உங்களுடைய பெயர்களையும் இங்கு வந்துற்ற காரணத்தையும் முந்திக் கூறுங் கள். பின்னால் என்னுடைய வரலாற்றை விவரிக்கிறேனென்றார். அவர்கள் மிகுந்த வணக்கத்துடன், ஹாரூர்முஜைப் பார்த்து, எஜ மானே, நாங்களிருவரும், சீன தேசத்திற் பிறந்தவர்கள். சீன த்தரசரின் பணிவிடையாளர்கள். எங்கள் பேரில் சீனத்தரசர் மஹாப் பிரீதியுடையவராயிருந்தார். நாங்கள் உருவப்படங்க ளெழுதுவதில் மஹா சமர்த்தர்கள். எங்களுக்கு மங்கலவாக்கி யென்றும், நீலமுகி, யென்றும் பெயர். எங்களரசர், கூஜான் தேசத்திளவரசி, குல் என்பவளின் அழகைக் கேட்டு, ஆச்சரிய முற்று, அவளின் பிரதி விம்பமெடுத்து வர எங்களையனுப்பினார்.

நாங்கள் கூஜானுக்குப் போனோம். பட்டணம் அழிக்கப்ப ட்டிருந்தது. நாங்கள் தட்டழிந்தவர்களாகி, சிலரிடத்தில் அதை ப்பற்றி விசாரித்தோம். குல் இளவரசி பேரில் இச்சைகொண்டு ஈரான் அரசர் இங்கு வந்து இவ்வூரை நாசமாக்கி, இளவரசியை சிறைவாரிக்கொண்டு ஈரானுக்குப் போயிருக்கிறதாகக் கூறினார் கள். எங்களுடைய நாட்டம் படமெடுப்பதே யல்லாமல் வேறில் லையாதலால் நாங்கள் ஈரானுக்குப் போனோம். அங்குள்ளவர்க ளில் அனேகர், குல் இளவரசி, றூம் சக்கரவர்த்தியின் புத்திரர் ஹாரூர்முஜ், பேரில் இச்சை கொண்டிருக்கிறாளென்றும், ஈரான் அரசர், அவளை மணமுடிக்க நாடுகிறாரென்றும், அவள் அப்படி யானால் தற்கொலை செய்துக் கொள்ளத் தயாராயிருக்கிறாளென் றும், வெளிப்பார்வைக்கு வியாதியுற்றவளாகப் பாவனை காட்டிக்

கொண்டிருக்கிறாளென்றும், சுரானரசர். பரிகாரஞ் செய்வதில் இடையிலுக்கிறிற்கின்றாரென்றும், இன்னமும் அவள் சவுக்கியம் பெறவில்லையென்றும், அவளுடைய நாட்டம் நிறைவேறவில்லை யென்றும், பேசிக்கொண்டிருந்தார்கள்.

இதை நாங்கள் கேட்டுக் கைசேதப்பட்டு, வந்த வேலையை முடிக்காது போக மனசில்லாதவர்களாக ஆலோசனையி லிருந் தோம். அப்படிக்கிருக்கும்போது, அவ்வூர்வாசி ஒருவரிடத் தில் சரியான ஒரு பிரதிவிம்பமிருப்பதாக எங்களுக்கு செய்தி கிடைத்தது. அதைப் போல் பிரதியெடுத்துக்கொண்டு எங்கள் தேசத்துக்குப் போக பாதை கூட்டினோம். திடுகூறாக, காட்டு மராண்டிகள் வந்து எங்களைப் பிடித்து இறுகக்கட்டி இங்கு கொண்டுவந்து விட்டுப் போனார்களென்னார்கள்.

“ஹார்முஜ்” இதைக்கேட்டவுடனே சிநேகிதர்களே, கட வுளுக்காக, அப்படத்தை யெனக்குக் காட்டுங்கள். கடவு ளின் அற்புதத்தைப் பார்ப்போம். மனிதர்களிலும் மிகுந்த அழகையுடையவர்க ளிருக்கிறார்களென்று நான் கேள்விப்பட் டிருப்பதை ஸ்திரப்படுத்த நாடுகிறேனென்றார், உடனே அவ ர்கள் சட்டைச்சாக்கிலிருந்த படத்தை யெடுத்தார்கள். ஹார் முஜ், அதைத்தன் கையில் வாங்கி நெஞ்சோ டணைத்துக்கொ ண்டு தேம்பித்தேம்பி யழத்தொடுத்தார். ஓவென்றலறினார். அவரைப் பார்த்துக்கொண்டிருந்த இருவரும், தட்டழிந்தவர்க ளாய்ச் சுவரிலெழுதிய சித்திரம்போன்றிருந்தார்கள். அவரு டைய அழுகையையும் புலப்பத்தையும் இம்மட்டென்று சொல்ல ஒருவராலுமியலாது.

கடைசியில் அவ்விருவரும், ஹார்முஜைப்பார்த்து, எஜமா னே, தங்களுடைய காரியம் யாது? என் இவ்வாறு அழுகின்றீர் கள்? புலம்புகின்றீர்கள்? யார்பேரில் நினைவுகொண்டீர்கள்? தங் களுக்கு வந்துற்ற துன்பமென்ன? சொல்லுங்களென்று வெகு வுருக்கமாய்க்கேட்டார்கள். அப்போது, ஹார்முஜுக்கு, வுண

ர்வுவந்து, ஓஹோ, நம்முடைய பொல்லாக் கிரஹமாக்கும் புலம்பச் செய்துவிட்டது. வரும் விதி இராத் தரிக்காது. இனிமேல் நமமுடைய அந்தரங்கத்தை மறைப்பதிலும் பிரயோசனமில்லையென்று நினைத்து, சிநேகிதர்களே, என்னிடத்தில் அதிகமாய்ப் பேசவேண்டாம். நீங்கள் கூறிய ஹூர்முஜ், நான்தான். நான் அந்த இளவரசியைப் பிரிந்ததினாலேயே இவ்வளவு துன்பப்பட்டவனா யிருக்கிறேன்.

அவள், என்னை விட்டுப் பிரிந்ததினால்தான் சிறையாக்கப்பட்டு, பரிதபித்துக் கொண்டிருக்கிறாள். இங்கே என்னுடைய வுயிர் போகிறதாயிருக்கிறது. இப்படத்தை நான் பார்த்தவுடனே, என் கண்களில் மின்னலுண்டாகி, அதில்நின்றும் தீயுற்பத்தியாகி அது என்னைக் கரித்துப் போட்டது. அதனால் தான் உணர்வற்றுப் புலம்பினேனென்றார்.

அவ்விருவரும், ஹூர்முஜ் பேரில் இரக்கங்கொண்டு, அவரைப் பார்த்து, எஜமானே, நாங்களிருவரும் தங்களின் உண்மையான அடிமைகளாயிருக்கிறோம். இன்று முதல் தங்களின் பணிவிடையில் இடையிறுக்கி நிற்போம். கிருபையையுடைய கடவுள் நம்மை இச்சிறையிருப்பில் நின்றும் நீக்கியபிறகு நாங்கள் தங்களுக்குச் செய்கிற ஊழியத்தை யித்தகையினதென்றறிந்துக் கொள்வீர்கள். நாங்களும் இவ்வுலகத்தில் நல்லவர்களென்ற பேரெடுத்துக் கொள்ளுவோம். தங்களை நாங்கள் கண்டபோதே எங்களுக்கு விடுதலுண்டாகுமென்கிற நம்பிக்கை யுண்டுபட்டபடியினாலே, வெகுசீக்கிரத்தில் தங்கள் பொருட்டால் நாங்களும் விடுதல் பெறத் தக்க வழியை, கடவுள், தருவாரென்பதில் சந்தேகமில்லை யென்றார்கள்.

அவர்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும்போது, அவர்களுக்கெதிர்த்த ஒரு சுவரின் துவார வழியாய், திருவாணியான கறுத்த ஒரு பெண்பிள்ளை வெளிப்பட்டு வந்தாள். அவளுடைய

சரீரத்தில் பேருக்கேனும் ஒரு அங்குலத் துணி கிடையாது.
கடைக்கண் பார்வை பார்த்தவளாகவும், உதட்டைச் சுவைத்துப்
புன்சிரிப்புச் சிரித்தவளாகவு மிருந்தாள். அவளுடைய முகத்
தின் கருநிறத்தை வியந்தெழுதுகிறதானல் யுகமுடியும் பரியந்
தம் தீரவே மாட்டாது. சிவந்த சாதி லிங்கத்தை, மையாக்கி
யெழுதினல் அதுவும் தானே கறுத்துப் போகும். அவளின்
தலைமயிருக்கொப்பிட வுலகத்தில் ஒன்றுமேயில்லை. அவளைப்
பார்த்த கொடுமையினலேயே, கண்களில் கறுத்த விழிகளுண்
டாயின.

அவளுடைய சரீரத்தின் கருமையினலேயே, வானத்
தில் கறுப்பு நிறமும், சந்திரனில் களங்கமும் உண்டுபட்டன.
அவளின் இரண்டு கன்னங்களும் அஞ்சனக் கற்களின் இருதுண்
டங்கள் போன்றிருந்தன. நாசியோ, இருப்புக்கெண்டிபோன்று
இரண்டு துவாரங்களுடனிருந்தது. அவளின் முலைகளோ,
என்னவென்று தான் வர்ணிக்கப்பெறும். யானையின் சிரசை
விடப் பெரிதான இரண்டு மத்தளங்கள் போன்றிருந்தன. அவ
ளின் இருதுடைகளும், பனைமரத்துண்டங்கள் போலும், கொப்
பூழம், அதற்கடுத்ததும் மலைப்புழை போலும், அடிவயிறு, செப்
புக் கடாரம்போலும், கை, கால் விரற்கள், கரிந்த கட்டைகளைப்
போலும், கண்கள், யானைக்கண் போலும், பற்கள் சேடாரி
போலும், உதடுகள் வானத்தையும் பூமியையும் பார்த்ததாகவு
மிருந்தன.

இவ்வளவு லக்ஷணத்தையுடைய அவள் வெகு ஒய்யார
மாக, கையை ஆட்டிக்கொண்டு, இவர்களுக் கெதிரே வந்தாள்.
அவளின் வருகையைக் கண்ட, மங்கலவாக்கியும், நீலமுகியும்,
இதென்னடா, பேரிழவு, எங்கிருந்து புறப்பட்டது. மானிட
ப்பிறவியானல் இரண்டு கைகள்தானே இருக்கும். இரண்டு
கைகளுடன் அடுத்தாண்மையாக வேறென்னவோ, இரண்டு
ஆடுகின்றனவே. ஒருக்கால் இச்சனி நம்மை விழுங்கத்தான்

வருகின்றதோ யாதோ. அறிகிலமே. எனப் பலவாறு நினைத்துப்பயந்து நடு நடுங்கினார்கள். ஹூர்முஜ், அணுத்துணையும் அச்சப்படாதவரா யிருந்தார்.

அப்போது, அவ்விருவரும் ஹூர்முஜைப் பார்த்து, எஜமானே, கட்டளையானால், இதோ வருகிற கரிமலையாகிய மூதேவியிடத்தில் ஏதேனும் கேட்டறிகிறோமென்றார்கள். தடையின்றிக் கேளுங்களென்றார். அவர்கள் அவளைப் பார்த்து, ஏடீ, நீயார்? சஞ்சலப்பட்டுக்கொண்டிருக்கும் எங்களிடத்தில் உனக்கென்ன அலுவலிருக்கிறது சீக்கிரம் சொல்லென்றார்கள். அதற்கவள், பாலியர்களே, நானே, இக்காட்டுமாண்டித் தலைவரின் பௌத்திரியா யிருக்கிறேன். இதோ, உங்களுடனிருக்கிற வாலிபர்மீது மையல்கொண்டு அவருக்கு என் சரீரத்தைப் பலியிட நாடி வந்திருக்கிறேனென்றாள். அவளுடைய சொல்லைக்கேட்டு அவ்விருவரும் ஆச்சரியமடைந்திருந்தார்கள்.

ஹூர்முஜின், உதட்டில் அவரையும் அறியாமல் சிரிப்புவந்துற்றது. அவ்விருவரும், அவளைப்பார்த்து, நீ, இவர்பேரில் உண்மையாகவே பிச்சைக்கொண்டிருக்கிறு யென்பதை நாங்கள் நம்புகிறோம். நாங்களோ இச்சமயம், சங்கடப்பட்டவர்களாயிருக்கிறோம். இத்தலமோ, எங்களுக்குச் சிறைச்சாலையாயிருக்கிறது. சிறைச்சாலையி லிருந்துக்கொண்டு எவ்விதம் சுகமனுபவிக்கிறது. அதிலென்ன இன்பமிருக்கிறது.

ஆகையால், நாங்கள் மீக்ஷிபெற வுபாயங் கிடைத்தால் அப்புறம் உன் பிரியப்படி செய்துக்கொள்ளலா மென்றார்கள். அதற்கவள் வெறும் பேச்சினால் ஆகப்போகிறதொன்றுமில்லை. காகிதத்தினாற் செய்த கப்பல் கடலோட்டமாட்டாது. நான் இச்சை கொண்டிருக்கிற அவர், என்னைக் கல்யாணம் செய்து என் பேரில் அவருடைய முழுப்பிரியத்தையும் வைதது, நான் அவரில் நின்றும் உலக இன்பத்தைப்பெறச் செய்வாரேயானால், நான் உங்களுக்கு, சிறைமீளும் வழியைக் காட்டுவேன். அதன்பின்

என்னவானாலும் ஆகட்டும். அப்படிக்கில்லாதுபோனால் நீங்கள் உங்கள் ஜீவனைக் கை கழுவியவர்களாகவே யிருந்து தீர்வீர்கள். ஏனென்றாலோ, என் தகப்பன் பாட்டன் முதலானவர்கள், வெளியிற்போய்ச் சனங்களைப் பிடித்துவந்து இக்கோட்டைக்குள் விட்டு விட்டுப் போவார்கள். அச்சனங்கள் இங்குள்ள மதுரமான கனிவருக்ஷங்களைப் புசித்து புஷ்டியடைந்திருப்பார்கள். சமயம்பார்த்து அவர்கள் வந்து கொழுத்த மனுஷர்களை யறுத்துப் புசிப்பார்கள். இதுதான் அவர்களுடைய தொழில். அதுபோலவே உங்களையும் பருக்கவிட்டுப் பசியாறுது விடார்கள். இத்தொழிலினாலேயே, எங்களுக்கு மனிதச் சத்துருவென்று பெயரிடப்பட்டிருக்கிறதென்றாள்.

அவ்விருவரும் அவளுடைய குரூரமான வார்த்தையால் கைகால் நடுக்கமெடுக்க அச்சங்கொண்டார்கள். ஹாமுஜ், அவர்களைப்பார்த்து, சிநேகிதர்களே, இவ்வளவாக நீங்கள் ஏன் அஞ்சவேண்டும். நாம் பருத்தாலல்லவோ அவர்கள் நம்மை அறுத்துப் புசிப்பார்கள். சுவற்றை நக்கிக் கொண்டு கிடக்கும் நமக்கு. சதையெங்கிருந் துண்டாகப்போகிறது. அவர்கள் மண்ணைவாரித் தின்னட்டும். நமக்கென்ன அச்சமென்றார். அதன்பின், அவ்விருவரும் பலவாறு ஆலோசனைசெய்து கடைசியில், ஹாமுஜைபபார்த்து, எஜமானே, தங்களுடைய முகத்தழகுக்கிரங்கி, இக்கறுத்த ஆபத்து நம்மை ஒன்றுஞ் செய்யாதிருக்கிறாள். நளினமாய்ப் பேசுகிறாள். வணக்கத்துடன் நிற்கிறாள். இது நலல சமயமாய்த் தெரிகிறபடியால் ஏதேனும், அவளுக் கிணக்கமான வார்த்தையால் அல்லது செய்கையால் அவளை வசப்படுத்தி, நாம் சிறைமீள வகைதேடுவதே உத்தமமாய்க் காணப்படுகிறதென்றார்கள்.

ஹாமுஜ், அவர்களின் யோசனை சரியானதென்று நினைத்து அவளைப்பார்த்து, ஆ, என் உயிர்க்குயிரான பெண்ணழகியே, தூரநின்று பேசுவதில் என்ன பிரயோசனமிருக்கிறது.

கடவுள்பேரிற் சத்தியமாக உன் அழகால் நான் உயிரிழக்குந் தறுவாயிலிருக்கிறேன். உன் கண்பார்வை யென்னும் அம்பு என் மனதைக் கலக்கிவிட்டது. தூரத்தில் நின்று எதுவரையில் கண்சாடை காட்டிக்கொண்டிருப்பாய். விரகங்கொண்ட என்பேரில் எதுவரையில் நீ இரங்காதிருப்பாய்? உன்னுடைய கன்னமாகிய விளக்கை யெனக்குக் காண்பித்து, பிரிந்திருத்தலென்னும் நஞ்சை, சேர்மானமென்னும் கிருபையால் முறித்தெறிவாயாகவென்று வுரத்த சப்தமிட்டுக் கூப்பிட்டார்.

அவள், ஹூர்முஜின் சப்தத்தைக் கேட்டவுடனே, கரிக்குன்று ஓடிவருவதுபோல் ஓடிவந்து, ஹூர்முஜைக் கட்டியணைத்து, கன்னத்தை முகர்ந்து நவரத்தினங்களால் ஆலாத்தியெடுத்துக் கண்ணேறு கழித்து, அவரைப்பார்த்து, என்னைக் கல்யாணமுடித்துக் கொள்ளும். உமக்குத் தேவையான சகல ஆயுதங்களும் தருகிறேன். என் குடும்பத்தாரங்களும் நித்திரை போகுஞ் சமையத்தில் அவர்களை உமக்குக் காண்பிக்கிறேன். சாவகாசமாக அவர்களை நீர் வெட்டியெறிந்துவிட்டு நீரே இத்தலத்துக் காசராயிருந்துகொள்ளும். நான் உம்முடைய பட்டத்தரசியா யிருந்துகொள்ளுகிறேன். அதனால் நம்மிருவருக்கும் மெத்த, சவுக்கியமுண்டாகுமென்றாள். ஹூர்முஜுக்கு, அவளுடைய வார்த்தைகளால் கிஞ்சிற்று சந்தோஷமும், அருவருப்பும், மனக்கலக்கமும் உண்டுபட்டன. மற்ற இருவரும், ஹூர்முஜைப்பார்த்து எஜமானே, கடவுளுக்காக, எங்களுடைய சொல்லைக்கேளுங்கள், பரிசுத்தமான வுதவி. வானத்தைவிடப் பெரிதாயிருக்கிறது. நம்முடைய காரியமானபிறகு கல்யாணம் செய்துகொள்வதாக, பிணமலைக்கு வாக்குக் கொடுங்களென்றார்கள்.

“ஹூர்முஜ்” அவ்விருவரையும் பார்த்து, சினேகிதர்களே கடவுள் பிழைபொறுப்பாராக. கரவடம் நமக்குடையதல்ல. பொய்சொல்வதில் புண்ணியமில்லை. மோசச் செய்கையைக்

களவிலும் கருதக்கூடாது. அவ்விதமான விஷயங்களில் மறந்தேனும் அடியெடுத்து வைக்கக்கூடாது. ஆகையால் உண்மையாகவுந் தெளிவாகவும் நாம் சொல்லவேண்டியதை அவளுக்குச் சொல்லுவோம். அதற்கவள் சம்மதித்தால் மெத்த நல்லது. நாம் மீக்ஷபெறுவோம், இல்லாதுபோனால் விதிப்படி நடப்பதை அநுபவித்துத் தீர்ப்போமென்று கூறி விட்டு, அவளைப்பார்த்து, பெண்ணே, பிரியநேசர்கள், ஏதேனும் ஒரு கருமத்தை ஆரம்பித்துச் செய்து மனப்பிரியத்தைச் சோதித்தறிந்த பிறகு இணக்கமுற்றிருப்பது வழக்கமா யிருக்கிறது. ஆகையினாலே, நீ, என்பேரில் மோகமுற்றிருக்கின்றாயென்பதை நான் நிட்சமாய் நம்புகிறதற்கு, நீ, என் சொல்லைக் கேட்கவேண்டுமென்றார்.

அதென்ன சொல்லுமென்றாள். அதற்கவர் பெண்ணே எனக்கு, நீ, ஆயுதங்கொடுத்து, உன் குடும்பத்தார்களிருக்கும் தலத்தைக் காண்பிப்பையேயானால், என்பேரில், நீ, மோகமுற்றிருப்பதாக நான் நம்புவேன். அதன்பின் இன்னொரு முக்கிய அலுவலிருக்கிறது. அதையும் முடித்துக்கொண்டு வந்து உன் பிரியப்படி நடந்துக்கொள்ள யாதொரு தடையுமில்லையென்றார். அதற்கவள் என் மனம்நிறைந்த வாழ்வே, உம்முடைய சொல்லுக்கு ஒருக்காலும் நான் மாறு செய்ய மாட்டேன். நீரும் அப்படியே வாக்கு மாறாதிருக்கவேண்டும். நன்றி மறத்தலினாலேயே உலகத்தில் கெட்டவர்களென்ற பேருண்டாய்விடுகிறது. அதைப்பற்றியே யோசிக்கிறேனென்றாள். ஹார்முஜ், அவளைப்பார்த்து, பெண்ணே; நான் அப்படிப்பட்டவனல்ல. ஒருக்காலும் நான் வாக்கு மாறமாட்டேன். அதைப் பற்றி, நீ, கலங்கவேண்டாமென்றார்.

அவள் உடனே தன்னிருப்பிடத்திற்குப்போய் ஆயுதங்களெடுத்துவந்து ஹார்முஜுக்குக் கொடுத்தாள். அவர் ஆயுதங்களணிந்து தயாராயிருந்தார். அர்த்தராத்திரியில், அப்பெண்

ஹாரூர்முனைக் கூட்டிப்போய், ஒரு கதவைத்திறந்து காட்டுமராண்டிகளைத் தூரத்தில் நின்று காண்பித்தாள். அவர்களடங்கலும் அயர்ந்து நித்திரைப் போய்க்கொண்டிருந்தார்கள். தூக்கத்திலிருப்பவர்களை வெட்டுவது ஆண்மையல்லவென்று ஹாரூர்முனு, நினைத்து, அவர்களை யெழுந்திருக்கச் செய்தார். அவர்களுக்கும், இவருக்கும் சண்டை ஆரம்பித்தது. இவர் மஹா வூக்கத்துடனின்று காட்டுமராண்டிக ளடங்கலையும் சர்வ சங்காரஞ் செய்தொழித்துவிட்டு, அவளைப பார்த்து, பெண்ணே இதோ நான் என்னுடைய மற்றொரு வேலைக்காக முன்னேறிப் போகிறேன். இவ்விடத்திய அரசாக்ஷியை நீ, ஒப்புக்கொண்டு சுகத்துடனிருப்பாயாக, நாம் செய்துக்கொண்ட வாக்குத் தத்தத்தின் பேரில் உனக்கு ஆசையிருக்கும் பக்ஷத்தில் என்னுடைய வேலை முடிந்தபிறகு இங்குவந்து சேருகிறேன். நீ, அதைப்பற்றி சந்தேகிக்கவேண்டாமென்றார்.

அச்சொல்லை அவள் கேட்டவுடனே, பதறியெழுந்து ஆ, ஆ. இதற்காகத்தானு? இவ்வளவு பிரயாசை யெடுத்தேன். ஓ. மேன்மைபொருந்திய சுத்தவீரரே, உம்மை தெரிசித்ததினுலல்லவா, என்னுடைய குடும்பத்தாரையும், அரசாக்ஷியையும் அழிக்கமுயன்றேன். இதுதானு சுத்தவீரர்களின் கொள்கை? ஆ, என் பிரிய நேசரே, உம்மைவிட்டுப் பிரிந்திருக்குங்கவலையை என்னுல் சுமக்கமுடியாது. உம்முடைய காரியம் நிறைவேறுகிறவரையில் உமக்குப் பணிவிடை செய்துக்கொண்டு உம்முடனேயே யிருப்பேனல்லாது, ஒருக்காலும் தனித்தவளாக இத்தலத்தில் நான் இருக்கமாட்டேனென்று ஓலமிட்டழுதாள். அவளுடைய அழுகை, ஹாரூர்முனின் மனதில் உருக்கத்தையுண்டாக்கிவிட்டது. அவளைப்பார்த்து, உனக்குப் பிரியமிருந்தால் எங்களுடன் கூடவா. எங்களுக்கு வழித்துணையாயிரு. கடவுள் நாடுவாரேயானுல் குறித்தகாலத்தில் நான் கொடுத்த வாக்கை நிறைவேற்றுகிறேன். நீ கேட்டுக்கொண்டபடி செய்கிறேனென்றார்.

## 19-ம் அதிகாரம்.

### ஹூர்முஜ் ஈரானுக்கு வந்தது.



ஹூர்முஜ், மங்கலவாக்கி, நீலமுகி, இம்மூவரும், காட்டு மராண்டிப்பெண்ணையும் கூட்டிக்கொண்டு, ஈரானுக்குப் பிரயாணமானார்கள். காடு, மலை, வனம், வனாந்திரம், முதலானவைகளையும் கடந்து இடைவழியிற் சம்பவித்த அனேக கஷ்டங்களையும் சஹித்துக்கொண்டு ஈரான் எல்லைச் சர்ாகத்துக்கு வந்து சேர்ந்தார்கள். அப்போது, ஹூர்முஜ், ஒரு தந்திரத்தை தெரிந்து மங்கலவாக்கி யென்பவரிடத்தில் விலையுயர்ந்த இரத்தினங்களில் சிலவற்றைக் கொடுத்து ரகசியமாக ஏதேதோ அவருக்குபதேசங் கூறியனுப்பினார்.

அவர் பட்டணத்துக்குச் சென்று அவ்விரத்தினங்களை விற்று முதல் செய்து, மேலானகட்டிடமொன்று தயார்ப்படுத்தினார். அவ்வூர்ச் சனங்கள் வந்து, வர்த்தகரே, நீங்கள் எங்கிருந்து வந்தவர்கள்? என்ன வேலையாய் வந்தீர்களென்று கேட்டார்கள். அதற்கவர் சுதேசிகளே, நான், காஷ்மீர் தேசத்தின் பிரபல பண்டிதராகிய, மீர்ஷபாய், என்னும் வைத்தியரின் பணிவிடையாளனும், கிறிஸ்துமதாநுசாரியாயுமிருக்கிறேன். என்னுடைய எஜமான், சிலகாலம் வரையில் இவ்வூரிற் குடியிருந்து போக நாடி வந்திருக்கிறார்கள். அவர்களுக்குத் தன் சொந்த வீட்டிலேயே அல்லாமல் குடியிருக்கப் பொருந்தமிராது. ஒருவருடைய முக தாக்ஷணியம் பார்க்கிறவர்களுமல்ல. மனிதர்களின் உதவியைத் தேடுகிறவர்களுமல்ல. அவர்கள் ஒருவருக்குதவிசெய்கிறதானல் அதன் பிரதியை நாடவுமாட்டார்கள். எவ்வளவு பொருள கொடுததாலும் தன் வீட்டை விட்டு வெளியிற்

போகமாட்டார்கள். அதனாலேயே அவர்களின் கட்டளைப்படிக்கு இக்கட்டிடத்தைத் தயார்ப்படுத்துகிறேன். எதுவரையில் அவர்கள் இவ்வூரிலிருக்கிறார்களோ அதுவரையில் எமதூதர் இவ்வூரில் வந்து நுழைய அஞ்சுவார். கிறிஸ்து நாதர், கடவுளின் அருளால் இறந்தவர்களுக்கு வுயிர் கொடுப்பவராயிருந்தார். இவர்களோ மருந்தைக் கொடுத்து மரணத்தைப் போக்குகிறார்கள். இவர்களுடைய பேரைச்சொன்னாலுமே போதுமானது. எப்படிப்பட்ட வியாதியானாலும் சுவஸ்தமாய்விடும். நீங்கள் உங்கள் அரசருக்கு எங்கள் வைத்தியருடைய செய்தியை அறிவித்து அவருக்குப் பிரியமிருந்தால் தனித்த கட்டிடமொன்றியற்றச் சொல்லுங்கள். அதில் அவர்கள் வந்திருந்து விட்டு தன்னிருப்பிடத்துக்கு மீள்வார்களென்றார்.

ஈரான் அரசரைத்தான், இளவரசி சுகமடைய வேண்டுமென்கிற நாட்டத்தின் பேரில் வைத்தியப் பைத்தியம் பிடித்து வாட்டிக்கொண்டிருக்கிறதே, இவராலாவது அவருடைய நாட்டம் நிறைவேறாதா? என்று நினைத்து வைத்தியரைப் பற்றி அரசர் முகத்தில் வியந்து பேசினார்கள். இதைக்கேட்டவுடனே அரசர் மந்திரிமார்களைப்பார்த்து, நன்றியறிதலுடைய என் உயிர்த் துணைவர்காள். கடவுளுக்காக அதி சீக்கிரத்தில் தகுந்த மண்டபமொன்று கட்டிச் சகல தளவாடங்களும் தயார்ப்படுத்துங்கள். என்னுடைய மனப்பிணிக்கு மருந்தைத் தேடுங்கள். விதியும் மதியும் கெட்ட நான் இப்படிப்பட்ட வைத்தியரைத்தான் தேடிக்கொண்டிருந்தேன். என்னுடைய நாட்டம் கைகூடிற்று. என் பிரிய நேசியாகிய, குல் இளவரசி சுகமடையுங் காலம் நெருங்கிவிட்டதாக நினைக்கிறேன். என் கவலை நீங்கி, சந்தோஷமடைவதில் சந்தேகமில்லையென்று கூறிவிட்டு, மங்கலவாக்கி யென்பவரை யழைத்து விலையுயர்ந்த பட்டுப் பரிவட்ட முதலான வெகுமதியளித்து, அவரைப் பார்த்து, சினேகிதரே, என்னுடைய அரண்மனையிலும், கோட்டைக்குள்ளும் அனேக வீடுகளிருக்கின்றன. உம்முடைய வைத்தியருக்காகத் தனிக் கட்டிடமொ

ன்று தயார்ப்படுத்தக் கட்டளையிட்டிருக்கிறேன். அக்கட்டடம் முடிவாகிற வரையில் அவர்களுக்குப் பிரியமான ஒரு கட்டிடத்தில் வந்திருக்கச் செய்வது வும்பேரிற் கடமையாயிருக்கிறது. ஆகையால் சீக்கிரம் அவர்களை, கோட்டைக்குள் அல்லது அரண்மனைக்குள் வந்து சேரும்படிக்குக் கடிதமெழுதியனுப்புமென்று வெகுவாக வேண்டிக்கொண்டார்.

அதற்கு, மங்கல வாக்கி யென்பவர், எஜமானே, என்னுடைய குருவானவர்கள், மஹா நாகரீகத்தையுடையவர்கள். புறத்தியாருடைய வீட்டிலிருக்க ஒருக்காலும் பொருந்தமாட்டார்கள். அவர்களுக்குத் தனித்திருப்பதே அப்பியாசமாய் விட்டபடியால் அதை மாற்றுவது மஹா கடினமாயிருக்கிறது. நான் எழுதுவதால் என்னுகப் போகிறது. ஒருக்காலும் வரமாட்டார்களென்றூர். அதனுல் அரசருக்கு அயர்வுகண்டு விரைவில் கட்டிட வேலையை முடிக்கும்படிக்குக் கட்டளையிட்டார். வெகு சீக்கிரத்தில் வேலை முடித்து விரிப்பு முதலான சகல தளபாடங்களும் தயார்ப்படுததப்பட்டன. ஹாரூர்முஜ், மங்கலவாக்கி மூலமாய் கோட்டைக்குள் நடக்கும் காரியங்களைத்தெரிந்துக்கொண்டிருந்தார். கட்டடவேலை முடிவுபெற்ற செய்தி கிடைத்தவுடனே, பண்டிதர் உடையணிந்து காஷ்மீரத்து கைப்பெட்டியொன்றைக் கக்கத்திலிடுக்கிக்கொண்டு நடந்து கோட்டைக்குள் வந்து புதுக்கட்டிடத்தில் விடுதிவிட்டிருந்தார். ஈரான் அரசர், பண்டிதரின் வருகையையறிந்து, தங்களின் வருகையால் நான் மிகுந்த சந்தோஷமடைந்தேன். தங்களின் பாத தாமரை பட்டதால் என்னுடைய தேசம், கடவுள் பேரிற் சத்தியமாகச் சிறப்புஞ் சீரும் பெற்றது. தங்களைச் சந்திக்க வேண்டுமென்னும் பேரவா எனக் கதிகமாயுண்டாயிருக்கிறபடியால் ஏழைபேரிற் கருணைகூர்ந்து அதி சீக்கிரத்தில் என்னுடைய சபாமண்டபத்துக்கு வந்து தங்களின் திருமுகத்தை யெங்களுக்குக் காண்பிப்பீர்களென்பதை யெதிர் பார்த்திருக்கிறேனென்று அனேக வந்தனத்துடன் செய்தியனுப்பினுர். வைத்திய வேடம் பூண்டிருக்கிற

"ஹார்முஜ்" வந்த தூதனிடத்தில், நான் நடந்து வந்த களைபி ன்னுந் தீரவில்லை. இங்கிருந்து இராஜ சமுகத்துக்குப்போக என் காலில் பலமில்லாதிருக்கிறபடியால், என் குற்றத்தை மன் னித்து இரண்டொருநாள் எனக்குச் சாவகாசம் கொடுத்தருள வேண்டுகிறேன். என் சரீரம் கொஞ்சம் சுகப்பட்டவுடனே தங்கள் சமுகமடைகிறேனென்று மறுமொழியனுப்பினார். ஈரான் அரசர், அதுவரையில் பொறுத்திருக்கமாட்டாமல், மாதளம் பழப்பானக்கம், இஞ்சி முறபா முதலான பலவகைச் சாமான்க ளும், வைத்தியரின் சங்கைக்காக முந்தியனுப்பிவிட்டு, சற்று பொறுத்து, தானும் வந்து சேர்ந்து வைத்தியருக்கு வந்தனம் ளித்துக் கிட்டவுட்கார்ந்து, ஆட்டமெடுத்த சரீரத்துடன் வைத் திய சிகாமணியே; கடவுள்பேரில் சத்தியமாகத் தாங்கள் நல்ல சமையத்தில் வந்தீர்கள். என் பத்தினியின் நோயானது என் சரீர வலுவைக் குறைத்துவிட்டது. அவளும் ஈரற்குலை நோ யால் மெத்த வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறாள். ஊண், தீன், உறக்கமும் கிடையாது. வைத்தியர்களுக்கெல்லாம் வைத்திய ராகிய, கடவுள், தங்கள் கையில் சுகப்படுத்துவதை வசப்படுத் திக் கொடுத்திருக்கிறபடியால் என் பத்தினியின் நோயானது சூரியனைக்கண்ட பனிபோல நீங்கிவிடுமென்னும் நம்பிக்கையு டையவனாயிருக்கிறேனென்றார். வைத்தியர், அரசரைப்பார்த்து நாயகமே, அப்படியே ஆகக்கடவது. நடங்கள். இதுதான் என்னுடைய அலுவல். கடவுள் சுகத்தைக்கொடுப்பார். என க்கு நல்ல பேர்கிடைக்குமென்றார். அரசர், வைத்தியரையழை த்துக்கொண்டு நடந்து அந்தப்புரவாசலுக்கு வந்து, தாதியு டன் வைத்தியரை, இளவரசி யிருக்குமிடத்துக்குப் போகச் சொன்னார். தாங்களேன் எங்களுடன் வரப்பின் வாங்குகிறீர்க ளென்று அரசரை, வைத்தியர் கேட்டார்.

அரசர், தலைக்குனிந்தவராக பண்டிதசிகாமணியே, இது ஒரு மனப்பிணியாச்சும். இதைப்பற்றி என்னை கேட்காதிருப் பது வுத்தமம். உள்ளேயிருக்கும் நோயாளியோ, கூஜான். தே

சக்தரசரின் கண்மணியான புக்திரி. அவள்பேரில் நான்மோக முற்று விரகத்தியில் வெந்துக் கொண்டிருக்கிறேன். அவளுக்கு என் சரீரத்தைப் பலியிட்டவனும்மிருக்கிறேன். அவள் என் கையில் கடவுள் கிருபையால் அகப்பட்டுக் கொண்டாள், கல்யாணஞ்செய்துக்கொள்ள அவளின் சுகத்தை யெதிர்பார்க்கவேண்டியதா யிருக்கிறது. அதற்காகவே நான் அவளுக்குப் பரிகாரஞ்செய்வதில் இடைக்கட்டி நிற்கிறேன். இதற்குமுன் அவளுடைய தெரிசனையால் கண்குளிர்ச்சி யடைந்துவந்தேன். இப்போது அவளுடைய குணம் வேறுபட்டு, என்னைக்கண்டால் சத்ராதியைக் கண்டதுபோல் சீறிப் பாய்கின்முள். என்னுலாவது ஒன்றுமில்லை. ஆகையால், தாங்கள் தயவு செய்து, கடவுள் முகத்துக்காக அவளைச் சுகப்படுத்தி, என் உயிரைக் காப்பாற்றுங்கள். நான் சாகும்பரியந்தம் தாங்கள் செய்த நன்றியை மறக்கமாட்டேன். தங்களின் உபகாரமென்னும விலங்கிடப்பட்டவனுகவே யிருப்பேன் என்பதில் சந்தேகமில்லையென்றுர். வைத்தியர், அரசரைப்பார்த்து, நாயகமே, வியாதியஸ்தர்களின் குணம் அதுதான். கோபிப்பார்கள். சப்தமிடுவார்கள். சிணுங்குவார்கள். சீறுவார்கள். பலவிதமான கோலங் காட்டுவார்கள். அது எவ்வாறிருந்தாலும் குற்றமில்லை. இரண்டொருநாள்களுக்குள், நான் எவ்வாறு சுகப்படுத்துகிறேனென்பதைப் பாருங்கள். நான் மஹாப் பிரபல பண்டிதனுகையால் வெகு சீக்கிரத்தில் தங்களின் நாட்டத்தை நிறைவேற்றுவிக்கிறேனென்றுர். வைத்தியரின் வார்த்தையைக் கேட்டதும் அரசருக்கு புட்டம் பூரித்துவிட்டது. பின்னுல் வரப்போகிற கஷ்ட நிஷ்டூரங்களடங்கலையும் நினைத்துப் பாராமல் சந்தோஷத்துடனிருந்தார். தாதி, வைத்தியரைக் கூட்டிக்கொண்டு இளவரசி யிருக்கும் அறைக்கு வந்தாள். ஹார்முஜ், இளவரசியின் சிறுநீர் பரிசோதனை செய்தபிறகு அவளுடைய கையைப்பிடித்து நாடிப் பரிக்ஷைசெய்ய ஆரம்பித்தார். இவருடைய கை அவளுடைய கையிற் பட்டவுடனே, இருவரின் மனங்களிலும் ஒருவித வுணர்வுண்டாயிற்று. சரீரங்கள் வில

விலப்புற்றன. வைத்திய சிகாமணியோ, வைத்தியர்கள் கைப் பிடித்து நாடிப்பரீக்ஷை செய்வதற்கு மாற்றமாக, மெல்லெனக் கைவிரலால் அழுத்தி சைகை காட்டினார். இளவரசியோ ஓஹோ, இவ்வைத்தியன் நம்பேரில் காதலுற்றுக் கைச்சாடை காட்டுகிறானென்றறிந்து, தன் கையை யிழுத்துக்கொண்டு கூச்சற் போட நினைத்தாள். என்றாலும் அச்சமையம் அவள் மனதில் ஒருவித வுதிப்புண்டாகி, தன் முகமூடியைக் கொஞ்சிற்று நெகிழ்விட்டுக் கடைக்கண்ணால் வைத்தியரைப்பார்த்தாள். விசுவாசமறவாத அவளுடைய பிரியநேசராகிய, ஹாறூன்முஜ்ஜின் முகக்களை, வழிப்பயணத்தின் கஷ்டத்தால் வாட்டமுற்றிருந்ததாலும் வைத்தியர் வேடம் பூண்டிருந்ததாலும் அவரை யின்னாரென்றறியக்கூடவில்லை. ஆனால் அவளுக்கு சந்தேக முண்டுபட்டிருந்தது. மனப்பதைப்பே அதற்கு சாக்ஷிகூறிற்று. வைத்தியசிகாமணியோ, அதிக நேரத்தை அவ்விடத்திற் போக்காமல் தன்னிருப்பிடத்திற்கு மீண்டுவிட்டார்.

அவர் போனபிறகு, இளவரசி, தன் தாதியைப்பார்த்து என் உயிர்க் குயிரான பாங்கியே, இப்போது இங்கு வந்துவிட்டுப்போனவரை, நீ, கூர்க்கப்பார்த்தையா? இது ஒருவித அந்தரங்க விஷயமாகக் காணப்படுகிறது. இந்த மனிதர்மீது, என் காதலராகிய, ஹாறூன்முஜ்ஜின் வாடைவீசுகிறது. இவர்தான், என்னுடைய இரண்டாவது யோசேப்பென்று என்மனம், உறுதியாய்க் கூறுகிறது. இல்லாதுபோனால் என் மனம் பதைபதைப்புறக் காரணமில்லை. எனக்கு, வெறுமனே உசாருண்டாக நான் பைத்தியக்காரியல்லவே. எத்தனையோ வைத்தியர்கள் இதற்குமுன் வந்தார்கள். அவர்களின் முகங்களைப் பார்ப்பது எனக்குப் பெரிய வெறுப்பாகவேயிருந்தது. இவரோ, குங்குமப்பூவின் குஞ்சம்போன்றிருக்கிறார். இவர் இங்கு வந்தவுடனே எனக்கு சிரிப்புவந்தது. என் மனமென்னும் அரும்புமலர்ந்து, வெட்கமென்னும் பூட்டுதானே திறந்துகொண்டது. நாடிப் பரீக்ஷைசெய்ய இவர் என் கையைப்பிடித்தபோது, மற்றவைத்

தியர்கள் செய்யாத விதமாகத் தன் கைவிரலைபழுத்திச் சாடை காட்டினார். முன்பின் அறியாதவர்கள் அந்தப்படி ஒருக்கா லும் செய்யத் துணியார்களென்றாள். தாதியானவள், மகளே, விருதாவில் உன் புத்தியைப் போக்காதேயிரு. ஹாமூஜோ, ஜாமுக்குச் சக்கரவர்த்தியாய்விட்டார். நம்முடைய காரியத்தில் அவருக்கு எங்கிருந்து நினைவுண்டாகப்போகிறது. இந்த கேவ லத்தொழிலாகிய பண்டிதத்தில் தலையிட அவருக்கு என்ன அவசரமிருக்கிறது? சில சில சமையங்களில் ஒருவருடைய ரூபத்தைப்போல் இன்னொருவர் காணப்படுகிறதுமுண்டு. அவ ராயிருந்தால் உன்னைச் சந்தித்தபிறகு அவர் உன்னைவிட்டுப் பிரிந்துபோய் விடுவாரா? சீர்தூக்கிப் பார்த்துப் புலம்பாதிரெ ன்றாள். இளவரசி, மறுமொழி கொடுக்காது மவுனமுற்றிருந் தாள். ஆனால் சந்தேகக்குறி அவள் முகத்தில் காணக்கிடந் தது. அன்று பகலும் இரவும், வாய் முணுமுணுத்தவளாகவே யிருந்தாள். நித்திரையே கிடையாது. நடுச்சாமத்திலெழுந்து தலையணையை மடிமேல் வைத்து அதன்மேல் கையை யூன்றிக் கொண்டு சந்தோஷ முடையவள்போலுட்கார்ந் திருந்தாள். அந்தப்புர வாசற் காப்பாளர்கள், அரசரிடத்துவந்து வணக்கத் துடன் நின்று, எஜமானே, நம் இளவரசியவர்கள், வெகு உல் லாசத்துடன் எழுந்திருந்து இரத்தினப் பீடத்திலுட்கார்ந்து புன் னகை நகைத்துக் கொண்டிருக்கிறார்கள். தலையை அசைத்தசை த்து ஏதேதோ, தன் தாதியுடன் சந்தோஷமாய் பேசிக்கொண்டி ருக்கிறார்கள். அதனால் அவர்களுடைய வியாதி குணப்பட்டு வருவதாகக் கருதுகிறோமென்றார்கள். அரசர், சந்தோஷத்தால் தரிப்பிடங் கொள்ளாதவராகி, பிடரியில் காலடிபடவோடி, வைத் தியர் வீட்டுக்கு வந்து, சிரித்த முகத்துடன், அவரைப் பார்த்து வைதகிய சிகாமணியே, பலே ஷபாஷ், நான் என்ன சொல்லப் போகிறேன். தீரா நோயைத் தீர்க்கக்கூடிய மருந்தையும், கை வளத்தையும் தங்களுக்குக் கொடுத்த, கடவுளை, நான் எவ்வள வாகத்தான் துதிப்பேன்? தங்களைப் போன்ற பண்டிதர்கள் உல கத்திலிருப்பதாக நான் நினைக்கவுமில்லை. இருந்தாகக் கேள்விப்

படவுமில்லை. கடவுளுதவியால், இன்றைத்தினம், இளவரசியின் முகம் கொஞ்சம் செழிப்புற்றிருக்கிறது. நாளைத்தினம் முழுதும் சுகப்படுமென்றே நினைக்கிறேனென்றார்.

வைத்தியர், அரசரே, நான் ஒரு கெட்டிக்காரனல்ல. ஆனால், கைராசியுடையவன். அவள் சுகம் பெறுவது, தங்களின் ஆசீர்வாதத்தாலும், கடவுளின் கிருபாநோக்கத்தாலுமே யென்பதில் சந்தேகமில்லையென்று மறுமொழி கொடுத்தார். அரசர் வைத்தியரைப் புகழ்ந்து, பண்டித சிகாமணியே, நாளைக்காலையில் நான் தங்களுடன் வருகிறேன். கடவுள் முகத்துக்காக, என் முன்பில் அவளுக்கு மருந்து குடிப்பாட்டுங்களென்றார். வைத்தியர் தலையை யசைத்துக் கொண்டு, எஜமானே, ஒருக்காலும் இவ்வடிமை கட்டளைக்கு மாறு செய்கிறவனல்ல. தங்கள் பத்தினி சுகப்படுவதை யெதிர் பார்த்திருங்கள். அவள், சவுக்கியமடைய முன் இங்கிருந்து வேறிடங்களுக்கு நான் அடிபெயர்த்துப்போக மாட்டேனென்பதை நம்புங்கள். ஆனால் தங்களிடத்தில் எனக்கு இன்னொரு முக்கிய அலுவலிருக்கிறது. அதாவது, வைத்தியர்கள் தங்கள் பிரியப்படி மருந்து கொடுப்பார்கள். நோயாளியும் அவர்களிடத்தில் ஒன்றையும் மறைத்துக்கூறமாட்டார்கள். ஆண்பிள்ளையானால் கூச்சமின்றி, பலபேர் முன்னிலையில் திறந்து பேசுவார்கள். பெண்பிள்ளைகள் நாணத்தால் அவர்களின்நோய் வந்தவரலாற்றை விவரித்துப் பேசமாட்டார்கள். வாய்மொழியை அறிந்துவைத்தியஞ் செய்வதில் வெகு சீக்கிரத்தில் சுகமுண்டாகிறது. நாடிப்பரீக்ஷையால் நோயின் கூறறிந்து வைத்தியஞ்செய்வது மஹாகஷ்டம். ஆகையால், என்னுடைய மருந்துப் பிரயோகம் முடிகிறவரையில் அந்தப்புரக்காப்பாளர்களைக்கூட, உள்ளே வராதபடி தடுத்துவைத்தால் மெத்தவுத்தமம். ஆனால், ஒரு ஆண்பிள்ளை, ஒரு பெண்பிள்ளையுடன் தனித்திருப்பதில் பலவிதக் கெடுதிகளேற்பட்டு வருவது வுலகவழக்கமாயிருப்பதால், ஒரே ஒரு பெண்பிள்ளை கூடவிருப்பதால் குற்றமில்லை. முக்கியம் இருக்கத்தானவேண்டும். அப்படியிருப்பவளும், இளவரசி, கூச்சமின்

றிப் பேசுவதற்காய், அவளுடன் நெருங்கிய நேசமுடையவளாயி ருக்க வேண்டுமென்பதே யென்று விண்ணப்பஞ்செய்தார். அரசர், பண்டிதரின் கபடவார்த்தையை நிசமென்று நம்பி, அவர் பேரில் அதிக நம்பிக்கையுடையவராகி, பண்டிதர் வந்தவுடனே, தாதியைத் தவிர ஒருவரும் உள்ளேயிருக்கக்கூடாது. வெளியிற் போய்விட வேண்டுமென்று கடின கட்டளையிட்டார். பண்டிதருக்கு நல்லவழி வாய்த்துக்கொண்டது. மறுநாட்காலையில் மனதைத் திடப்படுத்திக்கொண்டு, இளவரசியின் முன்னிலையில் வந்துட்கார்ந்தார். இளவரசி, அவரைக் கூர்க்கப்பார்த்தாள். தன் பிரிய நேசரின் சகல லக்ஷணங்களும் அவரில் சரிவரக்காணப் பட்டன. அப்போதே, அவரைக் கட்டித்தழுவி, கவலை தீரும்வரையில் அழவேண்டுமெனத் துணிந்தாள். மறுபடியும், ஒருக்கால், எந்த இராக்கதனாவது, அவருடைய உருவமெடுத்து நம்மை கெடுக்கவந்திருந்தாலுமிருக்கலாம். அப்படியானால் அது நமக்கு சஹிக்கக்கூடாத இழிவாவதுடன், நரகயாதனைக்கும் ஆளாகநேரிடுமே. இவருக்கு இந்த முகத்தைக் காட்டினாலும் அந்த முகத்தை யெவ்வாறு காட்டுகிறது. அப்படியல்லவென்று அடக்கத்தில் காட்டினாலும், அவரறிந்துக் கொண்டு நம் பேரில் அருவருப்புக்கொள்வாரே, யிதற்கென்ன செய்கிறதென்று ஆலோசித்துக்கொண்டிருந்தாள். ஹூர்முஜனுக்கு பொறுத்திருக்கக்கூடாமல் கண்ணீர் தாரைதாரையாய் வடியத்தொடுத்தது. அதைக்கண்ட இளவரசி, இவர் தான் நம்முடைய பிரியநேசரென்று நிட்சயித்துக்கொண்டு, பண்டிதசிகாமணியே! மெத்தசுகம். வியாதியைத் தீர்க்கவந்தீரா? அழவந்தீரா? பலேஷபாஷ். இப்படிப்பட்டசெய்கையை வேறே யாருடைய வீட்டிலாவது காண்பியும். நானோ ஈரற்குலை நோயால் இடைந்து அழுதவளாயிருக்கிறேன். என் வியாதியை அதிகப்படுத்தி எனக்குக் கஷ்டத்தைக் கொடுக்காதீரென்றாள். என் பிரியநேசியே, வழிப்பிரயாணத்தின் அயர்வால் என்சரீரநிறம் பேதலிப்புற்றிருப்பதாலும், நான் மாறு வேடம் பூண்டிருப்பதாலும், என்னை, நீ, ஹூர்முஜனென்றறிய

வில்லே. நான் அழுததினல் குற்றமென்னவிருக்கிறது. தலையை உடைத்துக்கொள்ளவும் பாத்திரவானயிருக்கிறேன. ஏனென்ற லோ, சஞ்சலமென்னும் அம்பு நெஞ்சைத் துளைத்துக்கொண்டு போயிருக்கிறதென்ருர். இச்சொல்லைக் கேட்டவுடனே, இள வரசி பெருமூச்செறிந்து ஹார்முஜை யிறுகத் தழுவினள். அத் தழுவுதலோடு அவளுக்குண்டாயிருந்த சந்தேக நீங்கிற்று. இது தான் சமயமென்று, ஹார்முஜூம், அவளுடைய கழுத்திற் கையைப் போட்டு நெஞ்சுடன் நெஞ்சுபடவணைத்துக் கொண்டுத் தேம்பித் தேம்பியழுதார். இடையிலிருந்த, தாதியும், ஆ, கட வுளே, இதென்ன அற்புதம்? கையிழக்கப் பெற்றதைக் காணச் செய்தீரே. இந்த துக்கத்தைப் பார்த்திருக்க என்மனஞ் சஹிக் குதில்லையே. இப்படிப்பட்ட சமையத்தில் இந்தப்படி கட்டிப் புரள்வது அழகல்லவே. ஆ, என் எஜமானியே, என் எஜமானே நீங்களிருவரும் மிகுதியாக அழுது குவித்துவிட்டீர்கள். சற்று நேரம் அழுகையை நிறுத்தி ஆரோக்கியம் பெறுங்கள். சர்வ ரக்ஷகக் கடவுளுக்குத் தலை சாய்த்து வந்தனஞ் செலுத்துங்க ளென்ருள்.

தாதி கூறியவை நியாயமேயென "ஹார்முஜூம்" இளவரசியும், அழுகையை நிறுத்தி, தத்தம் சமாச்சாரங்களைப் பேசிக்கொள்ள ஆரம்பித்தார்கள். ஹார்முஜின் சங்கதியை அறிய இளவரசி அவசரப்பட்டாள். ஹார்முஜ், தன் வரலாற் றைக் கூறி, என் பிரிய நாயகியே, எனக்குக்கிடைத்த சக்ராதிபத் தியத்தில், உன்னுடைய நினைவால் ஒருசுகத்தையும் நான் அனுப விக்கவில்லை. அதின் பேரில் எனக்கு அணுத்துணைப் பிரியமு மில்லை. இடைவழியில் பலவிதத் துன்பங்கள் என்னைச் சூழ்ந்து கொள்ளாதிருக்கும் பக்ஷத்தில் இவ்வளவு காலம் செல்லவுமாட் டாது. என் உடல்மட்டில் என்னுடனிருந்தது. உயிரை உன் னிடத்தில் விட்டிருந்தேன். உன்னைப் பிரிந்திருந்த கவலையானது என் சரீரத்தை உருக்கிக் கருக்கிப்போட்டதென்ருர்.

பின்பு, இருவரும், தத்தம்நேயர்களுக்கு நேரிட்ட துன்பங்களை நினைத்துத் தாரைதாரையாய்க் கண்ணீர் வடித்து, நினையாப் பொருட்டில் சேர்க்குவித்த கடவுளுக்குத் துதி செலுத்தினார்கள். ஹார்முஜ், இளவரசியைப் பார்த்து பெண்கள் திலகமே, நான் இவ்விடத்தில் அதிக நேரமிருப்பது கட்டளைக்கு மாற்றமாகிறது. ஆகையால் இப்போது நான் போய்விட்டு, கடவுள் நாடினால், நாளைக் காலையில் வந்து சேருகிறேனென்று சொல்லி விடை பெற்றுக்கொண்டு தன்னிருப்பிடத்துக்கு வந்துவிட்டார். ஈரான் அரசர், தாதியை வரவழைத்து, உள்ளே நடந்த சங்கதிகளைப் பற்றிக் கேட்டார். அதற்கவள் எஜமானே, இன்றைத்தினம், நம் பண்டித சிகாமணியார் இளவரசியிடத்தில் ஏதேதோ கேட்டு நாடியைப் பரீக்ஷித்து, அவிட்தப் பிரயோகஞ் செய்து போனார். அதனால் நம்மிளவரசியின் வியாதி சுகப்பட்டு வருவதாய்த்தோற்றுகிறது. தாங்கள் கவலைப்படவேண்டாம். வெகு சீக்கிரத்தில் முழுதும் சுகப்படுமென்று நம்புகிறேனென்றாள். அரசர் மிகுந்த மகிழ்ச்சியுற்று, அன்றிரா முழுதும் நித்திரை போகாமல், இளவரசியைச் சந்திக்க வேண்டுமென்கிற பேராவலுடன், காம்பரிந்த மல்லிகைப் புட்ப மெத்தைமேற படுத்துத்தன் துடையுடன் துடையைத் தேய்த்து இன்பமனுபவித்துக்கொண்டிருந்து, பொழுது விடிந்தவுடனெழுந்து, வழமைப் பிரகாரம், வைதியர் வீட்டுக்கு வந்து அவரை அழைத்துக் கொண்டு போய் அந்தப்புர வாசலில் விட்டார்.

"ஹார்முஜ்," தன் பிரிய நேசியின் அறைக்குள்ளானார். வெகுநேரம் வரையில் பிரிய வார்த்தைகளாடிக் கொண்டிருந்தார்கள். பின்பு, இளவரசி என் பிரிய நேசரே, நாம் எதுவரையில் இந்தவிடத்திலிருந்து சஞ்சலப்பட்டுக் கொண்டிருக்கிறது. கடவுளுக்காக, என் பேரிலிரங்கி, இங்கிருந்து நாம் வெளிப்படும்படியான வுபாயத்தைக் கண்டு பிடிப்பீர்களாக, என்றாள். ஹார்முஜ், பெண்ணே, அந்த விஷயத்தில் என்னை மறதியுடையவனாக நினைக்க வேண்டாம். நமக்கு இணக்கமில்லாத இந்த ஊரிலிருக்க

எனக்குப் பொருத்தமென்று நினைக்கிறாய்? எந்த விஷயத்திலும் நாம் அவசரப்படக்கூடாது. தாமசத்தின் பேரில் செய்யுங் காரியம், மெத்த ஒழுங்குடையதாயிருக்கும். படபடத்துச் செய்வது பைசாசத்தின் செய்கை. கணக்கிலடங்காத கஷ்டங்களை நீக்கி வைத்த கடவுளுக்கு, இச்சிறையிருப்பில் நின்றும் நம்மை விடுவிப்பது ஒரு கிரணமாகவு மாட்டாது. சாவகாசத்தின் பேரில் நாம் புறப்படுவோம். அதுவரையில், வியாதியுற்றவளாகவும், சுகப்பட்டு வருவதாகவும் பாவனைகாட்டி வரவேண்டும். முழுவதும் சவுக்கியமாய் விட்டதாகச் சொல்லாமலுமிருக்க வேண்டுமென்றார். இளவரசி, அவருடைய சொற்போல் நடந்துவந்தாள். ஹார்முஜ், தனனிருப்பிடத்துக்குப் போய்விட்டார்.

ஒவ்வொரு நாளும் காலையில் அரசர் வந்து, ஹார்முஜை அழைத்துத்துக்கொண்டு போய் அவரின் பிரிய நேசியிடத்தில் விடுகிற கும்பகோணத்தையராகவும், அடிக்கடி கடவுளைத் துதிக்கிறவராகவும், பண்டிதரைப் புகழ்ந்து, பண்டித சிகாமணியே, தாங்கள், என் பத்தினிக்குச் சவுக்கிய ஸ்நானம் செய்வித்த அன்றைக்கே, தங்களை நான் மஹோன்னதமான பீடத்திலிருத்துவேனென்பதை நம்புங்கள். நமக்கு நல்ல காலங் கிடைக்கிறவரையில், மருந்துச்செலவிற்காகத் தாங்கள் வருத்தப்படவேண்டியதில்லை. இரண்டிலக்ஷம்ரூபாய் வரையில் நம்முடைய பொக்கஷத்திலிருந்தெடுத்துகொள்ளுங்களென்றுசொல்கிறவராகவுமிருந்தார். அதற்கு, ஹார்முஜ், எஜமானே, எதுவரையில் பட்டத்தரசி சுகமடையவில்லையோ, அதுவரையில், தாங்கள் எனக்கு வெகுமதி கொடுப்பதும் நான ஒப்புக்கொள்ளுவதும் கூடவே கூடாது. செய்ய வேண்டிய பக்குவங்களெல்லாம் செய்தாயிற்று. இனிமேல் செய்யவேண்டியது சொற்பமே. தங்களின் கிருபையால் என்னிடத்தில் தேவையான சகல மருந்துகளும் தயாராகவேயிருக்கிறது. அதைபபற்றித் தாங்கள் கவனிக்க வேண்டியதில்லை யென்றார்.



## 20-ம் அதிகாரம்.



### ஈரான் அரசரின் தங்கை.

### ஹார்முஜ் பேரில் மோகமுற்றது.



ஈரான் அரசருக்கு, பதினேழு வயதையுடைய அழகிற் சிறந்த ஒரு தங்கையிருந்தாள். அவளின் பிரகாசமான முகத்தைக் கண்டவர்கள், விரகம்வெறி கொள்ளாது போகார்கள். நூற்பிளவுபோன்ற இடையையும், திரண்டுருண்ட தொடைகளையும், அழுத்தமான முலைகளையு முடையவள். அவளின் முலைகளுக் கிட்டிருக்கும், கச்சின்பேரில் ஒருவன் கைவைப்பானேயானால் அகால மரணமடையாதிரான். சிலசமையங்களில் அவள் வெளிமுகப்பில் வந்துட்கார்ந்து அங்குமிங்கும் பார்த்துக்கொண்டிருப்பாள். வாலிபத்தின் இறுமாப்பாலும், அழகின் மிகைப்பாலும் வாலிபர்களை மயக்கிக்கெடுப்பாள். தோட்புடைவையை யொதுக்கிக் கைகளை உயர்த்தி, தன் தனபாரத்தின் கதிப்பையும் இறுமாப்பையும், விலாவழியாய்க்காட்டி, விரகவாளை வாலிபர்களின் நெஞ்சிற் பாயச்செய்து வேடிக்கைபார்ப்பாள். மெல்லியரவைச்சல்லாப்பட்டுடுத்தி, தங்கத்தாம்பாளத்தில் கீரைவிதை தெளித்தது போல ஒன்றிரண்டு சிறுமயிர்படர்ந்த, காமராஜனின் அரண்மனைக் கபாடந்தெரியும்படி அசைந்தொசிந்து நடப்பாள். அவளுக்கிணையான சௌந்திரவதி, உலகத்திலிருப்பாளென்பது சந்தேகம். அதனாலேயே, அவளுக்கு சந்திரவதனியெனப் பெயரிடப்பட்டிருந்தது. ஒருநாள், திடுகூறாக், ஈரானரசர், ஹார்முஜைக் கூட அழைத்துக்கொண்டு கோட்டைக்குள்வந்தார். அவளுடைய கண்பார்வை ஹார்முஜ், பேரில் விழுந்தது.

விரகம் அவளுடைய நெஞ்சில் வேரூன்றி விட்டது. கைகாற்களில் உணர்வில்லாதுபோயிற்று. நாணத்தை நாசப்படுத்தினாள். அவரை எவ்விதத்தாலாவது, தன் வசப்படுத்த வேண்டுமென்று ஆலோசித்து, அங்கியை ஒதுக்கி ஆலிலைபோன்ற அடிவயிற்றை அவருக்குக்காட்டினாள். கச்சை நெகிழவிட்டுக் கனதனபாரத்தைக்காட்டினாள். கலையையொதுக்கிக் கடிதடத்தைக் காட்டினாள். முலையைப்பிடித்துக்காட்டி, மோகத்தை மூட்டினாள். எவ்வளவு கல்நெஞ்சுடையவர்களானாலும், இத்துணை சௌந்தரியத்தையுடைய ஒருவளின், காமபாணம வெளிப்படும் தானங்களைக்கண்டால் சஹித்திருக்கப் பெறுவார்களா? ஹாரூர்முஜ், அவளின் அழகையும் அடக்கத்திலிருக்கும் அவயவங்களையுங் கண்டவுடனே, அவருடைய சரீரத்தில் ஒரு விதகாங்கையுண்டாயிற்று. திடம்பொருந்திய பருவச்சரீரம் படபடப்புற்றது.

ஆனால் அவர் அதை வெளிப்படுத்தாமல் வெகு தந்திரமாக அடக்கிக்கடப்பாக விடாமல் தற்காத்துக் கொண்டார். துடித்துக் கொண்டிருந்த வுறுப்பின் துடிப்பையமர்த்தி யாதொன்றையுங் கவனிக்காதவரைப்போல நடந்துவிட்டார். அதனால், சந்திரவதனி, நாம் எய்தமன்மதபாணம் ஹாரூர்முஜின் நெஞ்சிற்பாயாது குறிதவறிப்போய் விட்டதேயெனக் கைசேதமுங் கிலேசமுமுடையவளாகி, ஏ, இருள்படிந்த என்னுருவமே, உன்கண்ணில் மண் விழ. பார்ப்போரைமயக்கிப் பரிதபிக்கச்செய்யும் அஞ்சனக்கற்களென்றுன்னைச் சொல்லக்கேட்டிருக்கிறேனே. கருமணலையும் கார்முகிலையும் பழிக்கும் சிறந்தகுழலே! நடப்பவர்களின் காற்களில் கோடிக்கணக்கான சங்கிலிகளை மாட்டி நடக்கவிடாமல் தடுத்துவிடுவையென்று நாடெங்கும் பிரஸ்தாபமாயிருக்கிறதே. உன்முகப்பிரகாசம், சூரியனைப்போல வாலிபர்களின் மனங்களைக்கரித்துவிடுமென்றும், நெஞ்சைத்துளைத்து விடுமென்றும், எப்போதும் எதிரில்நின்று ஆடிக்கொண்டிருக்குமென்றும் பலவாறு பேசிக்கொண்டிருக்கிறார்களே. அப்படியிருக்க, இப்போது இவ்விடத்தில் ஒன்றையும் காணேனே, சூரியப்பிரபை

காலும் இப்பாவியன் உன்னை யேறெடுத்துப் பார்க்கவுமில்லையே. ஆ. கடவுளே, இவ்வருத்தத்தை, யாரிடத்தில் முறையிடுவேன். என்மனப் பிணிக்குமருந்து எவ்வாறு கண்டுபிடிப்பேன், என்றுபலவாறு புலம்பத்தொடுத்தாள்.

அப்படிக்கிருக்கும்போது, அந்தப்புரப்பாது காப்பாளர்களுள் ஒருத்தி, வெளியேவந்தாள். சந்திரவதனி, தனித்துட்கார்ந்து, தலையிலடித்துக்கொண்டு பலவாறு புலம்பிக்கொண்டிருப்பதைக்கண்டு கிட்டநெருங்கிவந்து, அவளைப்பார்த்து; என்னுயிர்க்குயிரான இளவரசியே, தாங்கள் இவ்வாறு புலம்பத்துணிந்த காரணமென்னவென்று கேட்டாள். அதற்கவள், அம்மாதாயே, நான், பண்டிதசிகாமணிபேரில் காதல்கொண்டுவிட்டேன். கடவுளுக்காக, நீ; என் மனப்பிணிக்கேற்ற மருந்தைக் கொடுத்து நான் சாகாமற் காப்பாற்றுவாயாக. அவரை நான் சேர்ந்தணைகிறதே என் பிணிக்குப் பெருமருந்தாகுமென்று பெருமூச்செறிந்து கூறினாள்.

தாதியானவள், மகளே, இதென்னகாரணம்? கடவுள் பேரிற் சத்தியமாக தாங்கள் கன்னிகழியாச் சிறுமியாயிருந்தும் கொடுமையானவார்த்தையைக் கூசாதுபேசுகின்றீர்கள். தங்களின் புலப்பத்தை யாரேனுங் கேட்டறிந்தால், நம் எஜமானிடத்தில் சொல்லிவிடுவார்கள். அவர்களோ, மஹாகடினகோபத்தையுடையவர்கள். அல்லோகல்லோல மாக்கிப் போடுவார்கள். விரகவேதனையின் ஆரம்பம் விரோதத்தையே விளைவிக்கும். நானும் ஒருமுறை, யிவ்வாறுகவே, ஒரு பாவியனின் மோகத்திற் சிக்குண்டு வுழன்றலைந்தேன். ஆனல் நான் மெத்தவுசாருடனும் அச்சத்துடனும் அலுவல் நடத்தி வந்தேன். பகல் முழுதும் அந்தப்புரவேலை பார்த்து வந்தேன். நடுச்சாமத்தில், என் பிரிய நேசரை, சாடைகாட்டியழைத்து வந்து, சமையலறைக்குள்ளாக்கி என்னுடைய விரக வேதனையைக்கிஞ்சிற்று ஆற்றிவந்தேன். சூரியனின் பிரகாசமானது, முழுச் சுகத்தையும் அனுபவிக்க இடந்தந்ததில்லை. அதனல் அழுது சஞ்சலப்பட்டவளாயிருந்

தேன்ல்லாது, ஒருவரிடத்திற் பேசவுமில்லை. நானே யிருந்து புலம்பவுமில்லை யாகையால் தாங்கள மவுனமுற்றிருப்பதே மான மென்றாள். சந்திரவதனி, தாதியைப்பார்த்து, என் உயிர்க்குபி ரான பாங்கியே, கடவுள் உனக்கு, நன்மையைத் தருவாராக, நான் இவா பேரிலல்லாது மற்ற ஒருவர் பேரிலும் இச்சைப்பட வில்லை. நீ, என் பேரில் கிருபை கூர்ந்து, எந்தநேரத்திலாவது காலத்தை யெதிர் பாராமல் வைத்திய சிகாமணியை அழைத்து வந்து என்னிடத்தில் விட்டு என்னுடைய காமப் பிணியை நீக் கச் செய்வாயாக. அவர் மூன்று துளித் திராவகம், எனக்குக் கொடுப்பாரேயானால் நான் தற்போது கொண்டிருக்கும் பிணி, தானே அகலத் தடையிராதென்றாள். தாதி சிரித்துககொண்டு மகளே, இதென்ன வேடிக்கை? தாங்கள் நாடியபடிக்கெல்லாம் நடந்துபோகுமென்று நினைக்கிறீர்கள்? என்னுடைய கபட வா ர்த்தைகளால் மயங்கி, கைகாட்ட முன்னரே காற்றாய்ப் பறந்து வந்துக்கொண்டிருந்தவர்களில் எத்தனையோ பேர்கள்பேரில் தா ங்கள் இச்சை கொண்டீர்கள். யாரையாவது பெற்றுக் கொண் டீர்களா? தற்போது, தாங்கள் இச்சித்திருக்கும் பண்டிதசிகாம ணியோ, பெண்களிருக்கும் வீட்டிற்கூட இருக்கப் பொருந்தாத பரிசுத்தமுடையவரென்று கேள்விப்பட்டிருக்கிறோம். நம்மு டைய அரசர், அவர் வீட்டுக்குச் சென்று அவரை யழைத்துக் கொண்டு, தங்கள் நாத்தியாகப் போகிற இளவரசிக்குப் பரிகா ரஞ் செய்வதற்காகக் கூடவே போகின்றார்கள். அவர் பேரில் தாங்கள் ஆசை வைத்திருப்பது அவலமேயன்றி, ஆகப்போகிற தொன்றுமில்லை யென்றாள்.

சந்திரவதனி, சஞ்சலத்துடனும், வெட்கத்துடனும், தாதி யைப் பார்த்து, தாதியே, கடவுள், நம்மை வெறுமனே விடமாட் டார். நம்முடைய நாட்டத்தை நிறைவேற்றுவிப்பார். கடவு ளுக்காக நீ, அவரிடத்திற் சென்று, தந்திரமான வார்த்தைகளால் அவரை யென் பேரில் இச்சிக்கச் செய். நான் கெட்ட விதியுடை யவளல்ல. என்னுடைய பெருமூச்சு வீண்போக மாட்டாது.

சீக்கிரம் போய் வருவாயாகவென்றாள். தாதியானவள், நல்லது நான் போகிறேன். ஆனால், தாங்கள் புலம்பாமலும், தங்களுடைய காரியத்தை வெளிப்படுத்தாமலும் மவுனமுற்றிருக்க வேண்டுமென்று வேண்டினாள். சங்கிரவதனி, அந்தப்படியே யிருக்கிறேன். நீ முழு மனசுடனும் அவரிடத்துக்குச்சென்று, அவர் என்பேரில் இச்சிக்கும்படியான வார்த்தைகளால் அவரை மயக்கி, என் மனப்பிணிக்கு, அவருடைய சந்திப்பென்னு மருந்தைக் கொடுப்பது வுன்பேரில் கடமையாயிருக்கிறதென்று கூறி விடைகொடுத் தனுப்பினாள். தாதி ஹாரூர்முஜிடத்துக்கு வந்து, வந்தனமளித்து, அவரை வாழ்த்தினாள். அவர் தலையை யசைத்து ப்பிரதி வந்தனமளித்தார். தாதி சம்மாணங் கூட்டி யுட்கார்ந்து ஹாரூர்முஜைப்பார்த்து, பண்டித சிகாமணியே, என்னுடைய எஜமானி, சங்கிரவதனியவர்களின், பிரகாசமான உடலின் சிலவுறுப்புகளில் இருந்த இருப்பிலிருந்து, எழும்பக்கூடாததிமிர்நோயுண்டாயிற்று.

கடவுளின் கிருபையால் அந்நோய், தங்களின் கையாலேயே சுகப்படக் கூடியதாயிருக்கிறது. ஆகையால் தாங்கள் அவர்களின் அழகைப் பார்த்திரங்கி, அவர்களின் பிணி தீர்க்க வேண்டுகிறேனென்று வணக்கத்துடன் கேட்டுக் கொண்டாள். அதற்கவர், தாதியே, நான் தற்போது, புதிய அரசிக்குப் பரிகாரஞ் செய்து வருவதால் எனக்கு எங்கிருந்து சாவகாசங் கிடைக்கப் போகிறது. என்றாலும் குற்றமில்லை. அவர்களுடைய வேலை முடிந்த பிறகு, மற்ற வியாதியஸ்தர்களையும் பார்த்துப் பரிகாரஞ் செய்கிறேனென்றார். தாதி, பண்டித சிகாமணியே நான் சொல்லுகிற பெண்கள் நாயகியும், சாமான்யமானவர்களல்ல. அவர்களும் இவர்களைப்போன்ற ஒரு அரசியாகவே யிருக்கின்றார்கள். தாமசப்படுத்தாமலும், கோபப்படாமலும், இருவரையும் ஒரே விதமாகப் பாவித்துப் பரிகாரஞ் செய்யவேண்டுகிறேனென்றாள். வந்துவிட்டதையா கோபம் பண்டிதருக்கு. தாதியை யுறுக்கிப் பார்த்து, எடீ, தாதி, உசாருடன்பேசு. தலைப்புழுவை வெளிப்

படுத்தாதிரு வெறுமனே பிதற்றுதே. எத்தனை இராஜாத்திகளிருந்தாலும், நான் அவர்களுக்கெல்லாம் அடிமை போன்றிருக்கிறதா? வாங்காமலுங் கொடுக்காமலும் வைத்தியஞ் செய்துக்கொண்டேயிருக்கிறதா? என்ன வேடிக்கையான பேச்சைப்பேசத்துணிந்தாயென்று கோபித்துப் பயமுறுத்தினர்.

அவளென்ன, அஞ்சுகிறவளா? இவரைப் போல் எத்தனையோ பண்டிதர்களை யெல்லாம் ஏமாற்றியிருக்கிறாள். அவள் மறுபடியும் பண்டிதரைப் பார்த்து, எஜமானே, என்னுடைய எஜமானியாகிய சந்திரவதனி யென்பவர்கள், இவ்வூர் அரசரின் சகோதரியாகவும், அழகில் தெய்வ ரம்பைக்கு மேலானவர்களாயுமிருக்கிறார்கள். அரசரின் தாக்ஷண்யத்திற்காக, அவர்களையும் தாங்கள் பார்த்துக் கிருபை புரியவேண்டும். வைத்தியர்களின் இயற்கை வியாதியை நீக்குவதாயிருக்கிறதுடன் எத்தனை பேர் வியாதியஸ்தர் வந்தாலும் அவர்களுக்கெல்லாம் பரிகாரஞ் செய்வதாயுமிருக்கும் மேற்குலமென்றும், கீழ்க்குலமென்றும் அவர்கள் பார்க்கிறதில்லை. வைத்தியர்கள், தராதரம் பார்த்துப் பரிகாரஞ்செய்ய முனைந்தால் ஒருக்காலுங் கூடாதவிஷயமென்றாள்.

ஹார்முஜ், அவளின் வார்த்தைகளால் கோபமாகி, இந்த மரியாதையற்றவளை வெளியில் தள்ளி, என் தலையில் வெறுமனே சுமரவிருக்கிற துன்பத்தை நீக்கக் கூடியவர்கள் ஒருவருமில்லையா? என்று உரத்துக் கூவினர். அதைக்கண்ட தாதியானவள் தட்டழிந்து, அவர் கிட்ட நெருங்கி, இரகசியமாக, பண்டித சிகாமணியே, என் எஜமானி, தங்கள் பேரில் மோகமுற்று, ஊணுறக்கமின்றி உலர்ந்துபோயிருக்கின்றார்கள். காம நோயைத் தீர்ப்பது கஷ்டமுமல்ல. கொஞ்ச நேரத்து வேலையால் குணப்பட்டுவிடும். ஆகையால், தாங்கள் என் வேண்டுதலை மறுக்காமல், கடவுளின் முகத்துக்காகத் தங்களின் சந்திப்பென்னும்மருந்தை அவர்களுக்குக் கொடுத்தருளுங்கள். கடவுள், தங்களுக்கு அநுக்ரகம்புரிவார். தாங்கள் யாரை யிச்சிக்கிறீர்களோ, அவர்களையெல்லாம் நான் வசப்படுத்தித் தருகிறேனென்று காதிடத்திற்கூறினாள்.

வைத்தியர், தாதியே நீ நல்ல வார்த்தை கூறினாய். நான் வியாதியஸ்தர்களுக்குப பரிகாரஞ் செய்ய வந்தேனே தவிர, இராஜாத்திகளைக் கல்யாணமுடிக்க வரவில்லை. பரஸ்திரீக மனத்தில் எனக்குப் பொருத்தமேயில்லை. நான் கடவுளை மெத்தப் பயப்படுகிறவன். உன் எஜமானி வேறே யாரையுந்தேடி விரக வேதனையைத் தணித்துக் கொள்ளட்டும். நானோ, வைத்தியன். அரசரின் பணிவிடையாளர்களில் ஒருவன் போன்றவன். ஆகையால், உன் எஜமானியிடத்திற்கு, நீ போய், அவர்களின் மேற்குலத்தைச் சீர்தூக்கிப் பார்த்து, அவர்களுக்குத் தகுதியான அரச குமாரர்களுடன் மல்லுக்குநிற்கப் போதித்து, ஏழையாகிய என்னைத் தொந்தரவு செய்யாமல் என் குற்றத்தை மன்னிக்கச் செய்யென்று மறுமொழி கொடுத்தார். அதனால், தாதி மனச்சோர்வுற்றுப் பெருமூச் செறிந்தவளாக எழுந்திருந்து கைசேதத்துடன் சந்திரவதனியிடத்தில் வந்து பண்டிதர் சமுகத்தில நடந்தவைகளை விவரித்துக் கூறினாள்.

சந்திரவதனி, அடிவயிற்றையும் அதற்கடுத்ததையும் பிடித்துக்கொண்டு வெகு நேரம் அழுதுக்கொண்டிருந்தாள். பொழுதடைந்ததும், தாதியைக் கூப்பிட்டு, ஹாமுஜிடத்துக்குப் போய் வரக் கட்டளையிட்டாள். அவள், அவரிடத்தில் வந்து, முழக்காலிற் படிந்து வந்தனம் புரிந்து, பண்டித சிகாமணியே, என் எஜமானி, சொல்லுகிறார்கள். என் மனம், வேறே ஒருவரையும் இச்சிக்கவில்லை. பண்டித சிகாமணி பேரிலேயே படிந்திருக்கிறது. நான் அதை முறிக்கச் சக்தி யுடையவளல்ல. பண்டித சிகாமணி, பரஸ்திரீக மனத்தை வெறுத்திருக்கிறார்கள். அது நலல காரியந்தான். பரிசுத்தவான்களின் குணம் அதுதான்.

ஆனால் அதற்கு ஒரு தந்திரஞ் செய்யலாம். எப்படியென்றாலோ, புதிய அரசிக்குச் சவுக்கியமானபிறகு, அவர்களுக்குக் கல்யாணமாகும். அப்போது தங்களுக்கு, அரசர் அனேக வெகுமதிகளைக் கொடுத்து மரியாதை செய்வார். அதைத் தாங்கள் ஒப்புக்கொள்ளாமல் என்னை மணமுடித்துத் தரக்கேட்டால்,

தாங்கள் அவருக்குச் செய்திருக்கிற பாரிபவுபகாரத்தைநினைத்துத் தடையின்றிச் சம்மதிப்பார். அப்போது நான் தங்களின் இல்லத்துணைவியாவேன். அரசர், தங்களுக்கு, மைச்சானுவார். சகல அதிகாரமும் தங்களின்கைக்கீழாகும். நாம் சந்தோஷத்துடன் சுகித்துறலாமென்று கூறிவரச்சொன்னுர்களென்று வெகு நளினமாய்க் கூறினுள். ஹுர்முஜ், அவளுடைய பிடிவாதத்தின்பேரில் வியப்புற்று, இதென்னடாபேரிழவு, கிணறுவெட்ட, பூதம் வெளிப்பட்டதுபோ லிருக்கிறதே, இதற்கென்ன செய்கிறதென்று பலவாறு யோசித்து, நாம், இவளுடைய பிரியத்துக்கிணங்காதுபோனுல் பேச்சுவளரும். குண்டுனியின் வரத்துபோக்கு அதிகமாகும், அவளுடைய நெஞ்சில் நம்முடைய காமபாணந் தைத்து வூடுருவிப்போயிருக்கின்றது. நாம் அவளுடைய கருத்தை முறித்தால் கெடுதிசம்பவிக்கும். அவளின் மனமுறிவு பரத்திலும் நம்மை வருத்தாதிராது. ஆகையால் சம்மதவாக்களிப்பதே சரியெனத் தீர்மானித்து, தாதியைப்பார்த்து, புன்சிரிப்புடன், தாதியே, நான், உன் எஜமானியவர்களைவிட மேலான அழகுடையவர்களைப் பெறுவேனென்பது துர்லபம். ஆனுல் அவர்கள், அந்தரங்கத்தை வெளியாக்காமலும், நம்முடைய காரியத்துக்கு இடையூறு சம்பவிக்காமலும் மவுனமுற்றிருக்கவேண்டும, அடிக்கடி, தூதுவருவதும் போவதும் நமக்கு அவமானத்தையுண்டாக்கும். ஆகையால் அதையும் நிறுத்தியிருக்கவேண்டுமென்றுர்.

தாதியானவள், சந்தோஷமாகி, கடவுளைத்துதித்து, ஹுர்முஜை வாழ்த்தி விடை பெற்றுக்கொண்டுபோய், சந்திரவதனியிடத்தில் சகல விஷயங்களையும் விஸ்தரித்துக்கூறினுள். அவளும், வெகுநேரம்வரையில் காதுதாழ்த்திக் கேட்டுக்கொண்டிருந்து, புன்னகையுடன் அழகிற்சிறந்த ஒரு தாதிப்பெண்ணை வரவழைத்தாள். அவளுக்கிணையான அழகுடையவள் ஒருத்தியுமில்லை. அழுத்தமான தனங்களையும், மிருதுவான அடிவயிற்றையும், உடையவள். பதிநான்கு வயது பருவத்தையுடையவள்.

அவளை, பண்டிதசிகாமணியின் பணிவிடைக்கனுப்பினள். அவ ளிடத்தில், பண்டிதசிகாமணியே, இதோ நான் அனுப்பியிருக் கிற, சௌந்திரவதியை, நாமிருவரும் சந்திக்கிறவரையில் தங் கள் சமுகத்திலேயே வைத்துக்கொள்ளுங்கள். இரவு பகலாய், அவள், என்னுடைய ஞாபகத்தைத் தங்களுக்குண்டாக்கிக்கொ ண்டிருப்பாள். தாங்களிடுகிற கட்டளைக்கு அணுத்துணையும் மீறி நடக்கமாட்டாள். தாங்கள் ஏதேனும் ஒன்றை அவளிடத் தில் பெறநாடினல் அதற்கவள் இணங்கியேயிருப்பாள். என் சிரசின்பேரி லாணையாகத்தாங்கள், இவளை அங்கீகரிக்கவேண்டு மென் றெழுதிய கடிதத்தையும் கொடுத் தனுப்பினள். அவர், வெறுமனே கிடைத்ததை யேன் வெறுக்கவேண்டுமென்று நினை த்தும், சந்திரவதனியின் தாக்ஷண்யத்தைப்பாராட்டியும், மன மோஹினியென்னும் அப்பெண்ணை ஒப்புக்கொண்டு, காட்டுமரா ண்டியரசனின் பௌத்திரியாகிய, கரிமலைவசத்தில் ஒப்புவிதார்.



## 21-ம் அதிகாரம்.

——:(*):——

### ஹாரமுஜ், குல்லைக்கடத்திச்சென்றது.

——:(:):——

"ஹாரமுஜ்" ஒவ்வொருநாளும், பரிகாரஞ்செய்யவரும் பாவனைகாட்டி தாராளமாய் அந்தப்புரத்துக்குள்வந்து போய்க் கொண்டிருந்தார். அப்படிக்கிருக்கும்போது, ஒருநாள், குல் இளவரசியைப்பார்த்து பெண்ணே, நீ, இப்போது அரசரைக் கூப்பிட்டனுப்பு. அவர்வருவார். முதல்நாள், அவருடன் பே சாது மவுனமாயிருந்துவிடு. மறுநாள் அவருடன் பரிகாசமும் இன்பமுமான வார்த்தைகளாடு. அதனால் அவர் என்பேரில் இப் போதிருக்கிற அன்பைவிட அதிக அன்புடையவராவார். அப் போது நான் ஏதேனும் ஒரு தந்திரமானவழியைக் கண்டுபிடிக்கி றேனென்றார்.

அதற்கிளவரசி, என் பிரியநேசரே, அது என்னால் ஆகாது. அந்த மூதேவியின் முகத்தை நான் பார்க்கவுமாட்டேன். அவளுடன் பேசவுமாட்டேன். தாங்களே, வேறுவிதமான தந்திரத்தால் என்னை யித்துன்பத்திலின்றும் விடுதலையாக்குங்களென்றாள். ஹார்முஜ், என் பிரியநேசியே, அருவருப்பான மலக்கூட்டுக்குள் அவசரம் நேரிட்ட காலத்தில் மனிதர்கள் நுழைவதைப் பார்க்கவில்லையா? நான் சொல்வதைக் கேளுங்கள். சொல்கிறவர் யார் என்று நிதானியுங்களென்றார்.

அதற்கிளவரசி, நல்லது, என் பிரியநேசரே, தங்களின் கட்டளைக்காக, அந்த மூதேவியுடன் பேசுகிறதென்கிற நச்சுக் குடுப்பையைக் குடிக்கத் துணிகிறேன். ஆனால், என்னுயிர் போய்விடாதிருக்க அதிகவிரைவில் என்னை அப்புறப்படுத்துவது தங்கள் பேரில் கடமையாயிருக்கட்டுமென்றாள். அவர், நல்லது அப்படியே செய்கிறேனென்று கூறிவிட்டு, வெளிப்பட்டு, ஈரான் அரசரிடத்துவந்து, எஜமானே, கடவுளின் கிருபையால், தங்களின் இராஜாத்திக்குச் சுகமாயிற்று. தாங்கள் அதைப்பரீக்ஷித்து எனக்கு விடையளித்தால் நான் போய்வருகிறேனென்றார்.

அரசர், பண்டிதரே, தாங்கள், என்பேரில் கிருபையாய்க் கூறுகிறீர்கள். அவள் என்னைத் திட்டுவதைத் தாங்கள் கவனிக்கவில்லை. அவளோ, என்னைப்பார்ப்பதிலும், என்னுடன் பேசுவதிலும், மஹா வெறுப்புடையவளாயிருப்பதால் என்னைக்கண்ட காலத்தில் அவளுடைய நோய் மாறியும் உண்டாய்விடுமென்பதில் எனக்கு ஆசங்கையும் அச்சமும் உண்டாயிருக்கிறதென்றார்.

பண்டிதர், தலையை அசைத்துக்கொண்டு, எஜமானே, என்னுடைய மருந்தின் வலுவைப் பரிஷ்காரமாய் அறிந்திருக்கிறீர்கள். தாங்கள் சொன்ன வார்த்தைகள், இராஜாத்தி பிணியுற்றிருக்கும் போதுண்டானவைகள். அப்போது தான் தங்களை வெறுத்திருந்தார்கள். என் மருந்து வீண்போகுமா? நான் வெறும் பேர் பூண்ட வைத்தியனா? என்னுடைய மருந்

துப் புத்தகத்தைப்பார்க்க, எத்தனையோ பண்டிதர்கள் அவாவுற்றலைகின்றார்கள். ஆகையால், தாமசப்படுத்தாமல், தாதிமார்களையனுப்பி என் மருந்தின் பலனைக் கண்டறியுங்கள். இது மஹா கெட்டகாலம். கண்ணைப்பிடுங்கி முன்னால் வைத்தாலும் கண்கட்டுவித்தையென்கிற காலம். முன்னமே, இந்தப்படியென்றறிந்திருந்தால், இவ்விஷயத்தில் அறவே தலையிடமாட்டேனென்றார்.

அரசர், திடுக்குற்றுப் பதறி, பண்டித சிகாமணியே, கடவுள் பிழை பொறுப்பாராக. நான் தங்கள் பேரில் அணுத்துணையும் சந்தேகப்படவில்லை. திடுகூறாக என் வாயில் அச்சொல் வந்துவிட்டது. அதனால் தாங்கள் மனவருத்தமடைய நேரிட்டது. என் மனம் மெத்தத் தத்தளிக்கிறது. ஆகையால் என் குற்றத்தைத் தாங்கள் மன்னிக்கவேண்டுமென்றார்.

ஹாஜீமுஜ், ஈரான் அரசரைப்பார்த்து, எஜமானே, போனது போகட்டும். இன்னமும், காலதாமதப்படுத்தாமல், இராஜமஹிஷியிடத்துக்கு ஆளனுப்பி, அவர்களின் க்ஷேமத்தை யறிந்து எனக்கு விடைகொடுங்க ளென்றார். உடனே, ஒரு தாதியை அழைத்து, ஏடி, தாதி, நீ, குல்இளவரசி யிடத்திற் சென்று மிகுந்த வணக்கத்துடன் கைகட்டி நின்று, மிருதுவாக, என்னுடைய வந்தனோபசாரத்தை அவர்களுக்குக் கூறி. அவர்களின் சவுக்கியத்தைப்பற்றி நான் கேட்கச் சொன்னதாகவும், தங்களைப் பார்க்காதிருக்கிறது, எனக்குப் பாரிய கஷ்டமாயிருக்கிறபடியால் தங்களின் பிரியத்தை யெதிர்பார்க்கிறேனென்று சொன்னதாகவுங்கூறி மறுமொழி யறிந்து சீக்கிரம் வந்துசேரென்று கட்டளையிட்டனுப்பினார்.

அவள் இளவரசியிடத்தில் வந்து அரசரின் கட்டளைப்படிக்கு, செய்தியறிவித்தாள். இளவரசி, தாதியே, கடவுள் கிருபையால் நான் சுகம் பெற்றேன். அரசருக்கு என்னைப்பார்க்கப் பிரியமிருந்தால், தாதிப்பெண்களுடன் வந்து பார்த்துவிட்டுப் போகலாமென்றாள்.

தாதியானவள், சந்தோஷத்தால், புட்டத்தை யசைத்துக் கைகொட்டிக்கொண்டு, பிடரியிற் காலடிபடவோடி, அரசரிடத்தில் வந்து சந்தோஷமான சமாச்சாரம் அறிவித்தாள். உடனே அரசர், சபாமண்டபத்துக்கு வந்து, அங்குள்ள வாலிபர்களடங்கலுக்கும் கல்யாணப் பைத்தியம் பிடிக்கிறவரையில் அடிவயிற்றையும் இன்னம் ஒன்றையும் பிடித்துக்கொண்டு வெகுநேரம் கெக்கொலியிட்டுச் சிரித்தார். சற்றுநேரத்தின் பிறகு சிரிப்பை நிறுத்தி, பண்டித சிகாமணிக்கு இரண்டு கையாலும் வந்தனமளித்து, அவருடைய காலில் தன் சிரசை வைத்து வணங்கியெழுந்தார். பண்டிதர், அரசரின், சிரசைத் தூக்கி நிறுத்தி, எஜமானே, என்னவேலை செய்தீர்கள். என்னை முள்ளிற் போட்டிழுத்து விட்டீர்கள். தங்களின் பட்டத்தரசி, ஆரோக்கிய மடைந்தது, என்னுடைய வேண்டலாலு மல்ல. மருந்தாலுமல்ல. கடவுளின் கிருபையாலேயே சுகமடைந்தார்களென்றார்.

பின்பு, அரசர், பண்டிதரின் கையைப் பிடித்துக்கொண்டு, குல் இளவரசியிருக்கும் அறைக்குள் வந்து, அவளுக்கு வந்தனமளித்துட்கார்ந்தார்கள். அவள் பிரதி வந்தனமளித்துத் தலைகுனிந்து வாய்பேசா திருந்துவிட்டாள். பிரதி வந்தனமளித்ததே, அரசருக்குப் போதுமா யிருந்தது. அரசரின் புட்டம் பூரித்துவிட்டது. உடனே அவா, பண்டிதனை அங்குதானே விட்டுவிட்டு வெகு சந்தோஷத்துடன் வெளியில் வந்தார். சற்று பொறுத்துப் பண்டிதரும் வெளியே வந்தார். அரசர் பண்டிதரே; அறவே அவளுக்கு நல்லுணர்வில்லா திருந்தது. தற்போது நம்முடன் போசாதுபோனாலும், நம்முடைய வந்தனத்துக்குப் பிரதியளித்ததே, பெரிய பாக்கியம். இவ்வளவு தூரம் சுகம் பெறுவாளென்று நான் நினைக்கவேயில்லை. எல்லாம் தங்களின் கிருபையாலும், மருந்தின் வலுவாலுமே உண்டாயின வென்று வாழ்த்தினர்.

பண்டிதர், அரசர் நாயகமே; இதுதானா? முழுவதும் சுகமான பிறகு அதுவும் பேசுவாள். ஊமை வாய்திறந்தால் ஒன்

ளொன்றைப் பேச ஆரம்பிக்கு மல்லவா? இன்னம் சொற்பகா
லத்திற்குள் எவ்வளவு பிரியத்துடன் தங்களருகிற் படுத்துற
ங்கப் போகிறாளென்பதைப் பார்த்தறிவீர்க ளென்றார். அரசர்
சந்தோஷத்தால் தன்னைமறந்து, பண்டிதரின் கையைமட்டிலு
மா? கால்களையும் முத்தமிட்டுத் துதித்து, பண்டித சிகாமணி
யே, அவளின் வியாதி, முற்றாகநீங்கி, ஆரோக்கிய மடையத்த
க்க அவுட்தப்பிரயோகஞ் செய்துவிட்டால் பெரிய காரியமா
யிருப்பதுடன், தாங்களும் சிலகாலம் களையாறியிருந்து போய்
வரலாமென்றார்.

பண்டிதர் மெத்த வணக்கத்துடன், அரசருக்குச் சிரந்தா
ழ்த்தி வந்தனமளித்துவிட்டு, மருந்து ஜாப்பிதா எழுதுவதற்
காக, பென்சிலும் காகிதமும் கையிலெடுத்துக்கொண்டு மாறியும்
இளவரசியின், அறைக்குள் வந்து, என் பிரியநேசியே. அந்த
மடையன் நாளைக்கு, தனித்தவனாக உன்னிடத்துக்கு வருவான்.
நீ அவனுடன் பரிகாசமாய்ப் பேசிக்கொண்டிரு. மூன்றாம்
நாள் சிங்காரவனம் பாரக்க வேண்டுமென்று பிடிவாதமா
ய்க்கேட்டு நில்லு. அவன் என்னிடத்தில் கேட்பான். நான்
கூடாதென்று மறுத்துவிடுகிறேன். நீ, சப்தமிட்டழுது, பல
வாறு புலம்பி நில்லு. ஒருவருடைய பேச்சிலும் செவிசாய்க்கா
திரு. எந்தவிதத்திலாவது தோட்டத்துக்குப் போய்ச் சேர்ந்து
விடு. நடுச்சாமத்திற்குப் பிறகு, சகல பேர்களுக்கும் சரியான
சாராயத்தைக் குடிப்பாட்டி, அவர்கள் லாகிரிகொண்டு மயங்
கிக்கிடக்கும் சமையமறிந்து, உன் தாதியைமட்டில் கூடக் கூட்
டிக்கொண்டு என் வீட்டுக்கு வந்துவிடு, என்று போதித்து தன்
னிருப்பிடத்துக்குப் போய்விட்டார்.

“குல் இளவரசியும்” அவருடைய சொல்லுக் கிணங்கியிருந்
தாள். பொழுது புலர்ந்தவுடனே, பண்டிதர், அரசரிடத்தில்
வந்து, எஜமானே, நான் பண்டிதனானதால் தாராளமாய் உள்ளே
போக வரத்தடையில்லை யென்றாலும், பெண்சாதி புருடர்கள்
தனித்திருக்கும் அறைக்குள் வேறு பெண்பிள்ளைகள் கூடப்

போகிறது, விலக்காக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் தாங்கள் மட்டில் தனியே சென்று அவாகளுடன் நளினமாகவும் பரிகாசமாகவும்பேசி அவர்களின் மனதைப் பதப்படுத்துங்களென்றார். அதற் கரசர், பண்டிதரே, அவள் மெத்த நாகரீகமும் கடின கோபமு முடையவள். நான் தனித்துப்போனால் கடிந்து கோபிப்பாளோ, என்னவோ, என்ன செய்வேனென்றார்.

பண்டிதர், எஜமானே, நான் தங்களுக்கு மானக்குறை வுண்டாகாதிருக்க வேண்டுகிறேன். அவர்கள் ஒருக்காலும் அப்படி செய்ய மாட்டார்கள். மீறி யேதேனும் நடத்துகிறதானல் ஒரு அடிக்கு நூறு சம்மட்டியடி என்னை யடித்துக்கொள்ளுங்களென்றார். அரசர், சற்று தன் மனதைத் தேற்றிக்கொண்டுவந்து தூரத்தில் நின்று இளவரசிக்கு வந்தனமளித்து, அவள் கிட்டவந் துட்கார்ந்தார்.

குல் இளவரசி, ஈான் அரசரைப்பார்த்து, எஜமானே, நேற்று நான் தங்களுடன் சம்பாஷிக்க விருப்பமுற்றேன். தங்கள்கூட வேறொருவர் வந்திருந்தமையால் வெட்கமுற்று பேசாதிருந்துவிட்டேன் என்று கூறி, தங்களுடைய சுகக்ஷேமம் எவ்வாறிருக்கிறதென்று கேட்டாள். அதனுல் அரசர், வரம்பு கடந்த சந்தோஷமடைந்து, அவள் வீற்றிருந்த பீடத்தை மெய்முறை வலம்வந்து, பெண்மணி, கிருபைக் கடலாகிய கடவுள், தங்களுக்குச் சுகத்தைக்கொடுத்ததே, எனக்குப் பெரிய பாக்கியம். என்னுடைய சுகத்தைப்பற்றி என்னசொல்லப் போகிறேன். ஆரோக்கியமும் சந்தோஷமு முடையவனகவே யிருக்கிறேனென்றார்.

அதற்கிளவரசி, எஜமானே, கடவுள் என் வியாதியை நீக்கிச் சுகத்தைக் கொடுத்தார். ஆனல் இன்னம் கொஞ்சம் தலை மயக்க மிருக்கிறது. ஆகையால் ஏழைபேரிற் கிருபைகூர்ந்து நாளை யிந்த நேரத்துக்கெல்லாம், தாங்கள்மட்டில் தனித்துவந்தால் மெத்த வுசிதமாய்க் காணப்படுகிற தென்றாள். அரசர், மிகுந்த சந்தோஷமடைந்து, பலவிதமான எண்ணங்கொண்ட

வராகப் புன்சிரிப்புடன், இளவரசியிடத்தில் விடை வாங்கிக் கொண்டு சபாமண்டபத்திற்கு வந்து, பண்டிதரை வரவழைத்து நவரத்தினங்களைத் தங்கத் தாம்பாளங்களில் வைத்து, அவர் தலையிற் சொரிந்து, வாழ்த்திப் புகழ்ந்து, அன்றிரவு முழுதும் கடவுளை நமஸ்கரித்துக் கொண்டிருந்தார். பொழுது புலர்ந்த வுடனே, தனித்தவராக இளவரசி யிடத்துக்கு வந்தார்.

அவள், எஜமானே, கடவுள்பேரிற் சத்தியமாக நான் தங்களின் வருகையை யெதிர் பார்த்தவளாக விருந்தேன். கடவுள் எனக்கு நல்ல சமபத்தைக் கொடுத்தார். தாங்கள் வந்துவிட்டீர்கள். இந்த விடத்தில் இத்தனைகாலம் நான் வியாதியிற் படிந்து கிடந்தேன். என் சீவன், நாசிமுனையில் வந்துவிட்டது. மனம் பேதலிப்புற்றது. தற்போதோ, சிங்காரவனஞ் சுற்றிப் பார்த்து, அங்குதானே, ஆரோக்ய ஸ்நானஞ்செய்து என் மனப் பதறுதல் அடங்கிறவரையில் சிலநாள் இருந்துவா வுத்தேசிக் கிறேனென்றாள். அதற் கரசர் என் கண்குளிர்ந்த வாழ்வே, அதற்கென்ன தடையிருக்கிறது. என்றாலும் இதைப்பற்றி நம் பண்டிதரிடத்திற் கேட்டு அவருடைய சம்மதத்தை யறிந்து வந்து நாளைக்குச் சொல்லுகிறேனென்றார்.

இளவரசி, சினந்து எஜமானே, இவ்வேலை தங்களின் பிரீயத்திலுள்ளதா யிருக்கவில்லைபோலும். அவர் ஒரு பிறதேச வாசி, ஏதேனும் அவருடைய மனதில் அற்ப வருத்தம் ஏற்பட்டால் முகத்தைத் திருப்பிக்கொண்டு போய்விடுவார். அவர் எனக்கு எத்தனையோ விதமான கைப்பும் ருஷிகெட்டதுமான மருந்துகளைக் குடிப்பாட்டினார். அதின் குணத்தை, என்னாற் சொல்லமுடியாது. கடவுளும் உபகாரஞ் செய்தவர்களுக்கு நன்மையைக் கொடாது விடார், நான் பாபத்தைப் பயந்து, அவரிட்ட கட்டளைப்படி, பத்தியம் காத்துவந்தேன். தற்போது சுகம்பெற்றவளா யிருக்கிறேன். இதற்கு மேலும் கஷ்டத்தை யனுபவிக்கவும், அவரிட்ட கட்டளைக்கிணங்கி நடக்கவும், என் மனம் பொருந்தாதென்றாள்.

அரசர், வெளியில் வந்து பண்டிதரை வரவழைத்து, அவரிடத்தில் இளவரசியின் நாட்டத்தை முறையிட்டார். பண்டிதர் மஹா உக்ரகோப முடையவர்போலாகி எஜமானே, கடவுள் பேரிற் சத்தியமாக, நான் தங்களுடைய சொல்லைக் கேட்கவு மாட்டேன். இச்சமையம் அரண்மனையை விட்டு வெளிபட உத்திரவு கொடுக்கவுமாட்டேன். இதென்ன காலக்கொடுமை? என்னுடைய பிரயாசைகளை மண்ணுக்கிப் போடவா பார்க்கிறீர்கள்? கடவுள், தங்களுக்கும், எனக்கும் இனிமேலும் கஷ்ட திசையைக் காட்டாதிருப்பாராக வென்றார். அதற்கரசர், பண்டிதரே, தீரயோசித்துக்கூறுங்கள். எனக்கு இதுவொரு பெரிய சங்கடிப்பா யிருக்கிறது. நான் எவ்வளவாகத் தடுத்தாலும் அவள் கேட்கிறாளில்லை. இதற்கென்ன செய்வேன்? தாங்களாவது அவளுக்கு நற்போதனை கூறி, அவள் மனதைப் பதப்படுத்துங்கென்றார்.

பண்டிதர், எஜமானே, பெண்கள் மூன்று தலத்தில் பைசாசத்தின் பார்வையைப் பயப்படவேண்டியது முக்கியமா யிருக்கிறது. முதலாவது, ஆரம்பப்புணர்ச்சியான வுடனும், இரண்டாவது ஆரோக்யஸ்நானஞ் செய்தபிறகும். மூன்றாவது, பிரசபித்த ஐந்துநாளைக்குப் பிறகும், மெத்த ஜாகிர்தையுடனிருக்கவேண்டும். ஆகையால், கடவுள் முகத்துக்காக என்னுடைய சொல்லைக்கேட்டு நடக்கச் செய்யுங்கள். இல்லாது போனால் கஷ்டத்தை யனுபவித்துத்தான் தீரவேண்டும். எனக்கோ இதற்குமேல் இவ்விடத்திலிருக்கவும் வெறுமனே பாடுபடவும் இயலாதென்றார்.

அரசர், அந்தப்புரத்துக்குவந்து பண்டிகர் கூறியவற்றை, இளவரசிக்குக் கூறினார். அவள் தட்டழிந்த பாவனைகாட்டி அரசரைப்பார்த்து, எஜமானே, தாங்களே சீர்தூக்கிப் பாருங்கள். தங்களின் பண்டிதர், எனக்கு எத்தனையோ விதமான கைப்பு மருந்துகளைக் குடிப்பாட்டினார். எவ்வளவோ கடும்பத்

தியங்களி விருந்தக்செய்தார். அவற்றைக்குடித்தும் பக்தியங் காத்தும் வரவில்லையா? இந்த விஷயத்தில் அவருக்கென்ன பாத்கியமிருக்கிறது. என் உயிரைவெறுமனேவாங்கப்பார்க்கிறார். ஒவ்வொரு விஷயத்திலும் இவ்வாறு ஆசங்கையுறுவதானால் உலகம் எவ்வாறு நடைபெறும்? தங்கள் காரியத்தைப் பார்த்தால் விடிடிந்து தலையில் விழுந்துவிடுமென்றஞ்சி, வெட்டவெளியில் கண்ணுறங்கும் சந்தேகியைப்போன் றிருக்கிறீர்கள். கடவுள் பேரிற் சத்தியமாக, இவ்விதமான சந்தேகத்தடையை ஒருக் காலும் நான் ஒப்புக்கொள்ளமாட்டேன். அகத்தியமாக நான் சிங்காரவனத்துக்குப் போகத்தான் வேண்டும். இன்னமும் என் பேரிற் சந்தேக மிருக்கும் பக்ஷத்தில் அந்தப்புற ஸ்திரீகளெல்லாம் என்னுடன் அனுப்பிக் காவல்புரிந்து நிற்கச் செய்யுங்களென்றாள்.

அரசர், இதென்னடா பேரிழவு, இளவரசி, இம்சிக்கிறாள். பண்டிதர், பயமுறுத்துகிறார். இதற்கென்ன செய்கிறதெனப் பலவாறு யோசித்தவராக வெளியில் வந்து, பண்டித சிகாமணியே, நாம் தான் என்ன செய்யலாம். நம்மிருவரின் சொற்களையும், அவள் பொருட்படுத்தாது ஒரேபிடிவாதமாய் சிங்காரவனத்துக்குச் செல்லத்தான் வேண்டுமென்று சீறி நிற்கின்றாளென்றார். பண்டிதர், எஜமானே, பிணி நீங்கிவிட்டது. நம் பேச்சைக் கேட்கவேண்டிய அவசரமில்லைதான். நாம் சொல்ல வேண்டியதைச் சொல்லிப்போட்டோம். அவள் வீணே பிடிவாதஞ் செய்கிறாள், இச்சமையம் தாங்களும் மவுனமுற்றிருக்க வேண்டியதாகவே யிருக்கிறது. வரும் விதி இராத்தரிக்காது. என்பேரிலுள்ள கடமையும் நீங்கிவிட்டது. எவ்வாறாயினுமாகட்டும். எனக்கு விடைகொடுத் தனுப்புங்களென்றார்.

இச்சொற்களை, உள்ளுக்கிருந்த இளவரசி, செவியேற்றவுடனே. தலைவிரிகோலமாகி, பலவாறு புலம்பி யழுதுகொண்டிருந்தாள். காமபாணத்தைத்துக் குருடு பாய்ந்துபோயிருக்கிற மனக்கண்ணையுடைய ஈசான் அரசர் குல் இளவரசியின் சஞ்சல

அழுகையைக்கேட்டு சஹித்திருக்க மாட்டாதவராய், அவளைப்பார்த்து, பெண்கள் திலகமே. நீ அழவேண்டாம், உன் பிரியப்படிக்கே. சிங்காரவனத்துக்குப் போய்வரத் தடையில்லையென்று கூறிவிட்டு, சபாமண்டபத்துக்கு வந்துட்கார்ந்து, மந்திரிமார்களை வரவழைத்திருத்தி, பூங்காவனத்தை வெகு அழகான சோடனைகளால் சிங்காரப் படுத்துங்களென்று கட்டளையிட்டனுப்பினர்.

அச்சமையம் இலையுதிர்காலமானதால், விருக்ஷங்களில் இலைகளில்லாதிருந்தன. பச்சை மரகதத்தால் இலைகள் செய்து மரங்களைப் பசுமையும் அடர்த்தியு மாக்கினர்கள். வச்சிரக் கற்களால் சண்பக மலர்கள் செய்து வைத்தார்கள். நீலக் கற்களால் நீலோற்பல புட்பங்களமைத்து நிறுத்தினர்கள். செம் மாணிக்கத்தால் குங்கும மலர்க்கள் செய்து குவித்தார்கள். அம்பர், கஸ்தூரி, முதலிய வாசனைத் திரவியங்களால் அப்புட்பங்களைப் பரிமளிக்கச் செய்தார்கள். பச்சை மரகதத்தாலும் கோமேதகத்தாலும், புட்பராகத்தாலும், செம்மரகதத்தாலும், அச்சிங்காரவனத்துக்குத் தளவரிசை யிட்டார்கள் அவ்வனத்தின் மண்டபங்களுக்கெல்லாம், சரிகைவேலைசெய்த விலையுயர்ந்த விரிப்புக்கள் விரித்தார்கள். அவ்விரிப்புகளின் மீது, நவரத்தினங்கள் பதித்த, பசும்பொன் சோபாக்கள், நாற்காலிகள், ஆடு நாற்காலிகள், சுற்று நாற்காலிகள், சாய்மான நாற்காலிகள், மேசைகள், முதலியன வைத்தார்கள். சுவர்களில் விதவிதமான வஜ்ரக்கற்களமைத்த நிலைக்கண்ணாடிகள், படங்கள், வால்சேட்டுகள், மாட்டினர்கள். பச்சை மரகதத்தாலும் நீலத்தாலும், கோமேதகத்தாலும் மேற்கலசங்களிட்ட, விதவிதமான விளக்குகளைத் தூக்கினர்கள். வாசற்படிகளில் நவரத்னமாலைகளாற் செய்த படங்குகள் கட்டினர்கள். இரத்தினக் கற்களாற் செய்த கணக்கிலடங்காத புட்பச்செடிகளை நாற்பாலும் மலிய நிறுத்தினாகள். வச்சிரத்தால் மதிலும் தளவரிசையும் இடப்பட்ட, தண்ணீர்த்தடாகங்களில், பனிநீரிலும் தெளி

வான பன்னீரைத் தண்ணீராக நிரப்பி ஆச்சரியப்படத் தக்சவி தமாய் சிங்காரித்து முடித்தார்கள்.

பின்பு, சுரான் அரசர், தன் அந்தப்புர ஸ்திரீகளடங்கலை யும் இளவரசிக்குத் துணையாக்கி, ஒரு நிமைப்பொழுதேனும் இளவரசியைப் பிரிந்திருக்கக் கூடாதென்று வெகுவாகப் போ தித்தனுப்பினர். இளவரசி முதலியவர்கள் வெகு சிங்காரத்து டன் சிங்காரவனத்தில் வந்து சேர்ந்தார்கள். ஆரோக்கிய ஸ்நா னத்தின் அமளிதுமளியை அளவறுத்துக் கூறமுடியாது. கை தைமலர்த்திராவகத்தால் சுவர்களைக் கழுவி, அகர், சந்தனம், அமபர், கஸ்தூரி, முதலிய வாசனைப்புகை யூட்டப்பட்டிருந்தது. பதினைந்து, பதினறுவயதுப் பருவப்பெண்கள், விலையுயர்ந்த மெல்லிய வெள்ளை சல்லாப்பட்டுடுத்தி, புன்னகை நகைத்தவ ர்களாக, குல் இளவரசியின் சமுகத்தில் வந்து நின்று, மிருது வான தங்களின் கைகளால் குல் இளவரசியின் பிரகாசமான சரீரத்தைத் தேய்த்துக் குளிப்பாட்டினர்கள்.

தேவர்களும், இராக்கதர்களும், அவளுடைய சரீரத்தின் பிரகாசத்தால் தியக்கமுற் றிருந்தார்கள். அவளுடலிற் பட்டு பூமியில்தெறித்த நீர்த்திவலைகளாலேயே, இரத்தினக்கற்களுக்கு நிறமும், பிரகாசமும் கொடுக்கப்பட்டது அவளின் கேசபார த்தின் பரிமளத்தாலேயே, அம்பர். கஸ்தூரி, முதலிய பரிமள த்தினுசுக ளுண்டாக்கப்பட்டனவென்றால், அவள் ஸ்நானஞ்செ ய்த தடாகத்தின் நன்னீரை வியந்து கூறவும் வேண்டுமோ? அவள் ஸ்நானஞ்செய்து தீர்ந்தபிறகு, மற்றப்பெண்க ளடங்க லும் அத்தடாகத்தி லிறங்கிக் குளித்து, அளவிலா ஆனந்தமுற்று ஆடினர்கள். பாடினர்கள். ஆ, ஆ, நமது சரீரத்தின் திவ்வி யவாசனையை முகருவாரில்லையே. நாமே நம்மை முகந்துகொள் வோமென்றால், கைகளைத தாராளமாகவும், தனங்களைத் தந் திரமாகவும், முத்தமிட்டுக்கொள்ளலாம். எட்டாத தானம் இர ண்டொன் றிருக்கிறதற் கென்னசெய்வோமென வாய்விட்டல றினர்கள். இடையிலிருந்து வேடிக்கைப் பார்த்துக்கொண்டி

ருந்த மற்ற மடந்தையர்களும், சந்தோஷசாகரத்தி லாழ்ந்த வர்களாகவே யிருந்தார்கள்.

ஸ்நானம் முடிந்த பிறகு அன்று பகலை வெகு சந்தோஷத்துடன் கழித்தார்கள். இராவானவுடனே, பலவிதத் தீபங்களால் அச்சிங்காரவனத்தையும் மாளிகைகளையும் பிரகாசிக்கச்செய்து சங்கீதகச்சேரி கூடினார்கள். அர்த்தசாமம்வரையில் வெகு வுல்லாசமாகவும், இனிமையாகவும் நாட்டியப்பெண்கள் பாடியாடினார்கள். சில பெண்கள, விலையுயர்ந்த முறுகக் காய்ச்சிய திவ்யமான சாராயத்தை வார்த்து வார்த்து, அங்குள்ள யாவருக்குங் குடிப்பாட்டிக்கொண்டிருந்தார்கள். இளவரசியும் அப்பெண்களுக் குதவியாக விருந்தாளேயன்றி, தான் ஒருதுளி சாராயமேனுங் குடிக்கவில்லை. தாதியும், துணையாக வுபசரணை செய்துகொண்டிருந்தாள். சாராயத்தின் லாகிரியும், நித்திரையின் மிகைப்பும் கடப்பாகிவிட்டதாலும், பிரியநேசர்களின் நற்கிரஹம் உதயஞ்செய்துவிட்டபடியாலும், அச்சபையிலுள்ள யாவரும் உணர்வற்ற வுறக்கத்திலாய்விட்டார்கள். குல் இளவரசியோ, வெள்ளைத்துப்பட்டி போர்த்துக்கொண்டு, தன் நகைவகை யாவற்றையும் கட்டிலையும் தாதியின் தலையிற்சுமத்தி, கூட அழைத்துக்கொண்டு, சாவகாசத்துடன் நடந்து, ஹூர்முஜிருக்கும் மாளிகையில் வந்துசேர்ந்தாள். அவர் வெகு தந்திரமாக அவளை ஒரு அறையில் ஒளித்து, வைத்தார்.



## 22–ம் அதிகாரம்.

### அந்தப்புர ஸ்திரீகள், அரசியைக் காணுது அழத்தொடுத்தது.



குல் இளவரசியை, ஹூர்முஜ் அரசர், அறைக்குள் வைத்து கதவைப் பூட்டிக்கொண்டு வெளியில் வந்து, மங்கலவாக்கி யென்பவரை யழைத்து, சூருவளிக்காற்றைப்போலும் மின்ன

லேப்போதும், விரைந்து செல்லக்கூடிய ஏழு புரவிகளைக் கல்லணை யிக்கித் தயார்ப்படுத்துமென்று கட்டளையிட்டார். அவர் கண்மூடித் திறக்குமுன காததூரம் பறந்துசெல்லக்கூடிய ஏழு குதிரைகளைத் தயாரப்படுத்தினர்.

(இங்கே, இவர்கள் இவ்வாறிருக்கட்டும். சிங்காரவனத்தில் என்ன நடக்கிறதென்பதைப் பார்ப்போம்.)

சாராயமயக்கஞ் சற்றுதெளிந்ததும், சிலபெண்கள் நித்திரை விட்டெழுந்தார்கள். இளவரசியுந்தாதியும் அவள் படுத்திருந்த கட்டிலுமில்லாததால் அப்பெண்கள் தட்டழிந்து கண்களைக் கசக்கிக்கசக்கி அங்குமிங்கும் பார்த்தார்கள். சிலர், விருக்ஷங்களுக் கிடையிலிருக்கப் போதுமென்று, இலைகளை நீக்கிநீக்கிப் பார்த்தார்கள். சிலர், எங்கும் ஓடியோடித் தேடினர்கள். ஒருவிதமான அடையாளமுங் கிடைக்கப் பெருமையால் மாரடித்துக்கொண் டழுதார்கள். ஈரான் அரசரின் சுயபெந்துக்களாகிய பெண்களெல்லாம், தலைவிரிகோலமாகி முகங்களிலடித்துக்கொண்டழுதார்கள். அடிமைப்பெண்க ளடங்கலும் கூக்குரலிட்டுக் கதறினர்கள். சிலர், புழுதியிற்புரண்டு கொண்டிருந்தார்கள். சிலர், ஆ, காலக்கொடுமையே; நீ, என்னசெய்துவிட்டாயென்றிரைந்தார்கள். சிலர், சறறுமுன்னர்தானே சந்தோஷத்துடனிருந்தோம். இப்போது நாம் இழவுகொண்டாட நேர்ந்ததே யென்றார்கள். சிலர், அரசருக்கெதிரே. என்ன சொல்லுவோமென் றேங்கினர்கள். சிலர், சிவந்தமுகத்துடன் இங்கு வந்தோமே மஞ்சணித்த முகத்துடன் மன்னருக்கெதிரிலுறுவதற்கு லபித்த இக்கொடுமைக்கு நாம் எனனசெய்கிறதென மயங்கினர்கள்.

அப்படிக்கிருக்கும்போது, ஒருத்தி அரசரிடத்து வந்து செய்தியறிவித்தாள். அவர் தட்டழிந்து காரணங்கேட்டார். அவள், மறுமொழி கொடுக்கவே அரசர் தன் முகத்திலறைந்துகொண்டு வெகு நேரம்வரையில் சித்திரப் பிரதிமைபோல் ஸ்மரணையிழந்திருந்தார். பிறகு, உணர்வுற்றெழுந்து வரத்த சப்த

மிட்டு, ஜனங்களே; நான் உயிருடன் செத்த, பிணம்போலா னேன். என்னுடைய துர்கிரஹமாக்கும் என்னை இவ்வாருக் கிவிட்டது. நான் எங்குசென்று தேடுவேன். யாரிடத்தில் முறையிட்டுத்துலைப்பேன்? எவ்வளவு கஷ்டப்பட்டு எடுத்து வந்தேன். எவ்வளவு சீக்கிரத்தில் இழக்கக் கொடுத்தேன். அவளுக்கு, நான் சிங்காரவனத்துக்குப்போக வுத்தரவுகொடுத் ததே, என்னைத் துக்கக்கடலில் முக்குளிபிடச் செய்துவிட்டது. இனிமேல் நான் சீவித்திருப்பேனென்பது நிட்சயமில்லை. அவ ளை பிழந்ததே, யென் உயிரைபிழக்கக் காரணமாயிற்று. பண்டி தசிகாமணியின் உபதேசத்தைக் கவனிக்காததினு லல்லவா? கெட்டவிதியென்னுங் கையால் குட்டுப்பட நேர்ந்தது. ஆ, ஜனங்களே, இப்பவேயென்னை, சீவனுடன் புதைத்துவிடுங்கள் என்று பலவாறு பிதற்றிக்கொண்டும் அழுதுக்கொண்டுமிருந்தார்.

அப்படிக்கிருக்கும்போது, பண்டிதசிகாமணிவேடம் பூண்ட ஹூர்முஜ் அரசர் வந்து எஜமானே, என் தாங்கள் இவ்வாரு னீர்கள். தங்களின் துஷ்டகிரகம் சிங்காரவனத்தில் ஏதேனும் கெடுதிசெய்துவிட்டதோ? வென்று, கேட்டார். அரசர் முக த்தைத் திருப்கிக்கொண்டு, பண்டிதரே, நான் என்ன சொல்ல ப்போகிறேன. என் நெஞ்சை புண்ணாக்கிவிட்டு, எங்கேயோ இளவரசி போய்விட்டாள். தங்கள் சொல்லைக்கேட் டிருந்தால் இவ்வாறன துன்பத்தை யனுபவிக்கமாட்டேன். வீருதாவாக என்னுயிரைப் போக்கடித்துக் கொள்ளவுமாட்டேன். என்மட த்தனமே என்னை மண்ணாக்கி போட்டதென்றார்.

அவருடைய துக்கத்தைக் கண்ட பண்டிதர், உண்மையா கச் செய்பவரைப்போன்று, தன் தலைப்பாகையைக் கழட்டி பூ மியிலடித்து, அரசரின் கழுத்தைக் கட்டிக்கொண்டு அழுத அழுகையையும், புலப்பத்தையும் இம்மட்டென்று கூற யாவ ராலு மியலாது. பின்பு, கைசேதமே. கைசேதமே; என்னு டைய பிரயாசையெல்லாம் மண்ணாய்விட்டதே, இகத்திலும் பரத்திலும் இன்பமற்றவனுனேனே. இப்படிப்பட்ட சஞ்சல

த்துடன் பூலோகத்தில் உச்சிவித்திருப்பதும், இல்லாதிருப்பதும் ஒன்றுபோலத்தானிருக்கிறது. ஆ, என் எஜமானாகிய அரசர் நாயகமே; இப்படிப்பட்ட காலத்தைப்பற்றிய அச்சம் எனக்கதிகமாயிருந்தகினாலேயே, சிங்காரவனப்போதலைத்தடுத்தேன். எந்த ராக்கதனோ பதுங்கியிருந்து சமையம்பார்த்து வநது பாய்ந்து அவளைத் தூக்கிக்கொண்டு போய்விட்டான். என்று ஓலமிட்டுக்கூறினார். அதற்கரசர், ஆம், ஆம். பண்டிதசிகாமணியே; சந்தேகமின்றி, இக்காரியம் இராக்கதனுடைய செய்கையாகவே தெரிகிறது. அவள் உட்கார்ந்திருந்த கட்டிலும்கூடக் காணாமற் போயிருக்கிறது. இதற்கு நான் என்ன செய்வேன்? அந்த ராக்கதன் அவளை ஆரோக்கியத்துடன் வைத்திருப்பானோ அவதிப்படுத்துவானோ, அறிகிலனே யென்றழுதார்.

பண்டிதர், எஜமானே, அந்த ராக்கதன் அவளை யிச்சித்துத் தூக்கிக்கொண்டு போயிருப்பதால், கஷ்டப்படுத்துவானென்பதை நாம் கவனிக்கவேண்டிய தில்லையென்றார். அரசர், குய்யோ முறையோவெனக் கூக்குரலிட்டழுது. மண்மேற் புரண்டு மயக்கமுற்றுத் தெளிந்து, பண்டிதசிகாமணியே! மாணிடப் பிறவிகளுக் கெதிரே தலை நிமிர்த்துப்பேசவும் நெருங்கி யிருக்கவும் பொருத்தப்படாத காக ரீகத்தை யுடையவள், இராக்கதனுடன் இணங்கி யிருக்கச் சம்மதிபடுவாளோ யாதோ அறிகிலனேயென்றார். பண்டிதர் எஜமானே, தாங்கள் இராக்ஷதர்களின் செய்கைகளை அறியமாட்டீர்கள் போலிருக்கிறது. எனக்கு, இவ்விஷயத்தில் சிலகாலத்துக்குமுன் கொஞ்சம் அனுபோகமுண்டு கோடிக்கணக்கான அரக்கர்களை யென் மந்திர பலத்தால் எரித்து நீறுக்கியிருக்கிறேன். அநேகர்களை, பாண்டங்களி லடைத்துப் புதைத்து வெளிவராது செய்திருக்கிறேன்.

அவ்விஷயத்தில், மாமிச பக்ஷணமுதலியன நீக்கிக் கடும்பத்தியி மிருக்கவேண்டிய தாகிறதால் இராக்கதர்களை யிம்சிப்பதை விட்டு விட்டேன்.

ஒரு பெண்ணை அவர்களெடுத்துக்கொண்டு போனால், தங்களிருப்பிடத்தில் உட்கார்த்தி, முத்தமிடுவார்கள். முதுகைத்தடவுவார்கள். முலையைப்பிடிப்பார்கள். முனையைச் சுவைப்பார்கள். அதரபானங் குடிப்பார்கள். அல்குலை முகருவார்கள், மடிமீதிருத்துவார்கள். மனோபீஷ்டத்தை நிறைவேற்றுவார்கள். அப்பெண், முரணுவாளேயானால் வம்பிப்பார்கள் கதறுவாளேயானால் கடித்துக்கொள்வார்கள். சில சமையம் உசாரிழக்கவும் செய்வார்கள். அப்போது என்ன செய்கிறார்களென்பதைக் கேட்கவேண்டியதில்லையென்று, அரசருக்கு மோகமும், கவலையும் மீறும்படிக்கான அனேக விஷயங்களை யெடுத்துக்கூறினார்.

அரசர், அவைகளைக் கேட்டவுடனே. முகத்திலடித்துக்கொண்டு இராக்கதர்களை, வாயோது நிந்தித்தார். வெகுநேரத்தின பிறகு, என் அன்பிற்குரிய பண்டிதசிகாமணியே, அவளைத் தூக்கிக்கொண்டுபோன அரக்கனும் அவனின் குடும்பமும் நாசமடையும் படிக்கான மந்திரோச்சடனஞ் செய்து, என்னையும், அவளையும், கடவுள்மேற் சத்தியமாகத், தாங்கள் காப்பாற்றவேண்டும். தங்களின் கிருபையினாலேயே, அவள் சுகம் பெற்றாள். தெய்வசங்கற்பத்தால் இடையில் இக்கவலையொன்றுவெளிபாயிருக்கிறது, இதற்கும், தாங்களே, பரிகாரஞ்செய்யவேண்டும். கொஞ்சமேனும் அசட்டையாயிருக்கக் கூடாது. தாங்கள் கட்டளையிட்டால். இதோ என்னுடைய, அரசாக்ஷி முதலிய யாவற்றையும் தங்கள் பேரா லாக்கிவிட்டு நான் சன்னியாசிவேடம்பூண்டு அவர்களுடன் சேர்ந்து போகிறேனென்றார்.

பண்டிதர், அரசர் நாயகமே, தங்களின் வேண்டலை மறுக்க, எவ்வழியுமில்லை. அவ்விஷயத்தின் கடும்பத்திய முதலானவைகளை நினைத்துக் கலக்கப்படுகிறேனேயன்றி வேறல்லவென்றார். அரசர், பண்டிதசிகாமணியே அதற்காகவேண்டிய முக்கிய விஷயமொன்றைத் தாங்கள் கூறுங்கள். எங்களால் ஆகக்கூடியதானால் தடையின்றிச் செய்துமுடிக்கிறோமென்றார். பண்டிதர், எஜமானே! நான், தனித்தவனாகவும், சாய்ந்த வெ

ற்றுமொட்டி புசித்தவனைவு மிருந்து மந்திரோச்சாடனஞ் செய்யவேண்டும். நாற்பது நாள்வரையில், என் வீட்டைச்சூழ காததூரம்வரையில் மனிதர் போக்குவரத்தே யிருக்கக்கூடாது. இதுதான் முக்கியமென்றார். அரசர், பண்டிதரே? இதுதானு பெரியகாரியம்? தாங்கள் யாதொன்றிற்கும் கவலைப்படாமல் தங்கள் வீட்டிற் போயிருந்து வேலையை நடத்துங்கள். இதோ நான் பறைசாற்றுவிக்கிறேன். ஒருவரும் நாற்பது நாள்வரையில் தங்கள் கட்டிடத்தின் எல்லையில் வரமாட்டார்கள். அதை யேறெடுத்து பார்க்கவுமாட்டார்களென்றார்.

பண்டிதர், பெருமூச்செறிந்து, அரசர் நாயகமே? கடவுள் தங்களுக்கு மேற்பதவியைத் தந்து அநியாயக்காரனாகிய அரக்கனின் செய்கைக்குத் தக்க சிக்ஷைசெய்வாராக. இளவரசி, வந்துவிட்டால், இத்துன்பமெல்லாம் பறந்தோடிவிடும், அவளைத் தங்களுடன் சேர்த்துவைததால் எனக்கென்ன வெகுமதி கொடுப்பீர்களென்று கேட்டார். அரசர். பண்டிதசிகாமணியே தங்களுக்கு நான் அடிமைச் சீட்டெழுதிக்கொடுக்கச் சம்மதித்தேனென்று சத்தியஞ் செய்துகொடுத்தார். பின்பு, பண்டிதர், விடைபெற்றுக்கொண்டு, தன் வீட்டுக்குவந்து, அரசர் சமுகத்தில் நடைபெற்ற யாவற்றையும் இளவரசிக்குச் சொல்லிக்காட்டிச் சிரித்துக்கொண்டிருந்தார். பண்டிதரின் கட்டிடத்தின் நாற்பாலும் காததூரவரையில் ஒருவரும் நடைகொள்ளக் கூடாதென்றும், மீறி நடப்பவர்கள் சிரச்சேதஞ் செய்யப்படுவார்களென்றும் பறைமுழக்கப்பட்டது.

——:(*):——

## 23-ம் அதிகாரம்.

## குல் ஹேமாபுரியடைந்தது.

——:():——

"ஹூர்முஜ்" அன்றிரவே, நடுச்சாமத்தில், குல் இளவரசியை, ஒரு குதிரையில் யேற்றினர். மற்றொன்றில், தாதியை யுட்கார்த்தினர், மூன்றாவதில், காட்டுமராண்டிப் பெண்

ணகிய, கரிமலையைவைத்தார். நான்காவதில், சந்திரவதனியின் தாதிப்பெண்ணகிய, சௌந்திரவதியை, சவாரிபாக்கினர். ஐந்தாவதில், மங்கலவாக்கியையும், ஆருவதில் நீலமுகியையும், ஏறிக்கொள்ளக் கட்டளையிட்டார். ஏழாவதில், தான ஆரோகணித்து. மூன்று வாலிபர்களும் முன்னலும், நான்கு பெண்களும் பின்னலுமாகிக் குதிரைகளை நடத்தி, பொழுதுபுலருவதற்குள் நாறுபதின்காத தூரத்தைக்கடந்துவந்து. ஒரு தலத்திலிறங்கி, கை கால் முகம் சுத்திசெய்து பசியாறி, குதிரைகளையுங் களைப்பாற்றிக்கொண்டு, அங்கிருந்து புறப்பட்டுநடந்து நான்காவதுநாள் முடிவில், ஈரான், தேச எல்லைச் சராகத்தைத் தாண்டினர்கள். அப்பால், அச்சமின்றி நடந்து, விடுதிகள்தோறுந் தங்கித்தங்கிச் சென்றார்கள். ஈரான் அரசரின், மதியீனத்தையும், தங்களின் தந்திரயுக்தியையும் பற்றிப் பேசிக்கொண்டே போனர்கள். இளவரசி, அடிக்கடி ஹூர்முஜைப் பார்த்து, என் பிரியநேசரே தாங்கள கட்டளையிட்டபடி நான் உசாருடன் நடத்திவந்ததும் சமர்த்துதானே யென்பாள். ஹூர்முஜ், பரிகாசமாக, ஆ. என் ஆசைக்கிளியே; அதிலென்ன சந்தேகமிருக்கிறது ? நானும், தாங்களும், கடவுளின் அடிமைகளாயிருப்பதால் அவர் நம்மைக் கைவிடமாட்டார். மங்கலவாக்கி, நீலமுகி, யென்னும், இவ்விருவரையும் நாம் மறக்கவே கூடாது. பார்ப்பதற்கும் கேட்பதற்கும் அருவருப்பான, இக்கரிமலைப் போன்ற பெண்ணின் கையில் நான் சிறையாக்கப்பட்டதை விட்டும் விடுதல்பெற இவ்விருவரும் செய்த யோசனையே யோசனை யென்று பலவாறு பேசிக்கொண்டு நடந்து, கடைசியில், மிருகசஞ்சாரமும், மனிதர் வாடையுமில்லாத விசாலமும் பயங்கரமுமான ஒரு வனத்தில் வந்துசேர்ந்தார்கள்.

குல் இளவரசி, அவ்வனத்தைப்பற்றி மெத்தப்பயந்து ஆ, கடவுளே ? என்மனம் நடுங்குகிறதே யென்று புலம்பிக்கொண்டிருந்தாள். அப்படிக்கிருக்கும்போது, அவ்வனத்தின் ஒருபக்கத்திலிருந்து, பதினைந்து பதினறு, குதிரைவீரர்கள் புனம்மை

றி வருவதைக் கண்டார்கள். ஹூர்முஜ், நீலமுகியைப் பார்த்து சிநேகிதரே அதோ வருகிறவர்கள் யாவரென்பதை அறிய விரும்புகிறேனென்றார். அதற்கவர், எஜமானே தாங்கள் அவர்களைப்பற்றிக் கவனிக்கவேண்டியதில்லை. நம்மை, எதுக்காக அவர்கள் தொந்தரிக்கப்போகிறார்கள். தாங்கள் முன்னேறி நடங்களென்றார். ஹூர்முஜ், முதலானவர்கள். முன்னேறிச்சென்றார்கள். அக்குதிரைவீரர்கள் வெளிப்பட்டுவந்து, இப்பதினுறுபேர்களுடன், சேர்ந்துகொண்டு வழிமறித்துநின்றார்கள்.

“ஹூர்முஜ்” அச்சனங்களை, கள்ளர்களென்றும், அக்கோட்டை அவர்களிருக்கும் தானமென்றும், அவர்களுடன் சண்டை செய்யாதுபோனால் நமக்கு வழிகிடைக்கமாட்டாதென்றும நினைத்து, பெண்பிள்ளைகளைப் பின்னாலாக்கி, தானும், மங்கலவாக்கியும், நீலமுகியும் முன்னாலாகி, வில்லைக்கையிலெடுத்து நாணேற்றி யெய்தார்கள். அப்பாணங்கள், கள்ளர்களின் நெஞ்சைத் துளைத்துக்கொண்டு பிறபுறம் வெளிப்பட்டுப்போயின. இருபதுபேர்கள், பிணமாய்ப் பூமியில்விழுந்தார்கள். அப்போது வெட்டுங்கள் வெட்டுங்கள், விடாதீர்களென்ற சப்தத்துடன் அக்கோட்டைக்குள்ளிருநது பிரகாசம் பொருந்திய வாட்படைகளை யுருவிப்பிடித்த ஆயிரக்கணக்கான வீரர்கள் வெகு வீராவேசத்துடன் வெளிப்பட்டு வந்தார்கள். அதைக்கண்ட “ஹூர்முஜ்” இப்போது நாம் கடும்போர் புரியவேண்டியதா யிருக்கிறபடியால் அதோ, எதிரிலிருக்கிற மலைக்குகையில் இப்பெண்களைக் கொண்டுபோய் வைத்துவிட்டு சீக்கிரம்வாரும். கடவுளின் கிருபையால் இநத துஷ்டர்களைச் சங்கரித்து ஜெயவீரனென்னும் பேரை நிலைப்படுத்துகிறேனென்று நீலமுகிக்குச்சொன்னார்.

அவர், நான்கு பெண்களையும், மலைக்குகை யொன்றில் மறைத்து வைத்துவந்தார். போர் ஆரம்பமானது. வாட்களில் நின்று கிளம்பும் பிரகாசம், றுஸ்தமென்னும் சுத்தவீரரின் கல்லறையை அசையச்செய்தது. ஹூர்முஜ்; மஹா வேகமாய்ப்பாய்ந்தேறி, அத்துஷ்டர்களைச் சின்னாபின்னப்படுத்தி, தலைவேறு

வுடல் வேறாக அனேகரைப் பிளந்தெரிந்தார். இறந்தவர்கள் போக மற்றவர்கள், புறங்காட்டி யோடிப்போய், அக்கோட்டைக்குட்புகுந்து கபாட பந்தனஞ் செய்துக்கொண்டார்கள். பின்பு ஹாஜ்முஜ், நீலமுகி, மங்கலவாக்கி, யிருவரையுங் கூட்டிக்கொண்டு, பெண்களிருக்கும் மலைக்குகைக்குவந்தார். அங்கே இளவரசியும் சௌந்திரவதியுமில்லை. இளவரசியின் தாதிமட்டில் வெட்டுபட்டுக்கிடந்தாள். அவளைச் சூழவர, சில பிணங்கள் சிரங்கள் சிதறுண்டுகிடந்தன. அத்தலைகளில் மூளையென்பதே யில்லாதிருந்தது. அதனால் ஹாஜ்முஜ், பேராச்சரியமுற்று தன் இளவரசியைக் காணாமையால் தட்டழிந்து தரைமேல் தன் தலையை மோதிக்கொண் டழுதார். உடையைக் கிழித்தெறிந்து பைத்தியங்கொண்டவர்போல் புலம்பத் தொடுத்தார்.

மங்கலவாக்கி யென்பவர், ஹாஜ்முஜைப்பார்த்து, எஜமானே. இது, அத்துஸ்டார்களின் செய்கையேயல்லாது வேறல்ல. அவர்கள் தாம், இவர்களைக் கோறற் செய்துவிட்டு, தன் இளவரசியைக் கோட்டைக்குள் கொண்டு போயிருக்கிறார்கள். இளவரசி, யாதோர் குறைவுமின்றிக் கோட்டைக்குள்ளேயே இருப்பார்கள். அவர்கள் மஹாபதிவிரதா சிரோன்பணியானதால் ஒருவருடைய கை தன்பேரிற்படவும், தன்னருகில்வரவும் விடமாட்டார்கள். அவர்களைப்பற்றித் தாங்கள் கவலைபடவேண்டியதில்லை. இப்போது இரவாகிவிட்டது தாங்கள் முன்னேறுங்கள். கோட்டைக்குட் பிரவேசித்து, அத்துஷ்டார்களை நிர்மூலப்படுத்தி, நம இளவரசியைக் கூட்டிக்கொண்டு சந்தோஷத்துடன வெளிப்படுவோம். காலதாமதப்படுத்தாதீர்கள். நம்மாலானவரையில் செய்யவேண்டியதைச் செய்து முடிப்போமென்றார்.

ஹாஜ்முஜ், அவ்விருவரையுந் துணையாகக்கொண்டு அக்கோட்டைமதிலின் அருகில்வந்தார். மங்கலவாக்கி, யென்பவர், குதிரைகளின் கடிவாளக்கயிற்றில் ஒரு கல்லைக்கட்டிக் கோட்டைக்குள் வீசியெறிந்து, அக்கயிற்றின் தலைப்பைப் பிடித்துக்கொண்டு, ஹாஜ்முஜைப்பார்த்து, எஜமனே நான் இக்கயற்று

வழியாய்க் கோட்டைக்குள்ளாகிறேன். நம் இளவரசியவர்கள் உள்ளேயிருந்தால் கோட்டைக் கதவைத் திறந்து விடுகிறேன். தாங்கள் உள்ளேவந்து அத்துஷ்டர்களைக் கொல்லுங்கள். இளவரசி யில்லாதுபோனால் இக்கயிற்றுவழியாய் நான் வெளியேவருகிறேன். அப்பால் வேறிடங்களிற் போய்த் தேடிப்பார்ப்போமென்றார். ஹாரூன், நல்லது, மெத்த உசாருடன் போய்வாருமென்றார்.

மங்கலவாக்கி, கோட்டைக்குள்ளாகி வெறுங்காலால் நடந்து முன்னேறி, ஒரு தலத்தில் வந்துசேர்ந்தார். அங்கே, சௌந்திரவதி சாராயங்குடித்து வெறித்து, ஒரு அவலக்ஷணமான மனிதனின் மடியில் அம்மணத்தோடிருந்து, அவன் வயிற்றில் இவள் வயிற்றைத் தேய்க்கிறதும், அவன் முலைகளில் இவள் முலைகளால் தேய்க்கிறதும், அவனை யிவள் முத்தமிடுகிறதும், தன்னை முத்தமிட அவனை வேண்டுகிறதுமா யிருந்தாள். அந்த மூதேவியும், சாராயவெறி மீறியவனாகி, இவளின் உதட்டைச் சுவைக்கிறான். முத்தமிடுகிறான். இன்னும் என்னென்னவோ செய்கிறான். தலையை நிமிர்த்துச் சிரித்து நீ தான் சரியான பெண்பிள்ளை. அதோ தலைவரின் அறையிலிருக்கிற உன் எஜமானி, மஹாகெட்டவள். என் தலைவர், அவள் சமுகத்திலுட்கார்ந்து எத்தனையோ விதமான இன்பவார்த்தைகளைப் பேசுகிறார். அவள் ஒன்றிற்கும் இணங்கினாளில்லை. கோபங்கொண்டவளாகவே யிருக்கிறாள். அவளோ அழகில் தெய்வரம்பைக்கு மேலானவளாகவு மிருக்கிறாள். செம்பவளப் பிளவுக்குமேலான அவளின் அதரபானத்தைப்பருக என் தலைவர் படுகிறபாட்டை யிவ்வாறென்று சொல்லமுடியாதென்கிறான்.

அதற்கவள் அவளுக்கு இந்தவிதமான இன்பத்தை யனுபவிக்க விதியில்லையாக்கும். அதைஃயேன் நாம கவனிக்கவேண்டும். நம்முடைய வேலையை நாம் பார்க்கலாம் வாருமென்று அவனை மல்கார்த்தி இவள்மேலே யிருந்துக்கொண்டு என்னென்னவோ செய்கிறாள். இதையெல்லாம், மங்கலவாக்கி

யென்பவர் கண்ணாரக்கண்டு அவளை முளிந்து காறியுமிழ்ந்து விட்டு, இளவரசியிருக்கும் அறையை நோக்கி வந்தார். அங்கொரு கட்டிலில் எதிரில் வாள்படையை வைத்துக்கொண்டு இளவரசி உட்கார்ந்திருக்கிறாள்.

கள்ளர்த் தலைவன், வேறொரு கட்டிலில் உட்கார்ந்து அவளைப்பார்த்து, அநியாயக்காரியே என் கிட்டவந்து எனக்கொரு முத்தங் கொடுக்கமாட்டாயா? நான் எதுவரையில் உன்னைச் சேராது சஹித்திருப்பேனென்று புலம்பிக்கொண்டிருக்கிறான். இளவரசி, நெற்றியிற் புருவமேறச் சினந்து, எடா. துஷ்டா, என் கட்டிலின்மீது நீ கால் வைப்பாயேயானால் இதோ என் எதிரிலிருக்கிற வாளால் உன்னைக் குத்திக்கொல்லுவேன். அல்லது என்னை நானே குத்திக்கொள்ளுவேன். நீ. என் முகத்தைப் பார்ப்பதற்குக்கூடத் தகுதியற்றவனாயிருக்க, என்னைத் தொட வுனக்குத் தகுதியேதென்று கடினமான மறுமொழி கொடுத்துக்கொண்டிருக்கிறாள். இந்த வேடிக்கையை, மங்கலவாக்கி, ஒரு மூலையிற் பதிவிருந்து பார்த்துக் கொண்டிருந்தார்.

அத்தலைவன் வெகுநேரம் வரையிற் புலம்பிக்கொண்டிருந்து நித்திரை போய்விட்டான். இளவரசி, ஆ, கடவுளே என்மானத்தைக் காப்பீராக. நானோ துன்பத்திற் சிக்குண்டவளாயிருக்கிறேன். என்னை நினைத்துக் கலங்கிக்கொண்டிருக்கும், ஹார்முஜ், அரசரை யென்னிடத்தில் சேர்ப்பீராக என்று கடவுளை வேண்டினாள். அவளுடைய வேண்டலைக்காது தாழ்த்திக் கேட்டுக்கொண்டிருந்த, மங்கலவாக்கி. தன் கணையாழியை, இளவரசியின் கட்டிலின்மீது மெதுவாகத் தூக்கிப் போட்டார். அவள் அதைக்கண்டு. தட்டழிந்து கையிலெடுத்துப்பார்த்தாள். அது மங்கலவாக்கியுடையதென் றறிந்து சந்தோஷத்தால் துள்ளிப்பாய்ந்து, அங்குமிங்கும் பார்த்தாள். மங்கலவாக்கி, ஒரு மூலையிற்பதுங்கியிருந்து இளவரசிக்கு வந்தனமளித்தார். அவள், தன்னுணர்வற்று, ஹார்முஜ் அரசர், எங்கேயென்று கேட்டாள். அவர், கோட்டைக்குவெளி

யில் சுவரோரத்தில் நிற்கிறாரென்றார். நீர் சீக்கிரம் அவரை இங்கழைத்துவந்து என்னைச் சிறைமீட்டுக்கொண்டு போகச் சொல்லுமென்றாள். அவர், மெல்லமெல்ல நடந்து சென்று கதவைத் திறந்தார். ஹார்முஜ், முன்னமே மங்கலவாக்கியின், வரவை யெதிர்பார்த்து நின்றவரானதால் கதவு திறக்கப்பட்டவுடனே, தங்குதடையின்றி உள்ளே காலெடுத்து வைத்து சிநேகிதரே, என் பிரிய நேசியைக் கண்டீராவென்று கேட்டார். அதற்கவர், ஆம், என் எஜமானே, அவர்கள் யாதொரு குறைவுமின்றி யிருக்கிறார்கள். இப்போது விபரம் கூறக்கூடிய நேரமல்ல. தாங்கள் தைரியத்துடன் முன்னேறி, அத்துஷ்டனை வெட்டி யெறிந்து இளவரசியைச் சிறை மீட்டுங்கள், மற்ற விஷயங்களைப் பின்னாடிப் பேசிக்கொள்ளலாமென்றார்.

ஹார்முஜ், உடனே வாளையுருவிப் பிடித்துக்கொண்டு ஒரு பெருஞ் சப்தமிட்டார். அதனால் பூமியதிர்ந்தது. ஆகாயம் அசைந்தது. நித்திரையிலிருந்த யாவரும் பதறி யெழுந்தார்கள். யுத்தம் தொடங்கப்பட்டது. அனேகர் கொல்லப்பட்டார்கள். எஞ்சியவர்கள் ஏக்கம்பிடித்து ஓடியொளித்தார்கள். பயந்தோடிய துட்டர்களை, "நீலமுகியும்" மங்கலவாக்கியும் நிர்மூலப்படுத்தினார்கள். அக்கள்ளர்களில் ஒருவரேனும் தப்பிப்பிழைக்கவில்லை. இதைப் பார்த்துக்கொண்டிருந்த சௌந்திரவதி, பயந்து நடுங்கி, சட்டென்று எழுந்து புடவையையுடுத்திக்கொண்டு ஓடிவந்து வெளியில் நின்றுக்கொண்டு என் எஜமானியே, வெளியில் கலிபிலியாயிருக்கிறது. விரைந்து வந்துபாருங்களென்றாள். மங்கலவாக்கி, உக்ர கோபத்துடன் அவள் முகத்தில் இரத்தம்பாய ஓங்கி ஒரு அடி கொடுத்தார்.

ஹார்முஜ், யாதொன்றையும் கவனிக்காமல் வெகு விரைவாக, குல் இளவரசி யிருக்குமிடத்துக்கு வந்தார். இருவரும் கழுத்தைக் கட்டிக்கொண்டு வெகு நேரம்வரையில் அழுதுக் கொண்டிருந்தார்கள். பொழுது விடிந்தவுடனே அங்கிருந்து புறப்பட்டு, தாதியின் பிரேதமும், காட்டுமாண்டிப் பெண்ணின்

பிணமும் கிடக்கிறதலந்துக்குவந்து அவளிருவருக்கும் நேரிட்டகெதியை நினைத்து கைசேதமுற்றழுதார்கள். இளவரசி தாதியின் கழுத்திற கைபோட்டணைத்து முகத்துடன் முகத்தைவைதது, வெகுநேரம்வரையில் அழுதுதுவித்தாள். கடைசியில் அவ்விரு பிரேதங்களையும் குளிப்பாட்டி, குழிகெல்லி யடக்கி, செய்யவேண்டிய சடங்குகள் யாவுஞ் செய்துவிட்டு அங்கிருந்து பிரயாணமாகி, ரூமாபுரியை முன்னோக்கி நடந்தார்கள்.

ஹமுர்முஜ், இளவரசியைப்பார்த்து, என் பிரிய நேசியே, அவ்விருவரும் எவ்வாறு கொல்லப்பட்டார்களென்று கேட்டார் அதற்கிளவரசி, என பிரியநேசரே, நாங்கள நால்வரும் அம்மலைக்குகையில் உட்கார்ந் திருக்கும்போது, திடீரென்று, கள்ளர்களின் படை வந்து எங்களைச் சூழ்ந்துகொண்டது. எங்களிடத்தில் யாதொரு ஆயுதமுமில்லை. என்னுடைய அருமந் தத்தாதி, தன் கையில் காய்ந்த மரக்கொம்பொன்றை யெடுத்துப பிடித்து, ஐந்தாறுபேரை அடித்துவீழ்த்தினள். அவள்தான் என்னசெய்வாள். பெண்பிள்ளையின் வலு எம்மாத்திரம்? கடைசியில் கொல்லப்பட்டாள். காட்டு மராண்டிப்பெண்; சரியான சண்டை செய்தாள். அவள் பாய்ந்து பாய்ந்து, அச்சனங்களைப் பிடித்து தலையோடு தலைமோத விட்டுச் சாகவடித்தாள். அவர்களின் தலைகள் தெறித்து மூளைகள் சிதறின. அம்மூளைகளைத் தின்று கொண்டே சண்டை செய்துகொண்டு நின்றாள். மூளையைத் தின்றுதின்று, வயறு விம்மிப்போயிற்று. அதனால் பாய்ந்து பிடிக்கக் கூடாதவளானள் அவளையும் அத்துஷ்டர்கள் வெட்டியெறிந்துவிட்டு, என்னையும் சௌந்திரவதியையும், பிடித்துக் கொண்டு போய்விட்டார்கள். பின்னல் நடந்தவைகளை மங்கலவாக்கி சொல்வாரென்றாள்.

மங்கலவாக்கியும், அக்கோட்டைக்குள் நடந்தவைகளை சவிஸ்தாரமாகச் சொல்லிக்காட்டினர். ஹமுர்முஜனுக்கு, சௌந்திரவதியின் துற்செய்கையின்மீது மிகுந்த கோபமுண்டது. ஆனல் அதை வெளிப்படுத்தாம லடக்கிக்கொண்டு நடந்து சில நாளை

க்குப்பிறகு ரோமாபுரியின் எல்லைச் சராகத்தில் வந்து சேர்ந்தார்கள். "ஹார்முஜ்" மங்கலவாக்கியைப்பார்த்து, சினேகிதரே, நீர், ரோமாபுரிச் சக்கரவர்த்தியவர்கள் சமுகத்தடைந்து என் வருகையையும், ஆதிமுதல் அந்தம்வரையில் நமக்கு நேரிட்ட கஷ்டங்களையும் விவரித்துக்கூறும். அவர்கள் என்னை விட்டுப் பிரிந்து கவலை யடைந்தவர்களா யிருக்கிறார்கள். நான் நேரில் பேசுகிறதானால் சரிவரப் பேசிமுடிக்கவியலாது. அவர்கள், நான் வந்திருக்கிறதைக் கேட்டவுடனே சந்தோஷமடைவார்களேயன்றி, கோபித்துக்கொள்ளமாட்டார்கள். நீர், சீக்கிரம் போய்வாருமென்று கட்டளையிட்டனுப்பினார். அதுபோல் அவர், சக்கரவர்த்தியின் சமுகத்தடைந்து சங்கதியறிவித்தார்.

சக்கரவர்த்தியவர்கள், ஹார்முஜின் வரவையும் மற்றவிஷயங்களையுங் கேட்டு, சந்தோஷமடைந்து வெகு நேரம்வரையில் சிரந்தாழ்த்தி, கடவுளை வணங்கித் துதித்தெழுந்து, பட்டணமுழுவதையும் சிங்காரிக்கக் கட்டளையிட்டு ஹார்முஜை யெதிர்சென்றழைத்துவரும்படி மந்திரிமார்களுக்குக் கூறினார். அவர்கள் சென்று ஹார்முஜை அழைத்துவருகிறவரையில் பொறுத்திருக்கமாட்டாதவராய், மந்திரிமார்கள் கூடவே, தாமும் நடந்து ஏழுகாததூரத்தில் விடுதிவிட்டிறங்கி யிருக்கும், ஹார்முஜை வந்து கண்டார். ஹார்முஜும், குல் இளவரசியும் சக்கரவர்த்தியாரின் வருகையையறிந்து முன்னோக்கிவந்து வந்தனமளித்தார்கள். அவர் அவ்விருவரையும் நெஞ்சோடணைத்து ஆசிகூறி, ஆயுள் வளர்ந்தேறக் கடவுளைவேண்டி அவ்விருவரையும், தன் வாகனத்தி லேற்றிக்கொண்டு கோட்டைக்குள் வந்துசேர்ந்தார். அந்தப்புரத்திலுள்ள பெண்களிற்சிலர் யோசேப்பு வந்து சேர்ந்தாரென்றார்கள். சிலர், யோசேப்புமட்டிலுமல்ல, அழகிற் சிறந்த சலீக்காவும், கூடவந்திருக்கிறார்களென்றார்கள். சிலர், நம்முடையகாலம் இனிமேல் வெகு சிறப்பாகக் கழியுமென்றார்கள். சிலர், சந்திரனையும், சூரியனையும் ஒரேகாலத்திற் பார்க்கப்பெற்றோமென்று பாடினார்கள்.

அப்படிக்கிருக்கும்போது, ஹார்முஜும் குல் இளவரசியும் அந்தப்புரத்துள் வந்தார்கள். ஹார்முஜ் தாயாரின் பாதத்தில் விழுந்து வணங்கி யெழுந்து நின்றார். இளவரசியும் மாமியாருக்கு நமஸ்காரம் புரிந்தாள். இராஜாத்தியோ, மகனையும் மருமகளையும் தன்னிருகைகளாலணைத்து முத்தி ஆசிகூறினாள். அந்தப்புர ஸ்திரீகள் ஆலாத்தி யெடுத்தார்கள். சிலர் கண்ணேறு கழித்தார்கள். சிலர் ஹார்முஜின் காலில் விழுந்து கையை முத்தமிட்டார்கள். ஒருவருக்குப்பின் ஒருவராக, பெண்டுகள் வந்துக்கொண்டிருந்தால், குல் இளவரசி நாணமுற்றுத் தலைகுனிந்திருந்தாள்.

ஹார்முஜ், தன் தாயாரைப்பார்த்து, என் அருமைமாதாவே, இவ்விளவரசியைத் தனித்த ஒரு அறையில் வைத்து, இவளுக்கு எவ்விதமான கஷ்டமும், கவலையும் நேரிடாமல் தாங்களே பாதுகாத்து வரவேண்டுமென்று இரகசியமாய்க் கூறினார். அதற்கிராஜாத்தி, என் அருமந்தப்புத்திரரே, அவளைப்பற்றி நீர், அணுத்துணையுங் கவலைப்பட வேண்டாம். அவளோ. என்னிடத்தில், வாசனை பொருந்திய மகளாயிருக்கிறபடியினாலே, என்னாலான வரையில் அவளுக்கு எவ்விதமான குறைவும் அணுகாமல் பாதுகாத்துவர, "கடவுள்" கருணை புரிவாரென்றாள். ஹார்முஜ், தாயாரின் அருமையான வார்த்தைகளுக்குப் பிரதியாக, கடவுளைப் புகழ்ந்து துதித்து, அங்கிருந்து வெளிப்பட்டுக் கொலுக்கூடத்துக்கு வந்து, சக்கரவர்த்தி யவர்களின் கட்டளைப்படிக்கு சிம்மாசனத்தின் மீது, சிம்மராஜன் போன்று ஏறியுட்கார்ந்தார். மந்திரி, பிரதானி, தளகர்த்தர், முதலிய யாவரும், ஒருவருக்குப் பின் ஒருவராக வந்து வணங்கி ஆசிகூறினார்கள். தங்கக் காசுகளைத், தானமாக வாரியிறைத்தார்கள்.

ஹார்முஜ் சக்கரவர்த்தி, சிம்மாசனத்தில் வீற்றிருந்து சர்வாதிகாரம் நடத்திவந்தார் என்றாலும், ஈரான்தேசத்தை யழித்து நிர்மூலப்படுத்த வேண்டுமென்பதும், கூஜான் தேசத்தை மறுபடியும் உற்பத்தியாக்கி, குல் இளவரசியை அங்கனுப்பி,

கூஜான் அரசரைச் சந்தோஷப்படுத்தி, அவளை அவ்வூரிலேயே வைத்து விவாக முடித்து. மிகுந்த ஆரவாரத்துடன், ஹேமாபுரிக்குக் கொண்டுவந்து, பெற்றோர் மனங்கள் பேரின்பமடையச் செய்யவேண்டு மென்பதுமே அவருடைய கருத்துங் கவலையுமாயிருந்ததுடன், கூஜான் அரசர், எங்கிருக்கிறார். எந்த தலத்தில் பட்டணமுண்டாக்குகிறது என்னும் ஆலோசனையிலிருந்தார்.

—(*)—

## 21-ம் அதிகாரம்.

## கூஜான்தேச பரிபாலனம், சௌந்திரவதியின் சதிமானம்.

—(*)—

"ஹார்முஜ்" இராஜாதிகாரம் நடத்த ஆரம்பித்த முதலில் தச்சர், கொல்லர், கல்தச்சர், சித்திரவேலைக்காரர், முதலானவர்களையுஞ் சேர்த்துக்கொண்டு, சகல சாமான் கருவிகளுடன கூஜான்தேச எல்லையிற் சென்று, கோட்டை, கொத்தளம், வீடு, வாசல், அரண்மனை, அந்தப்புரம், கொலுக்கூடம், சபாமண்டபம், கடைவீதி. முதலான யாவற்றும், முன்னினும் எண்மடங்கதிகமாகக் கட்டுவித்து, அவைகளில் ஜனங்களைக் குடியேற்றி கூஜான் அரசரைத் தேடிப்பிடித்து சிம்மாசனத்தி லிருத்தி, இராஜநீதி நடத்தச்செய்து, கூடிய சீக்கிரத்தில் இங்குவந்து சமாசார மறிவிப்பீராகவென்று மந்திரிக்குக் கட்டளையிட்டார். அதுபோல் பிரதான மந்திரியார், சகல தளபாடங்களுடன் பிரயாணமானார்.

ஹார்முஜ், இராஜாதிகார நடத்துவதினாலும், வேட்டைக்குச்செல்வதினாலும், பெற்றோருடைய மரியாதையினாலும், கூஜான்தேசோற்பத்தி சீக்கிரத்தி லாகவேண்டு மென்கிற கவலையினாலும், குல் இளவரசியின் சந்திப்பை நிறுத்தியிருந்தார். அவளும் காலத்தை யெதிர்நோக்கியவளாகத் தனித்த அறையி லிருந்துவந்தாள். சில சமையங்களில், சௌந்திரவதியுடன், ஹார்முஜ் பேரில் தனக்கிருக்கும் பக்ஷத்தையும், தன் பேரில் அவர் பாராக்கின்றி யிருக்கின்றாரென்பதையும் பற்றிப் பேசிக்கொண்டிருப்பாள்.

அப்படிக் கிருக்கும்போது, சௌந்திரவதியானவள் நல்ல சமையத்தைக் கைவிடக்கூடாது, நம்மைக் காப்பாற்றி உணவளித்து வந்த, ஈரான் அரசருக்கு நம்முடைய நன்றியறிதலைக் கிஞ்சிற்றுக் காட்டவேண்டும். பூலோகத்தில் நன்றியுடையவளென்னும் பேர் நமக்குண்டாகும் யாருடைய காரியம் எப்படிக்கானாலும் சரியே. நம் எஜமானுடைய காரியம் நேரானாற் போதுமானது. நமக்கும் நயமிருக்கிறது. குல் இளவரசியைக் காணாதுபோனால் ஆரம்பத்தில்தான், ஹார்முஜ் கலங்குவார். பின்னால் நம்பேரிற் கிருபையாவார். அப்போது அடிமையாயிருக்கிற நான் அரசியாவேன். தேவையான விஷயத்துக்காக மனிதர்கள் எத்தனையோ விதமான தந்திரோபாயங்களைச் செய்து போடுகிறார்கள். நாம் இந்த ஒரு விஷயத்தைச் செய்ததினால் தப்பிதமாகமாட்டாதெனப் பலவாறு சிந்தித்து, அங்குள்ள ஒருவனுடன் நேசம்பாராட்டி, அவனை வசப்படுத்திக் கடிதமெழுதி அவன் கையிற் கொடுத்தனுப்பினாள்.

## கடிதம் வருமாறு.

எனக்கும், என் போல்வார்க்கும், நாயகமாகிய ஈரான் சக்கரவர்த்தியவர்கள், சமுகத்திற்கு அடிமையாகிய சௌந்திரவதியென்பாள் எழுதிக்கொள்ளும் விண்ணப்பம்.

உப்பிட்டவர்களை உள்ளமட்டில் நினைக்கவேண்டுவதுகடமை. அதனால் இவ்வடியாளாகிய நான் தங்கள் சமுகத்தில் ஒரு விண்ணப்பஞ் செய்து கொள்ளுகிறேன். தாங்கள் என் தப்பிதத்தை மன்னித்தருளவேண்டும். பண்டிதர் வேடம்பூண்டு வந்தவர் இன்னாரென்பதையும், இளவரசிக்கு நேர்ந்திருந்த நோய் இன்னதென்பதையும், அப்பண்டிதர் கொடுத்த மருந்து இன்னதென்பதையும், தங்களின் துஷ்டகிரகம் தாங்களறிந்து கொள்ளவிடாமற் செய்துவிட்டது. எஜமானே, அவரோ, ரோமாபுரிச் சக்கரவர்த்தியின் புத்திரர். அவர் பேர் "ஹார்முஜ்" குல் இளவரசியின் பிரியநேசர். மாறுவேடத்துடன் வந்து தங்களை ஏ-

மாற்றிவிட்டார். எவ்விதத்தாலாவது, இளவரசியைக் கொண்டு போக வேண்டுமென்றே ஈரானுக்குவந்து அரண்மனை கட்டினார். இளவரசியை ஆரோக்கிய ஸ்நானத்துக்குப் போக வேண்டப் போதித்தார். தாதியுடன் இளவரசியை, தன் வீட்டுக்கு வரச் செய்தார். அவ்விருவரையும், தன் மனையின் ஒரு அறைக்குள் ஒளித்து வைத்துவிட்டு, தங்களிடத்தில் வந்தார். பறையடிக்கச் செய்தார். மந்திரோச்சாடனஞ் செய்யப்போகிறதாகக் கூறி இளவரசியை அழைத்துக்கொண்டு ரோமாபுரிக்கு வந்துவிட்டார். அவள் தற்போது தனித்தவளாக ஒரு மாளிகையில் சுகத்துடனிருக்கிறாள். இதுவரையில், அவளுக்கும், ஹார்முஜுக்கும், விவாகபந்தன மாகவில்லை. ஹார்முஜ் கூஜான் தேசத்தைப் பழயவிதமாக்குவதில் பராக்காயிருக்கிறார். இளவரசி, தனித்திருந்து, கவலைப்பட்டுக்கொண்டிருக்கிறாள். நான்மட்டில் அவளுடனிருக்கிறேன். ஆகையால், தாங்கள், மஹா யூகிகளாகிய சில தூதர்கள் வசத்தில் அழகான ஒரு பிரேதப்பெட்டி செய்துகொடுத்து இங்கனுப்புங்கள். எவ்விதத் தந்திரத்தாலாவது, இளவரசியை அப்பெட்டியுள்ளாக்கி, தங்கள் சமுகத்திற் கனுப்பிவிடுகிறேன். தங்களுக்கு நேர்ந்திருக்கும் எல்லாக் கவலைகளையும் ஒரு நொடியிற் போக்கடித்துப் போடுகிறேன். இத்தேசத்தில் எனக்கு என்னவேலை யிருக்கிறது? விதியிலிருந்த படிக்குத் தங்களின் கிருபையால் இங்குவர நேர்ந்தது. இவ்விஷயத்திற்காகத்தான் என் விதி என்னை இங்கு கொண்டுவந்ததென்பதை யிப்போது தெளிவா யறிந்துகொண்டேன். கடவுள் கிருபையால் என்ன நடக்கப்போகிறதென்பதைப் பின்னாலறிந்து மகிழ்வீர்கள். ஹார்முஜ், பண்டிதர் வேடம்பூண்டு தந்திரமாய்க் கொண்டுபோன பெண்ணை, ஒரு கேவலச் சிற்றடியாள் வெகு சாமர்த்தியமாய்த் திரும்பிக்கொண்டு வந்துவிட்டாளென்பது, தங்களுக்குப் பெருமையையும், ரோமாபுரிச் சக்கரவர்த்திக்கு இழிவையும் கொடாதிராது. என் பேரில் கிருபையானதைத் தெரிவித்து விட்டேன். தங்களின் கட்டளையை யெதிர் பார்க்கிறேன், என்பதே.

தூதுவன், அக்கடிதத்தை ஈரான் அரசரிடத்தில் கொடுத்தான். அரசர் அதை வாங்கிப்பார்த்து ஹாரூர்முஜின் தந்திரத்தைப்பற்றி வியப்புற்று, வெகு நேரம் வரையில் உதட்டைச் சுவைத்துக்கொண்டும், பற்களை நீவிக்கொண்டுமிருந்து, கடைசியில், அரசாக்ஷி மண்டபத்துக்கு வந்து, மந்திரிமார்களை வரவழைத்து. என் மந்திரிமார்களே, பார்த்தீர்களா? அச்சிறுவனின் தந்திரயுக்தி எவ்வளவு புதுமையைப் புதுப்பித்து விட்டது. அவன் என்னை மடையனாக்கிப்போட்டான். நான் அவன்பேரில் அணுத்துணை சந்தேகங்கொண்டிருப்பேனேயானால், சிநேகிதனென்றும், வைத்தியனென்றும் பார்க்காமல் சாகும் பரியந்தம் அவனை சிறைச்சாலையிலடைத்து வைப்பேன். அப்போது, அவனால் குல் இளவரசியைக் கொண்டுபோக முடியாது. போனது போகட்டும். தற்போது தாமதப்படுத்தாமல் நீங்கள் பிரேதப் பெட்டியொன்று செய்து றோமாபுரிச் சக்கரவர்த்தியின் சிங்காரவனத்துக்கு அனுப்புங்கள். அவர்கள் அப்பெட்டியுள் பிரேதமிருக்கிற பாவனை காட்டிப் போகக் கட்டளையிடுங்களென்று ஆக்ஞாபித்தார். அதுபோல் மந்திரிமார்கள் பிரேதப் பெட்டியொன்று தயார்படுத்தி யனுப்பினார்கள். தூதர்கள் அதை குறித்த சிங்காரவனத்தின் வாசலில் கொண்டுவந்திறக்கினார்கள். அங்குநின்ற காவற்காரர்கள், இது யாருடைய பிரேதம், எங்கிருந்து எங்கே கொண்டுபோகிறீர்களென்று கேட்டார்கள். அவர்களில் ஒருவன், காவற்காரர்களே, இது, ஒரு பாரிய சற்குருவின் பிரேதம். இங்கிருந்து சற்றேறக்குறைய, நாற்பதின் காவதத்துலிலிருக்கிற, எங்கள் ஊரிற் கொண்டுபோய் அடக்கும்படிக்கும், இடைவழியில் பரிசுத்தமான தலங்களில் இராத்தரிக்கும்படிக்கும், அத்தலத்துக் குடையவர்களுக்கு என்னுடைய ஆசீர்வாதங் கிடைக்கட்டுமென்றும், அவர்கள் மரணத்துவாயில் எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். அதுபோல் நாங்கள் செய்து வரும்போது, திருகூறாக இன்றிரவு இத்தலத்தில்வந்து சேர்ந்தோம். இச்சிங்காரவனத்தின் வாசல் வெகு

அழகாகவும் பரிசுத்தமானதாகவும் எங்களுக்குக் காணப்பட்டது. இந்த மஹாத்துமாவின் பிரேதத்தை இரண்டோரிரவு இத்தலத்தி லிறக்கிவைத்திருக்க எங்களுக்கு நீங்கள் உத்தரவு கொடுப்பீர்களே யானால், இகபர பாக்கியங்களைத் தடையின்றிப் பெற்றுக்கொள்வீர்கள். உங்களுக்குத் தேவையான பொருளுந் தருகிறோமென்றார்கள்.

காவற்காரர்கள், பொருளென்ற வுடனே பூரிப்படைந்து, அவர்களிடத்தில் ஆயிரம் ரூபாய்களை வாங்கிக்கொண்டு ஒரே ஒரு இரவு அவ்விடத்தில் தரித்திருக்க வுத்தரவு கொடுத்தார்கள். அப்போது அவர்கள், காவற்காரர்களே, எங்கள் குரு சிரேஷ்டரின் சீஷர்கள், இவர்கள் மேரால் காணிக்கையாய்க் கொடுத்த, இனிப்புப் பண்டங்களில் கொஞ்சம எங்களிடத்திலிருக்கிறது அதில், கொஞ்சத்தை உங்களுக்குக் கொடுக்கிறோம். அதை நீங்கள் தின்று அவர்களின் தயவைப் பெற்றுக்கொள்ளுங்களென்று, லாகிரியூட்டிய திண்பண்டங்களை அக்காவற்காரர்களுக்குக் கொடுத்தார்கள். அவர்கள் சந்தோஷத்துடன் வாங்கித் தின்று தன்னுணர்வின்றி, அப்படியே படுத்துத் தூங்கிவிட்டார்கள். உடனே, தூதர்கள், பிரேதப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு சிங்காரவனத்துக்குட் பிரவேசித்து. சௌந்திரவதி யிருக்கும் மாளிகைக்குச் சமீபமான ஒரு தலத்தில் இறக்கிவைத்தார்கள். இவர்களின் வருகையை, சௌந்திரவதி யெதிர்பார்த் திருந்தவளானதால், பிரேதப்பெட்டி வந்துவிட்டதென்று நிச்சயித்துக்கொண்டு, குல் இளவரசியிடத்துக்கு விரைந்தோடிவந்து, என் எஜமானியே, இம்மாளிகையில் சிலகாலமாகத் தாங்கள் மட்டிலிருந்து மனச்சடை வடைந்திருக்கிற படியால் சிலசில சமையங்களில் இராக்கால வுலாத்தலில் தங்களுக்குப் பிரியம் வரவும் கூடுமே யென்றாள். அதற்கிளவரசி, தாதியே, வாயை மூடு இத்தலத்தில் நாம் நம்முடைய பிரியத்திற்கு யாதொன்றையும் செய்யக்கூடாது. உத்தரவன்றி ஒரு அடி யெடுத்து வைத்தாலும் நமக்கு மானக்குறைவுதா னென்பல்த

நீ யோசிக்கவில்லையோ விருக்கிறதென்று மறுமொழி கொடுக்தாள். சௌந்திரவதி, என் எஜமானியே, அது சரியான வார்த்தைதான். இந்த மாளிகையிலிருந்து வெளிப்பட்டு, வேறிடங்களுக்குப் போகிறதானால் தடையின்றித் தாங்கள் மாமியாரிடத்தில் உத்தரவு பெறவேண்டும். நம்முடைய மாளிகையைச் சூழ்ந்து நிற்கும் மரஞ்செடிகளில மலர்ந்து பரிமளித்துக்கொண்டிருக்கும் புட்பங்களின் வாடையை, இந்த நிலாக்காலத்தில் நாம் கிரகித்தால், அது நமக்கொரு ஆறுதலா யிருக்கு மென்பதை நாடிச் சொன்னேனே யல்லாது, இந்தக்காலத்தில், வேறிடங்களுக்குப் போவதற்காகத் தங்களை நான் அழைக்கவில்லையென்றாள். சௌந்திரவதி பேரில், குல் இளவரசிக்கு ஒருவிதமான சந்தேகமும் ஏற்படா திருந்ததாலும், ஹர்முஜைக் காணாமல், தியக்கமுற்றவளாயிருந்ததாலும், உடனே யெழுந்து சிங்காரவனத்துக்குப்போனாள். பிரேதப்பெட்டி கொண்டு வந்தவர்கள் மரத்தின் நிழலில் மறைந்து பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

குல் இளவரசி, உலாத்திக்கொண்டு வரும்போது, அங்கு வைக்கப்பட்டிருந்த, பிரேதப் பெட்டியைக்கண்டு, சௌந்திரவதியே, இதென்னவென்று கேட்டாள். சௌந்திரவதி, எஜமானியே, இது தோட்டக் காவற்காரர்களின் பெட்டியாயிருக்கப்போகும், கிட்ட நெருங்கிப் பார்ப்போம் வாருங்களென்றாள். இளவரசி, அப்பெட்டிக்குச் சமீபத்திற் போய் நின்றாள். சௌந்திரவதியின் கோரிக்கை நிறைவேறிற்று. அவளும் பெட்டிக்குச் சமீபத்தில் வந்து அதை கூர்க்கப்பார்த்து, அதின் மேல் மூடியைத் தூக்கினாள். தூக்கும்போதே, துலுங்கி பாஷையால் ஒளித்திருக்கும் தூதர்களை, அவள் கூப்பிட்டாள். அவர்களும் மெல்ல மெல்ல வருகிறார்கள். அதற்குள் இளவரசி, அப்பெட்டியை யுற்றுப் பார்த்தாள். சௌந்திரவதி, பின்னாலிருந்து தந்திரமாய், இளவரசியை அப்பெட்டிக்குள் தள்ளிவிட்டாள். இளவரசி, சப்தமிட்டழுதாள். தூதுவர்கள் விரைந்து வந்து, அவளின் வாயைத் துணியால் கட்டி, பெட்டியை மூடித் தூக்கி

க்கொண்டும், வேதவாக்கியங்களைக் கூறிக்கொண்டும் விரைந்து வெளிப்பட்டார்கள். அப்போது கொஞ்சம் மயக்கந் தெளிந்து எழுந்து நின்ற ஒரு காவற்காரன், அச்சனங்களைப் பார்த்து, நடுச்சாமத்தில் ஏன் பிரேதப் பெட்டியைத் தூக்கிப் போகிறீர்களென்று கேட்டான். அவர்கள், காவற்காரரே, நீங்கள் எங்களுக் கிடங்கொடுத்த நன்றியை நாங்கள் ஒருக்காலும் மறக்கமாட்டோம். இது சக்கரவர்த்தி யவர்களின் சிங்காரவனமாயிருப்பதால், யாரேனும் எங்களைக் கண்டு, அரசரிடத்தில் அறிவித்தால், எங்களுக்கும், உங்களுக்கும், ஏதேனும் கெடுதி சம்பவிக்கப் போதுமென்பதைப் பயந்து, போகிறோமென்று சொல்லிவிட்டு, வெகு விரைவாக நடந்து, பட்டணத்துக்கு வெளியே போய்விட்டார்கள், அந்த மடையனும் அவர்களின் பேச்சை உண்மையென நம்பியிருந்துவிட்டான். சௌந்திரவதி ஒன்று மறியாதவள் போல் தன்னறையிற் படுத்து நித்திரைபோனாள்.

பொழுது விடிந்ததும், வழக்கப்பிரகாரம், ஹூர்முஜின் ஏவலாட்கள், இபவரசியைப் பார்ப்பதற்கு வந்தார்கள். அவளைக் காணாமற் றியங்கி, சௌந்திரவதியிடத்தில் கேட்டார்கள். அதற்கவள் நான் இப்பதான் நித்திரைவிட் டெழுந்து வருகிறேன். எனக்கு யாதொன்றுந் தெரியாது. உங்களின் வார்த்தை என்னையுந் தட்டழியச் செய்கிறதென்று மறுமொழி கொடுத்தாள். அப்பெண்கள் பதறிப்பதறி யெங்குஞ் சுற்றிச்சுற்றிப் பார்த்தார்கள். இருந்தால்தானே கிடைப்பாள். காணக்கிடைக்காமையால் அப்பெண்கள் குய்யோ முறையோ வெனக் கூக்குரலிட்டழத் தொடுத்தார்கள். சங்கதி யெங்கும் பரந்தது. சக்கரவர்த்தியார் கேள்விப்பட்டு, எல்லாப் பெண்களுடனும் அங்கு வந்தார். அத்தலம் வெகு அமளிதுமளியாய் விட்டது. இவர்கள் இவ்வாறானால் ஹூர்முஜைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ? கிஞ்சிற் றெழுதுவோமென்றால் இறகுமுனை மழுங்கிப்போகிறது. ஆனதால சுருக்கிக் கூறுவோம் கீழேவிழுந்து புரண்டழுதார். ஆ என் பிரிய நேசியே, எங்கு போய்விடா

யென ஏங்கி யேங்கி யழுதார். மோசக்காரியாகிய, சௌந்திர வதியிடத்தில் பலவிதமாய்க் கேட்டார். அவள், அந்தரங்கத்தை யறியுஞ் சக்தி, கடவுளுக்கே யல்லாது எனக்கு யாதொன்றுந் தெரியாதென்று ஒரே சாதனையில் நின்றாள். ஹார்முஜ் தட்டழிந்து, எங்கு போய்விட்டாள். எங்கே போய்த் தேடுவோம். என்பதில் புத்தியைச் செலுத்தக் கூடாதவராகி, சாகத்துணிந்து நின்றார். இங்கே இவ்வாறிருக்க, சௌந்திரவதியை அறிந்த ஒரு விருத்தை, சிங்காரவனத்தின் வெளிவாசலுக் கெதிர்த்த ஒரு மேடையில் படுத்திருந்தாள். பிரேதப் பெட்டி வந்ததையும், போனதையும் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள், இளவரசி காணமற் போய்விட்டாளென்பதைக் கேள்விபட்டபோது பிரேதப் பெட்டிபேரில் சந்தேகமுற்று, சௌந்திரவதியைக் கேட்டாலல்லாது சங்கதி வெளியாக மாட்டாதென்று, ஹார்முஜுக்குச் சொல்லும்படிக்கு, ஒருபெண்பிள்ளையை அனுப்பினாள். அவள், ஹார்முஜிடத்தில் வந்து, பிணப்பெட்டி வந்ததையும் போனதையும், கிழவி சொன்னவைகளையுஞ் சொல்லிக் காண்பித்தாள். ஹார்முஜ், சௌந்திரவதியை, நயந்தும் பயந்தும் கேட்டார். அவள் யாதொரு பிரதியும் கொடுக்காமல் கேட்குந்தோறும் அழதழுதாள். அதனால், ஹார்முஜ், சௌந்திரவதிக்கு நிக்ஷபமாய்த் தெரிந்திருக்க மாட்டாதென்றும், அவளை வெறுமனே கஷ்டப்படுத்துவதில் பிரயோசன மில்லையென்றும், மரணத்தை யெதிர்பார்த்துக் கொண்டிருக்கும் விருத்தையின வார்த்தையை நம்பி மோசம்போகக் கூடாதென்று மிருந்துவிட்டார். இச்சமாசாரத்தை சிலர். விருத்தைக்குத் தெரியப்படுத்தினார்கள். விருத்தை, ஹார்முஜின், மடத்தனத்தைப் பற்றிப் பெருநகைப்புற்று, உடனே எழுந்து, அவரிடத்திற்கு வந்து, எஜமானே, சௌந்திரவதியைத் திரவிசாரித்தீர்களாவென்று கேட்டாள். அவர், நான் கேட்கவேண்டிய முறைமைப்படிக்கெல்லாம் கேட்டேன். அவள் தெரியாதென்றே சொல்லுகிறாளென்றார். விருத்தை, எஜமானே, இன்னமும் தாங்கள்

அவளைப் பயமுறுத்திக் கேட்டுப்பாருங்களென்றாள். ஹாருமுக் விருத்தையே, ஒன்று மறியாதவனைக் கஷ்டப்படுத்துவது ஞாய மல்லவே யென்றார். விருத்தை, சிரித்துக்கொண்டு, எஜமானே, அடிக்குமுன்னால் அலகையும் நிற்காதென்பதைத் தாங்கள் கேட்டிருப்பீர்கள். ஆகையால், அவ்விஷயத்தையும் கொஞ்சம் அனுஷ்டித்துப் பார்ப்பது வுத்தமமென்றாள். ஹாருமுஜ், விருத்தையே, அடிக்குமுன்னால் அலகை நிற்காதென்பதின் திருஷ்டாந்தமென்ன? சொல்லக்கூடுமோவென்று கேட்டார்.

விருத்தை, ஹாருமுஜைப் பார்த்து, எஜமானே, ஒரு மனிதன், ஒரு பட்டணத்தில், ஒரு சண்டித்தனமுள்ள பெண்ணைக் கல்யாணஞ் செய்திருந்தான். அவள் அவனை மிகைத்தவளாயிருந்தாள். காலையிலும், மாலையிலும், எக்காரணமுமின்றி அவனுடைய தலையில் வெறுமனே பழயசெருப்பால் நூறு நூறடி அடித்துவந்தாள். எவ்வளவாக அவன் கெஞ்சினாலுங் கதறினாலும் அவள் அடியை நிறுத்துகிறதில்லை. அடி வாங்கிவாங்கி அவன் தலையும் மொட்டையாய்விட்டது. மூளையுங் கலங்கிக் கரைந்து போயிற்று. மூளையின் பலமுள்ளவரைக்கும் அவன் அவ்வடிகளை ஒருவாறு சஹித்துவந்தான். வரவர, அவனுக்கு மபக்கமும் புலபமும் உண்டுபட்டுக்கொண்டே வந்தன. கண் பொட்டையாகச் சமீபித்தது. அதனால் அவன், இன்னமும் நாம் இவள் கையால் செருப்படி வாங்கிக்கொண்டிருந்தால் தடையின்றி யிறந்துபோவோம். நம்பேர் செருப்படியால் செத்தவனென்று எக்காலமும் எல்லார் நாவிலும் நடைபெற்றுக் கொண்டிருக்கும். அதற்கு நாம் இடம் வைக்காமல் இத்துஷ்ட மூதேவியின் முகத்தில் கரியைப் பூசவேண்டும். இப்படிப்பட்ட துஷ்டாத்துமாவின் முகத்தில் முழிக்காமல் தூரதேசங்களிற் போயிருந்துவிடுவதே உத்தமம். என்று பலவாறு ஆலோசித்துக் கொண்டிருந்தான். பொழுதடைந்து இரவாயிற்று. அச்சவையத்தின் அடியையும் பெற்றுக்கொண்டான். அர்த்தராத்திரியில் அத்தலத்தைவிட்டுப் புறப்பட்டுப் போய்விட்டான்.

பொழுது புலர்ந்தவுடனே, வழக்கப்பிரகாரம் அப்பெண் செருப்பை யெடுத்துக்கொண்டு வந்து புருஷனைப்பார்த்தாள். ஐயர் தான் கம்பிகாட்டிவிட்டாரே. எங்கிருந்து அகப்படப்போகிறார். எங்குந் தேடி வேசாறிப் போனாள். கடைசியில் அங்கிருந்த ஒரு மரத்தின் பேரில் பாய்ந்து பாய்ந்து நூறடியடித்துவிட்டுப் போய்விட்டாள். மாலையில் வழமைப்பிரகாரம் கை பரபரத்தது. உடனே செருப்பை யெடுத்துக்கொண்டு வந்து அந்த மரத்தின் மீது நூறடி யடித்துப் போனாள். இவ்வாறாகச் சில நாள், தன் கைநமச்சலை மரத்தின்மீது போக்கிவந்தாள். அவ்வடிகள் அம் மரத்தில் குடியாயிருந்த ஒரு பைசாசத்தின் தலையிற் பட்டுக் கொண்டே யிருந்தது. இரண்டொரு நாளைக்குள் அதின் மூளை யும் கலங்கிவிட்டது. அதனால் அப்பைசாசமும் மூச்சடக்கிக் கொண்டு ஓட்டம்பிடித்தது. அப்பெண்ணின் புருஷனிருக்கிற ஊருக்கே போய்ச் சேர்ந்தது. ஒரு நாள் அந்த மனிதனைக்க ண்டு அப்பைசாசம் இரக்கமுற்று, மனிதரூபத்தில் அவனிடத் துக்கு வந்து வந்தனமளித்து, நீர், என்னை அறிவீரா என்று கேட்டது. அவன் அறியேனென்றான். அப்பைசாசம் தன் வர லாற்றையும் அப்பெண்பிள்ளையின் செய்கைகளையும் விவரித்து க்கூறி, வாலிபரே, உமக்குப்பதிலாக நான் செருப்படி பட்டப டியால் அதற்குப்பிரதி உம்மிடத்தில்தான் பெறவேண்டியதிருக் கிறதென்றது.

அம்மனிதன் பைசாசமே, அப்படியானால் இன்று முதல் நாமிருவரும் சகோதரர்களாயிருந்து வருவோமென்றான். பை சாசம், சகோதரரே, நீர் என்னைச் சகோதரனாகப் பாவித்துக் கொண்டபடியால், நீர் வறுமை நீங்கி வாழவேண்டியதிருக்கிறது. நாளைத்தினம், நான் பிரதான மந்திரியின் புத்திரி தலையிலேறிக் கொள்ளுகிறேன். எவ்வளவு மந்திரவாதிகள் வந்தாலும் இறங் காதிருக்கிறேன். நீர் மந்திரிவீட்டு வாசற்படிக்குச் சமீபித்து வந்து, நான் அப்பைசாசத்தை விரட்டிவிடுகிறேன், நான் கேட் கிற தொகையைக் கொடுப்பீர்களா வென்று கேளும். பிரதான

மந்திரி மெத்த வருத்தத்தின் பேரில் சம்மதிப்பார். நீர் ஒரு தொகைப் பணத்தைத் திட்டமாய்ப் பேசிக்கொண்டு என் முன்னால் வாரும். நீர் வந்தவுடனே நான் விலகிவிடுகிறேன். பேசியபடிக்குப் பணத்தை வாங்கிக்கொள்ளுமென்றது. அம்மனிதன் பைசாசத்தின் வார்த்தைக்கிணங்கி சந்தோஷமுற்றிருந்தான். மறுநாள், அப்பிசாசு, பிரதான மந்திரியின் மகளைப் பிடித்துக் கொண்டது. அவன், மந்திரியிடத்தில் போய் ஒரு தொகைப் பணத்தைத் தீர்மானப்படுத்திக்கொண்டு, அப்பெண்ணிடத்தில் வந்து, அவள்பேரிலிருக்கும் பைசாசத்தைப் பார்த்து, சகோதரரே, நீர் சொன்னதுபோல் யாவற்றையும் செய்துமுடித்து வந்தேனென்று இரகசியமாய்ச் சொன்னான். அப்பிசாசு, சகோதரரே, உமக்குத் தேவையானவைகளை யிங்கு பெற்றுக்கொள்ளும். நாளைத்தினம், நான் இவ்வூர் இளவரசியைத் தொடப்போகிறேன். அங்கேயும் நீர் பொருளாசையால் வந்து, என்னைச் சங்கடப்படுத்தாதீர். மீறிச்செய்வீரேயானால், வெறுமனே கொல்லப்படுவீரென்பதில் சந்தேகமில்லை யென்றது. அம்மனிதன், பைசாசமே, நான் பைத்தியக்காரனல்ல. எனக்கு உபகாரம் செய்தவர்களின் பிரியப்படிக்கே நடந்துக்கொள்வேனென்றான். பைசாசம் போய்விட்டது. அவனும் மந்திரியிடத்தில் பேசிய தொகையை வாங்கிக்கொண்டு போய்விட்டான்.

மற்றுநாள், அப்பைசாசம், அவ்வூர், இளவரசி பேரில் ஏறிக்கொண்டு அவளைப் பலவாறு புலம்பச் செய்தது. அதனால் அரசர், வியசனமுற்று, நேற்றைத்தினம், பிரதான மந்திரியின் மகளுக்குப் பேயோட்டிய மந்திரவாதியைச் சீக்கிரங் கொண்டு வாருங்களென்று கட்டளையிட்டார். சனங்கள் விரைந்தோடி அவனை அழைத்துக் கொண்டுபோய் இளவரசியின் சமுகத்தில் விட்டார்கள். அவனை, அப்பிசாசு, சகோதரரே, நேற்று நான் கூறியவைகளை மறந்துவிட்டீரோ, என்று கேட்டது. அதற்கவன், பைசாசமே, நீர் சொன்னவைகளை மறந்துவிடவுமில்லை உம்முடைய கட்டளைக்கு மாறுசெய்யவுமில்லை. உம்முடைய

உபகாரத்சாக் போதுமான பொருளைப் பெற்றுக்கொண்டேன் நீர் செய்த வுபகாரத்தின் பிரதியாக, ஒரு முக்கியமான விஷயத்தைப்பற்றி உம்மிடத்தில் விண்ணப்பஞ் செய்ய வந்தேனென்றான். பைசாசம், சகோதரரே, சீக்கிரம் சொல்லுமென்றது. அவன், சகோதரரே, இரகசியமான வார்த்தையானதால் தயவு செய்து சற்றுநேரம் என் கிட்டவந்து கேளுமென்றான். அப்பிசாசு இளவரசியை விட்டு விலகி அவன் சமுகத்தில் வந்தது. அம்மனிதன், என் மனைவி, செருப்பை யெடுத்துக் கொண்டு என்னைத் தேடி இங்கு வந்திருக்கிறாள். இனியும், நான் இங்கிருக்கமுடியாது. எங்கேனும் ஓடிப்பிழைக்கவேண்டும். எனக்கு விடைகொடுமென்றான். அதைக்கேட்ட பைசாசம், சகோதரரே, என் குலை நடுங்குகிறது. கடவுள் பேரிற் சத்தியமாக, அரை நாழிகைப் பொழுதேனும் நான் இங்கிருக்க மாட்டேன். நான் பட்டஅடி எனக்குப் போதும். இதோ நான் உமக்கு முந்தி, ஓட்டம் பிடிக்கிறேன். நீர் எனக்குப் பின்னால் ஓடிவாருமென்று கூறிவிட்டுப் பறிந்தது. அவன் அரசரிடத்தில் தக்க வெகுமதி பெற்றுச் சுகத்துடன் வாழ்ந்திருந்தான். பைசாசமும் அடிக்குப் பயந்தோடுகிறது. அடி உதவுகிறதுபோல் அம்புடையான் உதவமாட்டான். அடிமேல் அடி யடித்தால் அம்மியும் நகரும், என்பதுபோல, சௌந்திரவதியைப் பயமுறுத்திக்கேட்டால் நிட்சயமான சங்கதி வெளிப்படக்கூடுமென்றாள்.

உடனே ஹூர்முஜ், சில வேலையாட்களை வரவழைத்து, சௌந்திரவதியைத் தலைகீழாகத் தூக்கிக்கட்டி அடிக்கக் கட்டளையிட்டார். அதுபோல் அவர்கள் பத்துப் பதினைந்தடி அடித்தவுடனே, அடி பொறுக்கமாட்டாமல், எஜமானே குல் இளவரசியைப் போக்கடித்தது நான்தான். ஈரானரசருக்கு நிருபமனுப்பி, பிரேதப்பெட்டி யொன்றை வரவழைத்து, அதற்குள் அவளை அடக்கம்பண்ணி ஈரானுக் கனுப்பிவிட்டே னென்றாள். ஹூர்முஜ், கண்களிலே தீப்பொறி பறக்கச் சினந்து, அவளைச் சன்னஞ்சன்னமாய் வெட்டி யெறிந்து, இளவரசியைப் பற்றி

சிந்தித்தவராயிருந்தார். முடிவில் அவருக்குத் தன்னுணர்வில்லாது போயிற்று. பெற்றாரை மறந்தார். அரசாக்ஷி விஷயத்திலும், மற்ற விஷயங்களிலும் கவனஞ் செலுத்தாமல் இரவு பகலாய் அவளை நினைத்து தழுவதே வேலையாயிருந்தார்.



## 25-ம் அதிகாரம்.

### ஈரான்தேசத்தை யழித்ததும் இளவரசியைத்தேட விடைபெற்றதும்.



குல் இளவரசியின ஞாபகத்திலேயே, ஹார்முஜ், தன் மனதைச் செலுத்தி, நலிந்து, மரணத்தை யெதிர் பார்ப்பவரானார். அவரின் கோலத்தை, ரோமாபுரிச் சக்கரவர்த்தி பார்த்திருக்க மாட்டாதவராய்க் கலங்கி மந்திரி வசத்தில் அரசாக்ஷியதிகாரத்தை ஒப்பித்து, நீர் பத்திரமாய்ப் பட்டணத்தைப் பாதுகாத்துவாரும். நான் ஈரானுக்குப் போய், அந்த மடையனுக்குத் தக்க சிக்ஷைசெய்து, புத்தி கற்பித்து, என் மருமகளாகிய குல் இளவரசியைக் கொண்டுவந்து சேருகிறேனென்று கூறி, உடனே, இரதகஜதுரகபதாதிகளுடன் பிரயாணமானார். அதை யறிந்த "ஹார்முஜ்," மனந்தாளாதவராய் உடனே தானும் ஈரானுக்குப் போகத்துணிந்து, விரைந்து நடந்து, நான்காம் விடுதியில், தாணயமிட்டிருக்கும், தந்தையருடன் போய்ச் சேர்ந்தார். அச்சமையம் கூஜான் தேசமும் உண்டாககப்பட்டு கூஜான் அரசரும் சிம்மாசனமேறி இராஜநீதி நடத்திக்கொண்டிருக்கிறார். மந்திரிமார்கள் ஹார்முஜின் காரியங்களைப்பற்றி அவருக்குத் தெரியப்படுத்தி யிருந்தார்கள். அவர் மனதிலும் ஈரான் அரசரிடத்தில் பிரதிபழி வாங்கவேண்டுமென்கிற எண்ணம் பரிபூரணமாயிருந்தது. ரோமாபுரிச் சக்கரவர்த்தியும் ஹார்முஜூம், ஈரானுக்குப் போகிறார்களென்பதைக் கேள்வியுற்று தன் பரிவாரசகிதமாக அவரும் சக்கரவர்த்தியின் படையுடன் வந்து சேர்ந்தார். ஹார்முஜ், ஈரானுக்குப் போகிறபோது கூஜான் எல்லைச்சராகத்தில் விட்டுப்போன திரண்ட சேனையும்

வந்து சேர்ந்துகொண்டது, எல்லாப் படைகளும். வெள்ளப் பெருக்கைப்போலாகி, ஈரான் தேசத்தில் வந்து சேர்ந்தார்கள். ரோமாபுரிச் சக்கரவர்த்தி ஈரானிகளைக் கண்ட கண்ட விடங்களிலெல்லாம் வெட்டும்படிக்குக் கட்டளையிட்டார். சக்கரவர்த்தியின் கட்டளை பிறந்தவுடனே, "ஹார்முஜ்" வீராவேசங் கொண்டு, ஆயுதங்களணிந்து முன்னேறி, கோடானுகோடி ஜனங்களை வெட்டி குவித்து, அரண்மனை யுட்புகுந்து, ஈரான் அரசர்முதல் அவரின் பிள்ளைகுட்டிகளடங்கலையும் வெடிக் கருவறுத்து அவ்வரண்மனையின் ஒவ்வோரறைகளுள்ளுஞ் சென்று, குல் இளவரசியைத் தேடினார். அவளின் யாதொரு அடையாளமும் காணப்படாமையாற் கலங்கி சித்தப்பிரமை கொண்டு, எதிர்ப்பட்ட சுவர்களில் தன் தலையை மோதிக்கொண்டு, ஆ என் பிரிய நேசியே, நீ எங்கு போயினை. உன்னால் நான் அடைந்த கஷ்டத்தின் களையாற முன்னரே, மறுகவலையை யுண்டாக்கிவிட்டு ஒளித்துக்கொண்டாயே. உன்னை விட்டுப்பிரிந்து நான் சீவித்திருப்பதைவிட, நானே என்னுயிரைப் போக்கடித்துக்கொள்ளலாமென்று நினைக்குந்தோறெல்லாம், ஒருக்கால் நீ சீவித்திருந்து, நான் மரணமடைந்ததை நீ கேட்டு, மனங்கசங்க நேரிடுமே யென்னும் எண்ணம் குறுக்கே மறித்து நிற்கிறது நான் செய்யவேண்டிய காரியம் இன்னதெனப் புலப்படாமல் தியங்கிக்கொண்டிருக்கிறேனே யெனப்பலவாறு புலம்பி அழுதுகொண்டே திரிந்தார்.

அப்போது பதினான்காம் பக்கத்துச் சந்திரனைவிடப் பிரகாசமான முகத்தையுடைய ஒரு பெண், ஒரு அறைக்குள்ளிருந்து. வாலிபரே, ஏன் அழுகிறீர்? எதை நாடிப் புலம்புகின்றீர்? உமக்குச் சம்பவித்த துன்பம்யாது? அதை யென்னிடத்திற் சொல்லமாட்டீரா வென்று கேட்டவளாக வெளியே வந்தாள். ஹார்முஜ், அவளைப்பார்த்து. பெண்ணே, உங்களால நான் துன்பத்தில் சிக்குண்டவனா யிருக்கிறேன. குல் இளவரசி யெங்கிருக்கிறாளென்பதைத் தெரிவித்தால் பெரிய வுபகாரமாயிரு

க்குமென்றார். அப்பெண், வாலிபரே, நீர் ஹார்முஜாயிருப்பீ ரேல் கபோதியாகிய நான் என் சரீரத்தை உமக்குப் பலி யிடுகிறேனென்றாள். ஹார்முஜ், ஆம், ஆம், அந்த விதிகெட்ட நான்தான், பண்டிதர் வேடம்பூண்டு, அனேக தந்திரங்களைச் செய்து குல்லைக்கடத்திக்கொண்டு, ரோமாபுரக்குப் போனேன். அங்கிருந்து அவளை, சௌந்திரவதி யென்பாள பிரேதப்பெட் டியிலடக்கஞ்செய்து, இங்கனுப்பிவிட்டாள். அதனாலேயே நா ங்கள் இங்குவந்து அரசர்முதல் யாவரையும் வெட்டிக் கருவ றுக்க நேர்ந்தது. இவ்வளவு பிரயாசையுடன் இங்கு வந்தும் அவளைக் காணமற் போனபடியால் கைசேதமுற் றழுகிறேன். நீ யார்? என்னை நீ, ஹார்முஜென்று எப்படி யறிந்தாய் சொ ல்லென்றார். அவள் அழுதவளாக, ஆ, என பிரிய நேசரே, நான் உம்பேரில மோகங்கொண்ட சந்திரவதனி யல்லவா? உம் முடைய தேட்டத்தால் இவ்வாறுனே னென்றாள். ஹார்முஜ், பெண்ணே, உன் கண்பார்வை மங்கக் காரணமென்னவென்றார். அவள், பிரிய நேசரே. உம்மை நினைந்து. நான் அழுதுக்கொண்டி ருந்தபடியால் என் கண் போயிற்றென்றாள். ஹார்முஜ், அவள் பேரிலிரங்கி அவள் கணகளில் தன் கையைவைத்து நீவினார். உடனே அவளுடைய கண் வெளிச்சமாயிறறு. அவள் தன்னிரு கைகளையும் ஹார்முஜின் கழுத்திற்போட்டுக்கட்டியணைத்துவெகு நேரம் வரையில் கண்களால் முத்தைச்சொரிந்துகொண்டிருந்தாள்.

ஹார்முஜ், அவளின் அழுகையை அமர்த்தி, சந்திரவத னியே, குல் இள்வரசி, எங்கிருக்கிறாளென்பதை, நீ எனக்குத் தெரிவிக்கவேண்டுகிறேன். இல்லாதுபோனால் இதோ, நான் பரலோக யாத்திரைக்குத் தயாராயிருக்கிறேன். அப்போது, நீ, சாகும்பரியந்தம் என்னை நினைத்துக் கவலைப்பட்டுக் கொண்டே யிருப்பாயென்றார். அவள், என் பிரியநேசரே, கடவுள் காப் பாராக. ரோமாபுரியிலிருந்து என் தந்தையரின் பணிவிடைக் காரர்கள் பிரேதப்பெட்டியைத் தூக்கிக்கொண்டு வரும வழியில் சமுததிரம் குறுக்கிட்டதாகவும், கப்பலேறி வரும்போது கப்

பலுடைந்து, யாவரும் கடலில் ஆழ்ந்துவிட்டதாகவும், கேள்விப்பட்டோம். அந்தரங்க விஷயங்களை அறியவல்லவர் கடவுளொருவரே யென்றாள். அவளின் சொற்களைக் கேட்டவுடனே, ஹாமுஜ், உசாரிழந்து பிரேதம்போல் பூமியில் குப்புற அடித்து விழுந்தார். வெகுநேரத்தின் பிறகு உணர்ச்சி பெற்றெழுந்தார். அழுதார். புலம்பினார். கடைசியில், சந்திரவதனியைப் பார்த்து, பெண்ணே, நான் போய்விட்டு வருகிறேன். நான் திரும்பி வருகிறவரையில் இவ்வூருக்கு நீயே, சக்கிரவர்த்தினியாயிருந்து ஆக்ஷிபுரிந்துவா. கடவுளின் கிருபையால் என்னுடைய ஆயுள் நீடித்திருக்கும் பக்ஷத்தில் உன்னை நான் மணம்புரிந்து, குல் இளவாசிக்குத் துணையாக்கி வைக்கிறேனென்றார். அதற்கவள், என் பிரிய நேசரே, உம்முடன்கூடவே நானும் வருகிறேன். நீண்டநாளாக வும்மைப் பிரிந்திருந்ததால் என் சரீரம் நலிந்து, மனத்திடங் குன்றிப்போயிருக்கிறபடியால், இதற்குமேலும், உம்மை விட்டுப்பிரிந்திருக்க என்னால் சாத்தியப்படாதென்று கூறி, தாரைதாரையாய்க் கண்ணீர் வடித்தாள். ஹார்முஜ், வழிப்பிரயாணத்தா லுண்டாகும் கஷ்டங்களை, அவளுக்கு வெகுவாக எடுத்துக்கூறினார். அவள், யாதொன்றையும் கவனிக்காமல் கூடவே புறப்படுவேனென்று பிடிவாதஞ் சாதித்து நின்றாள். ஹார்முஜ், சந்திரவதனியின் சமாச்சாரத்தை, மங்கலவாச்கியின் மூலமாய், தன் தந்தையருக்குத் தெரியப்படுத்தி, தாங்கள், படைவீரர்களை அழைத்துக் கொண்டு ரோமாபுரிக்குப் போய்ச்சேருங்கள். கூஜான் அரசரையே, ஈரான்தேசத்தை ஆண்டுவரக் கட்டளையிடுங்கள். நான், பிரேதப்பெட்டியைத் தேடிச்செல்லுகிறேன். கடவுளின் கிருபையால் கூடியசீக்கிரத்தில் சுகத்துடன் தங்கள் சமுகத்தடைகிறேனென்று வேண்டிக்கொண்டார். சக்கரவர்த்தியார், ஹார்முஜின் விண்ணப்பத்தைப்பற்றி வெகு நேரம் வரையில் ஆலோசித்து, அவன் பிரியப்படி விடை கொடாதுபோனால், கவலைமீறி வெறுபனே யிறந்துபோவான். நாமும் அவனுடைய நினைப்பில் மூழ்கி

சாகுமளவும் சங்கடப்படநேரிடும். ஆகையால் விடைகொடுத் தனுப்புவதே உத்தமமென்மனத் திர்மானித்து, தன் படையில சரி பாதியை, ஹுர்முஜுடன் சேர்த்து, அவரையும் மற்ற பரிவா ரங்களையும், கடவுளிடத்திற் பரஞ்சாட்டியனுப்பினுர்.

——:(*):——

## 26-ம் அதிகாரம்.

## ஹுர்முஜ், வெறுங்கையாய்த் திரும்பியது.

——:(:)::——

ரோமாபுரிச் சக்கரவர்த்தியார், பலபாகத்திலும், தூதர்க ளையனுப்பி, குல் இளவரசியைத் தேடிக்கொண்டுவரக் கட்டளை யிட்டார். ஹுர்முஜ், சந்திரவதனி, மங்கலவாக்கி, நீலமுகி, முதலான சேனுவீரர்கள் சஹிதமாகப் புறப்பட்டு, மேற்றிசைக் கடற்கரையோரமாக விசாரித்துக் கொண்டே போனுர். சில நாளைக்குப் பின்னுல் ஒரு பெரிய வனுந்திரம் எதிர்ப்பட்டது. அவ்வனத்தில் வேங்கைகளும், சிறுத்தைப் புலிகளுமே காணப் பட்டன. அதனுல சந்திரவதனி, அச்சமுற்றுப் பதறி, ஹுர்முஜைப்பார்த்து, இத்துட்ட ஜெந்துக்களால் நமக்குக் கெடுதி யுண்டாகாதிருக்க வழியென்னவென்று கேட்டாள். ஹுர்முஜ், பெண்மணியே, என் புத்தி என்னிடத்தி லிருந்தாலல்லவோ நான வழிகாட்டுவேன். தற்போது, ஸ்திரமான மனதையுடை யவர்களே நன்றுய் யோசித்து செய்யவேண்டிய முறைமைப் படி செய்யவேண்டும். நானே, எந்த மிருகமேனும் என்னைப் பிடித்துத் தின்றுவிடமாட்டாதா? என்கிற நாட்டத்துடனே யே யிருக்கிறேனென்று மறுமொழி கொடுத்தார். சந்திரவதனி ஆ, என் பிரியநேசரே, தாங்கள் இவ்வாறுன வார்த்தைகளை யினிமேல் பேசாதிருக்க வேண்டுகிறேன். எங்களுடைய புத்தி, தங்களின் புத்திசாதுர்யத்துக்கெதிரே, அணுத்துணையு மாகமா ட்டாதாகையால், இவ்விஷயத்தில், தாங்களே யோசித்துத் தீர் மானப்படுத்தி, எங்களைக் காப்பாற்றவேண்டியதென்றுள்.

ஹுர்முஜ், சனங்களே, காய்ந்த மரங்களைக் கொண்டுவந்து குவித்துத் தீமூட்டி நமக்கு நேரவிருக்கும் துன்பத்தை யேன் விலக்காது தாமசப்படுத்துகிறீர்களென்றார். உடனே சந்திரவதனி, மிதமான விறகுகளைக் கொண்டுவரச் செய்து, தீயிட்டெரித்தாள். அம்மிருகங்கள் தூரவிலகிநின்றன. அன்றிரவை அவ்விடத்தில் அச்சமின்றிப் போக்கி பொழுது விடிந்தவுடனே பாதைகூட்டி நடந்தார்கள். ஒரு மாதத்தின் பின்னால் இன்னொருவனம் எதிர்ப்பட்டது. அவ்வனத்தின் மரங்களடங்கலும் பழங்களால் நிறைந்து நின்றன, விதவிதமான பக்ஷியினங்கள் அம்மரக்கிளைகளி லுட்கார்ந்து பாடிக்கொண்டிருந்தன. ஹுர்முஜின் சிநேகிதர்களடங்கலும் அவ்வனத்தில் அன்றிரவைப் போக்க விருப்பமுற்றார்கள். ஹுர்முஜ், இதற்குமுன் அவ்விதமான வனத்தில் புகுந்து வருத்தமடைந்தவரானதால், அவர்களைத் தடுத்து, அவ்வனத்துக் கருசாமையில் விடுதிவிடக் கட்டளையிட்டார். சந்திரவதனி, ஹுர்முஜின் கூடாரத்திலிருந்தாள். மற்றவர்கள் கனிவருக்கங்களில் ஆசைகொண்டு. பறித்தருந்தி, அங்குதானே கூடாரமடித்திருந்தார்கள். அவர்களடங்கலுக்கும், நடுச்சாமத்தில் வயிற்றுவலி யுண்டாகி, தாங்கமாட்டாமல் கூக்குரலிட்டழுதார்கள். சிலர் உசாரிழந்து கிடந்தார்கள்.

'ஹுர்முஜ்' அச்சனங்களின் கூக்குரலைக்கேட்டு, விரைந்து நடந்து தோட்டத்துக்குள்ளாகி, மயில்வனத்தின் பரிப்பெண் கொடுத்த அக்ஷரத்தகட்டை தன் அரையிலிருந்தெடுத்து, அத்தோட்டத்துக் கெதிரே காட்டினார். அத்தோட்டம் சூனியத்தால் செய்யப்பட்டதானதால், அவ்வக்ஷரத்துக்கெதிரே நில்லாமற்போயிற்று. அச்சனங்களின் வயிற்றுவலியும் நீங்கிற்று அவர்களடங்கலும், ஹுர்முஜின் கட்டளைக்கு மீறிநடந்ததினாலல்லவா? இவ்வாறு சம்பவித்ததென்று வெட்கமுற்றிருந்தார்கள். ஹுர்முஜ், அச்சனங்களைப் பார்த்து, இத்தோட்டம் பரிப்பெண்களுக்குடையது. மனிதர்களுக்கு, இதில் நுழைய

வும் பிரியப்படி யாதொன்றைச் செய்யவும், எவ்விதத்திற்கூடும். நான்வந்து உங்களைக் காப்பாற்றாதுபோனால் தடையின்றி இது வரையில் நீங்கள் இறந்தேயிருப்பீர்களென்றார் அச்சனங்கள், எஜமானே, ஒருமுறை தெரியாத்தனமாய்ச்செய்துபோட்டோம். இனியொருக்காலும், தங்கள் கட்டளையை மீறி நடக்கமாட்டோமென்றார்கள். பின்பு, ஹார்முஜ், நீலமுகியை கடற்கரை யோரத்திற்போய், பிரேதப்பெட்டியைப்பற்றி விசாரிக்கக் கட்டளையிட்டனுப்பினர். ஹார்முஜ், அவ்விடத்திலேயே கூடாரங்களடித்திருந்து, சிலகாலம்வரையில் காட்டிலும் வனத்திலும் திரிந்தலைந்து தேடினர். பிரேதப்பெட்டியைப்பற்றிய எவ்விதமான சங்கதியுங் கிடைக்காமையால், மனக்கலக்கமுற்று அழுது கொண்டேயிருந்தார். ஒரு நாள் கடற்கரையோரத்தில் திடீரென ஒரு விருக்ஷம் தென்பட்டது. அம்மரம் மஹா அடர்த்தியும் பிரமாண்டமுமானதால் அதின் நிழலில், இரத்தினக் கம்பளம்போட்டு உட்கார்ந்துகொண்டிருந்தார்.

அன்று அர்த்தசாமத்தில் சமுத்திரத்தில் ஒருவிதமான இரைச்சலும் அலையும் கிளம்பியது. அதைக்கண்ட, ஹார்முஜ், இதுவும் ஒரு நல்ல வேடிக்கைதான். நாம் போகிற ஒவ்வொரு தலமும், துன்பத்தைக் கொடுக்கக்கூடியதாகவே யிருக்கிறது. வருகிறதெல்லாம் வரட்டும், இன்றிரவின் பாதியை இம்மரத்தின் கிளைகளிற் போக்கிப் பொழுது விடிந்தவுடனிறங்கி நடப்போமென்று கூறி, எல்லாரையும் மரத்திலேற்றி, தானும் ஏறி ஒரு கிளையிலுட்கார்ந்திருந்தார். அப்படிக்கிருக்கும்போது, சமுத்திரத்திலிருந்து, ஒரு கூட்டம் நீர்ப்பசுக்கள் வெளிப்பட்டன. ஒவ்வொன்றின் வாயிலும் கோழிமுட்டைக்குக் கொஞ்சம் பெரிதான ஒவ்வொரு இரத்தினத் தீபம் கவ்வப்பட்டிருந்தது. அதின் பிரகாசம் அதலத்தின் நாற்பாலும் பத்துகாத தூரம் வரையில் பாய்ந்து நின்றது. ஹார்முஜ், அதைப்பார்த்து ஆச்சரியப்பட்டுக்கொண்டிருந்தார், மற்றவர்களடங்கலும் தட்டழிந்து, அம்மரத்தின் இலைகளுக்கிடையில் மறைந்துக்கொண்டிருந்

தார்கள். அந்நீர்ப்பசுக்களடங்கலும் அம்மாத்தின் அடிவாரத்திலேயே வந்து, இரத்தின தீபங்களைக் கக்கிவிட்டு, அவ்வனத்தில் மேய்ச்சலுக்குப் போயின. பொழுது விடியுஞ் சமையம் அப்பசுக்கள் வந்து, தலைக்கொரு இரத்தினத்தை வாயால் கவ்விக்கொண்டு, கடலிலிறங்கி மறைந்துபோயின. ஹாரூர்முஜின் சனங்கள், எஜமானே, இதென்ன அற்புதமென்று கேட்டார்கள். ஹாரூர்முஜ், சனங்களே, இதைத்தான் நாகரத்தினமென்று சொல்லுகிறது. சிலசமையங்களில் மனிதர்கையில் அகப்படுகிறதும் உண்டென்றார். அவர்கள், எஜமானே, அப்படியானால் எவ்விதத்தாலாவது, நாமும் கொஞ்சம் எடுத்துப்போவோமென்றார்கள். அதற்கு ஹாரூர்முஜ், சினேகிதர்களே, கொஞ்சமென்ன? அடங்கலையும் எடுத்துக்கொண்டு போவோமென்றார்.

அவர்கள், அதை யெடுக்கும் யுக்தி யெவ்வாறென்று ஹாரூர்முஜைக் கேட்டார்கள். அவர், சினேகிதர்களே, கைகளில் களிமண் உருண்டைகளை வைத்துக்கொண்டு மரக்கிளைகளில் உட்கார்ந்திருங்கள். அப்பசுக்கள் வந்து மாணிக்கங்களைக் கக்கி வைத்துவிட்டு மேயப்போயிருக்கும் சமையத்தில் அச்சேற்றுருண்டைகளை, அக்கற்களின்மீது போட்டு மூடிவிட்டால், அப்பசுக்கள் இருட்டால் திகைத்துத் தலைகளைப் பூமியில் மோதிக்கொண்டே சமுத்திரத்துக்குப் போய்விடும். அப்போது நீங்கள் கீழிறங்கி அம்மாணிக்கங்களை யெடுத்துக்கொள்ளுங்களென்றார். அதுபோல் அச்சனங்கள் மறுநாளிரவில் செய்தார்கள். பசுக்கள் இருளானவுடனே, தலைகளை மோதிக்கொண்டும், வாற்களை யுயர்த்திக்கொண்டும் சற்றுநேரம் வரையில் அவ்வனத்தில் வையாளி யிட்டுக்கொண்டு திரிந்தன. அச்சமையம் மதங்கொண்ட யானையானாலும், அட்டகாசஞ் செய்துவரும் வேங்கையானாலும், சரியே; அவைகளுக்கெதிரில் வந்தால் கூர்மையான கொம்புகளால் வீற்றுவீற்றுக்கிப் போடுமென்பதில் ஐயமில்லை. பொழுதுவிடிகிறவரையில் அவைகள் ஒன்றுக்கொன்று முட்டி மோதிக்கொண்டிருந்து, விடிகிறசமையம், சமுத்தி

ரத்திற்குள் போய்விட்டன. ஹார்முஜ், சிநேகிதர்களே, பசு க்கள் போய்விட்டன பொழுது விடிந்துவிட்டது. இரத்தின ங்களை யெடுத்துக்கொள்ளுங்கள். அதிகநேரம் இங்கிருக்கக் கூடாது. சீக்கிரம் போய்விடவேண்டும், கீழிறங்குங்களென் ருர் உடனே. அவர்களிறங்கி, மாணிக்கங்களை யெடுத்து, மடி களிற் கட்டிக்கொண்டு நடந்தார்கள். வெகுதூரம் நடந்து தே டியும் பிரேதப்பெட்டியாவது, அதின் சங்கதியாவது கிடைக் காமையால், ஹார்முஜ். மெத்த கலங்கியழுதார். பின்பு, அங் கிருந்து முன்னேறி ஒரு மலையிற் போய்ச்சேர்ந்தார்கள். அம் மலையோ, இரத்த விருப்பமுற்ற இராக்கதர்களின் வாசஸ்தான மாயிருந்தது. ஹார்முஜின் சினேகிதர்கள், எஜமானே, சமு த்திரைக்கரை யடங்கலையும் ஒவ்வொன்ருய்ப் பார்த்துத் தீர்த்து விட்டோம். ஒரு தலத்திலாவது, அப்பிரேதப்பெட்டியைப் பற் றிய விஷயம் நமக்குக் கிடைக்கவில்லை. நீலமுகி, யென்பவர் இன்னமும் எங்கெங்கோதேடி யலைந்துக்கொண் டிருக்கிருர். நாம், மலைகளிலும் வனங்களிலும் சுற்றித்திரிவதால் என்ன கி டைக்கப்போகிறது. ஆகையால் நாம் ரூமாபுரிக்குப் போய் ச்சேர்ந்து, நீலமுகியின் வருகையை யெதிர் பார்த்திருப்போம். ஒருக்கால் அவர் ஜெயத்துடன் ரூமாபுரிக்கு வந்து விட்டால், நம்மை அவர் எங்குபோய்த்தேடுவார். அவருக்கு நம் இளவர சியின் செய்தி அகப்பட்டிருந்தால். நேரே ரோமாபுரிக்குப் போ வாரேயல்லாது, நம்மைத் தேடி இம்மலை யடிவாரத்துக்கு ஒருக் காலும் வரமாட்டார். ஆகையால் நாம் ரூமாபுரிக்குத் திரும் புவதே, உத்தமமாய்க் காணப்படுகிறதென்ருர்கள். ஹார்முஜ், வந்தவேலை கைகூடாமல் திரும்ப மனமில்லாதவராய் ஆலோச னையிலிருக்கும்போது, வெகு தூரத்தில் ஒரு பெரியமனிதர் வரு வதைக்கண்டு, சமீபத்தில் ஏதேனும் ஒரு பட்டணமிருக்கப் போதுமென்று நினைத்தார். அதற்குள் அந்த மனிதரும் வந்து நெருங்கிப் புன்னகைநகைத்து, ஹார்முஜைப்பார்த்து, மகனே, நீ, ஏன், வீணில் மலையடிவாரங்களில் காலத்தைப் போக்கித்தி-

றீகின்றாய். சர்வசிருஷ்டி கர்த்தரின் உதவியால் நீ யிருக்குந் தானத்திலேயே உன்னுடைய நாட்டம் கைகூடிவரும். நீ யாதொன்றையும் கவனிக்காமல் நேரே ரோமாபுரிக்குப் போய்ச் சேரென்றார். ஹார்முஜ், அப்பெரிய மனிதனை, தன்னை மானுருவத்தில் நின்றும் மனுரூபப் படுத்தியவரென் றறிந்து அவருடன் கொஞ்சநேரம் வார்த்தையாடிக் கொண்டிருந்தார். ஹார்முஜின் சிநேகிதர்கள், சுபசோபனங்கூறி, எஜமானே, இப்பெரியவரோ, தங்களுக் குதவிசெய்வதற்காக வந்த ஜீவாத்மாவாயிருக்கிறார்கள். யாதொரு சந்தேகமுமின்றி அவர்களின் சொற்போல் தங்களின் நாட்டம் நிறைவேறும். வெறுமனே இவ்விடத்தில் நாம் காலத்தைப் போக்குவதில் யாதொரு பிரயோசனமுமில்லை. நடங்களென்றார்கள். ஹார்முஜுக்கு அப்பெரியவரின் சொல்லில் நம்பிக்கை யுண்டாயிற்று. சரீரத்தில வலுவுண்டாயிற்று. குல் இளவரசியைக் கண்டுகொள்வோமென்னும் உறுதி யுண்டாயிற்று. உடனே, யெழுந்து நடந்து சில நாட்களுக்குப் பின்னால் ரோமாபுரிக்கு வந்து சேர்ந்தார்கள்.

மங்கலவாக்கி, ஓடிப்போய் ஹார்முஜின் வருகையை, சக்கரவர்த்திக்குத் தெரிவித்தாள். அவர் சந்தோஷத்துடன் வந்து, ஹார்முஜைக் கட்டித்தழுவி, ஆசிகூறி, அரண்மனைக் கழைத்துச்சென்று, பொறுதியும், ஞதியும், மனிதர்களுக்கு முக்கிய கருவியென்பதைப் பற்றிய, அநேக நற்போதனைகளை, ஹார்முஜுக்கு உபதேசஞ்செய்தார். யார் என்ன போதித்தாலுந்தானென்ன? அவளைக்காணுமல் அவரிருப்பத்தில் என்ன சுகமிருக்கிறது. இரவுபகல் இடைவிடாமல் அழுதவராகவே தனிசுத ஒரு தலத்திற் காலங்கழித்து வந்தார். சக்கரவர்த்தியர், பல பாகத்திலும் சனங்களையனுப்பி, குல் இளவரசியைத் தேடச் செய்தது மல்லாமல், அவளுடைய சமாசாரத்தை அறிந்துவந்து சொல்பவர்களுக்குக் கோடிக்கணக்கான வெகுமதி கொடுக்கப்படுமென்று. பறையும் சாற்றுவித்தார்.

---

## 27-ம் அதிகாரம்.

## பிரேதப்பெட்டி.



ஈரான் அரசரின் தூதர்கள், சூல் இளவரசியைப் பிரேதப்பெட்டியிலடக்கிக்கொண்டு, ஈரானுக்குப் போகிறபோது, அவள், தனக்கு நேரிட்ட துன்பத்தை நினைத்து நினைத்துத் தாரை தாரையாய்க் கண்ணீர்வடிய அழுதுக்கொண்டே யிருந்தாள். சில நாளைக்குப்பிறகு, அத்தூதர்களுக்குக் கப்பலேறிச் செல்லவேண்டிய தலம் வந்து குறுக்கிட்டது. அக்கடல் மஹா கொந்தளிப்பாயிருந்தது. அலைகள் ஒன்றின்பின் ஒன்றாக வந்துக்கொண்டிருந்தன. அவ்வலைகளின் திரக்ஷியைக்கண்டு மேகங்கள் ஒன்றோடொன்று முட்டிக்கொண்டழுதன. அக்கடல் நீரின் நீலநிறத்தைப்பார்த்து, அகாயம் இருநிறங்கொண்டது. அக்கடலினின் றெழும்பும் நீர்த்துளிகளை நோக்கிய நக்ஷத்திரங்கள், மறைந்துமறைந்து பிரகாசித்துக்கொண்டிருந்தன. மீனினங்கள் அலையின் அயாரிக்கஞ்சி, துள்ளிப்பாய்ந்து ஆகாயத்துக் கேறின. அவ்வளவு கடூரமான சமுத்திரத்தில் பிரயாணமாக விருந்த ஒரு மரக்கலத்தில், ஈரானரசரின் தூதர்கள், பிரேதப்பெட்டியை யேற்றி, ஒரு தலத்தில் வைத்து, காவல்புரிந் திருந்தார்கள். கப்பற்காரர் பாய்விரித்துக் கப்பலை நடத்தினார்கள். கப்பலும் வெகு விரைவாய் ஓடிச்சென்றது. இரண்டு மூன்று நாட்களுக்குப்பின்னால், சண்டமாருதம் வீசியதனால் கப்பலுடைந்து, யாவரும் கடலாழம்பார்க்கப் போய்விட்டார்கள். சூல் இளவரசியிருக்கும் பெட்டிமட்டில் கடலில் மிதந்து மிதந்து சிலநாளைக்குப் பிறகு ஒரு கரையிற் சேர்ந்தது. அக்கடற்கரையில் தூண்டில் போட்டுக்கொண்டிருந்த ஒரு செம்படவன் அப்பெட்டியைத் தூக்கிக்கொண்டு, தன் குடிசைக்கு வந்து, அதைத் திறந்தான். அதனுள், விலையுயர்ந்த மேன்மையான வுடைகளையும் நவரத்தினாபரணங்களையும் தரித்த ஒரு பெண், பிரேதம்போன் றிருக்க

க்கண்டு திகைத்து, தூரவிலகிநின்று, நீ யார்? நீ யார்? என்று கேட்டுக்கொண்டிருந்தான். வெகுநேரம் வரையில் அப்பெண் கண்திறந்து பார்க்கவுமில்லை. மறுமொழி கொடுக்கவுமில்லை. அதனால், செம்படவன், அவளைப் பிரேதமென்று நினைத்து நகைகளைக் கழட்டி யெடுப்பதற்காக, அவளின் காலைப் பிடித்திழுத்தான்.

குல் இளவரசிக்கு, காலில் வருத்தமுண்டானதுடன், வேற்றானின் கை, தன் சரீரத்திற் பட்டதால், குலத்தளவே யாகுமாங்குணம், என்பதுபோல, நெற்றியிற் புருவமேறக் கோபமூண்டது. அதைக்கண்ட செம்படவன், அவள் குற்றுயிரா யிருக்கிறாளென்று தெரிந்து, கட்டவிழ்த்து, மிருதுவாகத்தூக்கி, காற்றோட்டத்தில் கிடப்பாட்டி, முகத்தில் தண்ணீரைத் தெளித்தான். பசியுடனும் தாகத்துடனும் களைப்புற்றிருக்கிறதாக குல் இளவரசி! செம்படவனுக்குக் கண்சாடையா லறிவித்தாள். அவன் சில காய்ந்த ரொட்டித் துண்டங்களைக் கொண்டுவந்து உடைத்து, அவளின் வாயிலூட்ட ஆரம்பித்தான். அச்சமையம் அவளுக்குக் கொஞ்சம் உசாருண்டாகி வந்ததால், அந்த ரொட்டியைத் தண்ணீரிற் கரைத்து, அதன் தெளிவை யென் வாயிலூற்றென்று மெதுவாய்ச்சொன்னாள். அவன் அதுபோற் செய்தான். இரண்டு மூன்று துளித்தண்ணீர், தொண்டைக்குழிக்கிறங்கவே, அவளுக்குக் கொஞ்சம் வலுவுண்டாச்சுது. பின்பு, அவனைப்பார்த்து, சகோதரரே, கொஞ்சம் குழம்பு கொண்டுவாருமென்றாள். அவன் தூண்டிலை யெடுத்துக்கொண்டு கடற்கரைக்குச் சென்றான். சர்வஜீவ ரக்ஷகக்கடவுள், அவனுடைய தூண்டிலில் ஒரு பெரிய மீனை மாட்டிவிட்டார். அவன் அதைக் கொண்டுவந்து கறி சமைத்து, அவளுக்கெதிரில் வைத்தான். அவள் அதில் கொஞ்சமெடுத்துப் புசித்தாள். காய்ந்த குடலில், குழம்பு சென்றவுடனே, அவளுக்குக் கண்ணுறக்கம் வந்துவிட்டது. செம்படவன் தலைமாட்டிலிருந்து சிறுதும்பு தொந்தரவு செய்யாமல் காத்துவந்தான்.

"குல்இளவரசி" சற்றுநேரத்தின்பிறகுவிழித்தெழுந்து, செம்படவனைப்பார்த்து, நீயார்? உன்னுடையதொழிலென்ன? என்னை நீ, எங்கே கண்டெடுத்து இங்கு கொண்டுவந்தாய்? தயை கூர்ந்து சொல்லென்றாள். செம்படவன், சந்தோஷமாய், பிரேதப்பெட்டி மிதந்துவந்த வரலாற்றையும், தான் எடுத்து வந்ததையுங் கூறி, தங்களை யிப்பெட்டிக்குள் அடக்கிக் கடலிலெறிந்த பாதகர் யாரென்று கேட்டான்.

"குல்இளவரசி" செம்படவனைப்பார்த்து, சகோதரரே, இச்சமையம் எனக்கு சக்தியில்லாதிருப்பதால், பிந்திக் கூறுகிறேனென்றாள். அவன், அதைப்பற்றிப் பிடிவாதம் பண்ணுமல் அவளுக்கு விருந்தளிப்பதிலும், பணிவிடைசெய்வதிலுமே பராக்காயிருந்தான் அவள் தூங்கினல், இவன் விழித்துட்கார்ந்து காவல் புரிந்துவருவான். அதனுல் குல் இளவரசி, அவன்பேரிலிரங்கி, அவனுக்கு ஏதேனும் தகுந்த ஒரு வெகுமதி கொடுத்து, அவனைச் சீமானுக்கவேண்டுமென்று நினைத்துக் கொண்டிருந்தாள். அப்படிக்கிருக்கும்போது, அவன், இளவரசியின் சமுகத்தில் வந்து நின்றான். தன் கையிற் போட்டிருந்த ஒரு வஜ்ரக்கல் மோதிரத்தை அவனுக்குக் கொடுத்து, சகோதரரே, நீர் வெகுநாளாய் ஒரு வேலைக்கும்போகாமல், என்னைப் பாதுகார்ப்பதிலேயே பராக்கா யிருக்கின்றீர். நம்முடைய வூண்தீன் குடிப்பு விஷயத்திலும் உமக்குக் கஷ்டமேற்பட் டிருக்கிறது. ஆகையால், நீர் இந்த மோதிரத்தைக் கொண்டுபோய் விற்றுக் கொண்டுவந்து, சிலநாள் வரையில் கஷ்டமில்லாமல் காலத்தைக்கடத்தும், கடவுள், உமக்கு நன்மையைக் கொடுத்து, துன்பந்துயரங்களைப் போக்குவிப்பாரென்றாள். செம்படவன், அம்மோதிரத்தை விற்று, குல் இளவரசிக்கு, மேன்மையான போஜனபதார்த்தங்களும், விதவிதமான வுடைகளும் செய்துகொடுத்துவந்தான். நாளாவட்டத்தில் இளவரசிக்கு, சரீரத்தில் வலுவேறி, முகத்தில் பிரகாசம் உற்பத்தியாய் வரவே, அவளின் விதி வேறேவிதமான வேடிக்கைகாட்ட ஆரம்பித்தது. செரு

படவன், நல்ல தின்பண்டங்களைப் புசித்துவந்ததால், இரத்த மூறித திரேகபுஷ்டி யடைந்தான். அதைக்கண்ட நாரதமுனி அவன் தலையிலேறிக்கொண்டான். ஒருநாள் செம்படவன், இளவரசியின் சமுகத்தில் வந்துட்கார்ந்து, என், நாயகியே, கடவுள் கிருபையால், தாங்கள் தற்போது சுகமடைந்து விட்டீர்கள். உத்தரவானால், கல்யாண முடித்துக் கொள்ளுகிறேன். நம்முடைய வாணாளுக்கு, என்ன நிட்சயமிருக்கிறது. கொஞ்சநாளவரையிலாவது தங்களுடன் சுகமனுபவிக்க நாடுகிறேனென்று வாய்கூசாமல் மடமடவென்று பேசினான்.

குல் இளவரசி ஆச்சரியமும், கிலேசமுங்கொண்டு, ஆ, கடவுளே, இதுதானா, என்னுடைய காலக்கிரகத்தின் கருணை? என்னுடைய நல்விதி யெங்கொளித்துக் கொண்டதோ, நீரே, அறிந்தவர். காகம், சூரியனைப் பூமாலை யாக்கிக்கொள்ள நினைத்ததுபோல செம்படவன் என்னைப் பெண்டாள நினைத்துவிட்டான். ஆ, கிருபைநிறைந்த கடவுளே, இவ்விதமான கெட்ட விதியை என் தலையிற் சுமத்தாமல் என்னைக்காப்பாற்றும். இல்லையேல், எனக்கு மரணத்தைக் கொடுத்தருளும். இப்போது இவனுடைய கேள்விக்கு, என்ன மறுமொழி கொடுக்கிறதென்பதை எனக்கு உதிப்புண்டாக்கிக் கொடுமென்று, கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள். செம்படவன், மாறியும் பெண்கள் சிகாமணியே, என் இவ்வளவு ஆலோசனை? உதவிக்குப் பிரதி, உதவியல்லவா? நான் தங்களுக்குச் செய்த வுபகாரத்திற்குப் பிரதியாக, தாங்கள் என்பேரிலிறங்கி, எனக்குப் பாரியாளாவதில இடைக்கட்டி நிற்கவேண்டாமோ? என்று கேட்டான். இதற்கிடையில், இளவரசியின் புத்தியில் நல்ல யோசனை தட்டுப்பட்டது. செம்படவனைப் பார்த்து, சகோதரரே, என்னுடைய இடை வலுக் குறைந்திருக்கிறது. சரீரம் பலஹீனமடைந்திருக்கிறது. எழுந்துநின்றால் தலை மயக்கங்காணுகிறது. உட்கார்ந்திருந்தால் உள்ளந் துடிக்கிறது. உம்முடைய இழுப்புக்கும் பறிப்புக்கும் என் சரீரம் தாங்கமாட்டாது.

நான் முழுவதும் சுகம்பெற்றவுடனே, உம் பிரியப்படி செய்து கொள்ள யாதொரு தடையுமில்லையென்று மறுமொழி கொடுத்தாள். செம்படவன். இவள் நம்மைவிட்டு எங்கே தப்பிப் போகப்போகிறாள். இன்னம் கொஞ்சநாள் பொறுத்துப் பார்த்துக்கொள்வோமென் றிருந்துவிட்டான். நாளுக்குநாள் நல்ல ஊண்தீன்களால் செம்படவனுக்குத் திமிரேறவேற, எப்போது நாம் இவளை மணந்து நம்மருகில் கிடத்துவோமோ என்கிற நாட்டத்துடன், இளவரசியிடத்தில் அடிக்கடி வந்து நளின வார்த்தைகளாடிக்கொண்டே யிருந்தான்.

சூல் இளவரசியும், அவனுக்கிணக்கமான மறுமொழி கொடுத்துவந்தாள். இவ்வாறாகச் சிலகாலங் கழிந்தது. இளவரசி, தான்மட்டி லிருக்கும்போது, ஹூர்முஜை நினைத்து, தாரைதாரையாய்க் கண்ணீர் வடிப்பாள். சிலசமையங்களில் தன் கால வித்தியாசத்தை நினைத்துக் கரைவாள், தன் மானம் போகாதிருக்கக் கடவுளை வேண்டுவாள். ஓடிப்போகலாமென்றால், காலில் வலுவும், சரீரத்தில் திடனுமில்லா திருந்தது. அதனால் மெத்தக் கலங்குவாள். சிலசமையங்களில் செம்படவனைத் தூக்கத்தில் கொன்றுபோட நினைப்பாள். அவன் செய்த வுபகாரத்தை நினைத்து அவ்வெண்ணத்தை விடுவாள். அப்படிக்கிருக்கும்போதொருநாள், செம்படவன் ஏதோ ஒரு வேலைக்காக வெளியிற் போயிருந்தான். அச்சமையம், சூல் இளவரசி, கடவுள் நம் காலில் வலுவைக் கொடுத்திருக்கிறாரா வென்பதைக் கிஞ்சிற்று பரீக்ஷித்துப் பார்ப்போமென்று, வெளியில் வந்து, அங்குமிங்கும் சற்றுநேரம் உலாவினாள். சிலநாளைக்குள்ளாக இரண்டாயிரம் தப்படித்தூரம் நடக்கப் பழக்கிக்கொண்டாள். ஒருநாள் தன் நகைபடங்கலையும் கழட்டி. செம்படவன் கையிற்கொடுத்து சகோதரரே, இவைகள் விலையுயர்ந்தவைகளானதால், வர்த்தகர்கள், இலாபத்தை யிச்சித்து, அதிக விலை கொடுக்கமாட்டார்கள். பாரிய வுத்தியோகஸ்தர்களானால், நகைகளின் அருமைத்தரக, அதிக விலைகொடுத்து வாங்குவார்கள். ஆகையால் சீக்

கிளம்போய் விற்றுக்கொண்டு வாருமென்றாள். செம்படவன், நாயகியே. இங்கிருந்து ஒருகாத தூரத்தில், மாச்சீன் அரசரின் பிரதான பட்டணமொன்றிருக்கிறது. இன்று என்றால் போக முடியாது. நாளைக்காலமே போய்விட்டு, சாயுங்காலம் வந்து சேருகிறேன். இனிமேல் சாகுமளவும் வெளியிற் போகவே மாட்டேனென்றான். குல் இளவரசி, ஆம், ஆம், சகோதரரே, என்னுடைய எண்ணமும் அப்படிக்கே யிருக்கிறதென்றாள். இந்தப்படிக்கு இருவரும் பேசிக்கொண்டிருந்து, நித்திரை போய் விட்டார்கள். பொழுது விடிந்தவுடனே, செம்படவன், நகைகளை யெடுத்துக்கொண்டு, மாச்சீனுக்குப் போய்விட்டான்.

குல் இளவரசி, ஆண்வேடம் பூண்டு வெளிப்பட்டு, பட்டணத்தை முன்னோக்கி விரைந்து நடந்து அவ்வூர் அரசரின் சிங்காரவனத்திற்கு வந்துசேர்ந்தாள். அதைக்கடந்து முன்னேற அவளுக்குச் சக்தியில்லாமல். இடைக்கட்டை யவிழ்த்துத் தரையில் விரித்து, அதின்மேல் படுத்திருந்தாள். அப்படிக்கிருக்கும் போது, திடீரென, அவ்வூர் அரசரின் புத்திரி, சிங்காரவனஞ் சுற்றி யுலாவவந்தாள். குல் இளவரசியைக்கண்டு, ஆண்பிள்ளை யென்று மோகமுற்று, தட்டழிந்து, தன் தாதியைப்பார்த்து தாதியே, அதோ படுத்திருக்கிற நெருப்பின் துளிர் என்னைக் கொன்றுவிட்டது. அவரை அழைத்துவா. என் ஆசையை நிறைவேற்றிக்கொண்டு அனுப்பிவிடுகிறேன். இல்லாதுபோனால் இந்த ஜன்னல் வழியாய்க் குதித்து என் உயிரை மாய்த்துக்கொள்கிறேனென்று, இரகசியமாய்ச்சொன்னாள். தாதியானவள்,குல்இளவரசியின் சமுகத்தில் வந்து மகனே. எங்களரசி உம்பேரில் மோகமுற்று பிணம்போன்று கிடக்கின்றாள். ஆகையால், கிருபைகூர்ந்து, என்னுடன் வந்து அவளுக்கு இன்பத்தைக் கொடுத்து உயிர்ப்பியுமென்றாள். குல் இளவரசி, தட்டழிந்து இதென்னடா பேரிழவு; நித்திரையிலிருந்த எனக்கு இத்துன்பம் எங்கிருந்து வந்தது. கடவுளே, எனக்கு மரணத்தைக் கொடும். அல்லவென்றால், என் பேரிலிரங்கி, என் பிரிய நேசராகிய ஹா

ர்முஜருடன் என்னைச் சேர்த்துவையும். நான் அடைந்த கஷ்டம் போதாதா? இனிமேலும் துன்பம் அனுபவிக்க என் சரீரத்தில் சக்தியில்லையென்று தன் மனதுக்குள்ளே நினைத்து, தாதியை யுறுச்சிப்பார்த்து, விருத்தையே, நானோ பரதேசி. இராஜாத்தியானாலும் சரி அடிமைப்பெண்ணானாலுஞ் சரி, எனக்கவசரமில்லை, போவென்றாள். தாதி, மாச்சீன் இளவரசியிடத்தில் வந்து செய்தியறிவித்தாள்.

அவள், கண்களில் தீப்பொறி தெறிப்பச்சினந்து, தாதியே, இன்னொரு தடவை, நீ, அவனிடத்திற் சென்று, எவ்விதத்தாலாவது, அவனை வசப்படுத்தி, இங்கழைத்து வந்துசேர். அவனுடைய ஆசை, என்னை அலப்பிக்கொண் டிருக்கிறபடியால் ஒரு தடவையாவது, அவனுடைய பரிசவுணர்ச்சியை நான் பெறவேண்டும். இல்லாதுபோனால், விருதாவில் என் உயிர் பிரியத்தடையில்லை. சீக்கிரம் போய்வர்வென் றனுப்பினாள். தாதி, குல் இளவரசியிடத்தில் வந்து, மகனே, நீர், எங்கள் இளவரசியின் மனோபீஷ்டத்தை நிறைவேற்றுவிய்யும். இல்லாதுபோனால் மெத்த கஷ்டப்படும்படி செய்வாளென்று பயமுறுத்தினாள். குல் இளவரசி, தாதியைப்பார்த்து, நீங்கள் என்னை இவ்விடத்தில் சற்றுநேரமிருந்து களையாற விடமாட்டீர்கள் போலிருக்கிறது. இதோ நான் போய்விடுகிறேன். என்று சொல்லிவிட்டெழுந்து நடந்தாள். கிழத்தாதி, தன் இளவரசியிடத்தில்வந்து குல் இளவரசியின் வார்த்தைகளைக் கூறினாள். அவள், ஓஹோ, அவ்வாலிபன் நம்முடைய வலையுள் சிக்கமாட்டான் போலிருக்கிறது. நாமும் இன்பம்பெற வழியில்லை. இவ்விஷயம் பிறரிடத்தில் வெளிப்படுத்தக் கூடியதுமல்ல. நல்லதிருக்கட்டும். அவனுக்குப் புத்தி சற்பிக்கிறேன், என்று மனதுள் நினைத்து ஓஹோ, காவற்காரர்களே, அதோ போகிற மனிதன், என்னுடைய படுக்கையறையுள் நுழைந்துவிட்டுப் போகிறான். நான் அச்சமையம் விழிக்காதிருந்தால், என்னையும் மோசப்படுத்தியிருப்பான். அவனைப்பார்த்தால், பெரிய கள்ளனாய்ப் புலப்ப

டுகிறான். அவனைப் பிடித்துக்கொண்டு வாருங்களென்று கூக்குரலிட்டாள். காவற்காரர்கள் விரைந்து சென்று, குல் இளவரசியைப் பிடித்துக்கட்டி, அவ்வூர் அரசரின் சமுகத்தில் நிறுத்தினார்கள். அரசர், தன் புத்திரியை விசாரித்தார் அவள், என் பிதாவே, இவன் கன்னக்கோல் வைத்து, சுவரைத்துளைத்து, என் அறைக்குள்வந்து, நான் படுத்திருந்த கட்டிலின்மீது கால்வைத்து என்னைக் கட்டியணைத்துத் தூக்கினான். எனனுடைய நல்ல விதியாக்கும். எனக்கு விழிப்புண்டாயிற்று. இல்லாதுபோனால், இவன் என்னை என்ன செய்வானோ கடவுள்தான் அறிவாரென்றாள்.

அரசர், உக்ரகோபங்கொண்டு, கண்களில் தீப்பறக்க, குல் இளவரசியை உறுக்கிப்பார்த்து, மளுவர் வசத்தில் அவனையொப்பிவித்துக் கழுவிலேற்றிக் கொல்லும்படிக்குக் கட்டளையிட்டார். மளுவர்கள், அவனை யிழுத்துக்கொண்டு, கொலைக்களத்துக்குப் போய், கழுமரத்தடியில் நிறுத்தினார்கள். ஒரு மனிதன் குல் இளவரசியின் தலைப்பாகையைக் கழட்டினான். அவளின் அளகம், சர்ப்பத்தின் நெளிச்சலைப்போல நெளிந்து குழைந்து பாதம் வரையில நீண்டு விழுந்தது. தனபாரங்களின் கதிப்பு கிஞ்சிற்று காணபபட்டது அங்கு நின்றவர்களடங்கலும், கூந்தலையும், தனத்தின் அடையாளத்தையும் பார்த்துப்பார்த்து பிரமிப்படைந்து, நின்றார்கள். அவர்களுள் ஒருவன், ஜனங்களே இவள், பெண்பிள்ளையென்பதில் யாதொரு சந்தேகமு மில்லை. வெறுமனே குற்றஞ்சாட்டிப் பிடிக்கப்படிருக்கிறதாக நம்புகிறேன். ஆகையால் நீங்கள், அரசர் சமுகத்தடைந்து, கொலுத் தீர்ப்பை மாற்றக் கேட்டுக்கொள்ளுங்களென்றான். அவர்களுள் சிலர், அரசரிடத்தடைந்து வணங்கி, எஜமானே, இந்த மனிதன்பேரில், பெண்ணென்னும் சந்தேகம், ஏற்பட்டிருக்கிறது. அதைப் பரிசோதித்தறிந்தபிறகு, கழுவேற்றுவதே, உசிதமாய்க் காணப்படுகிற தென்றான். அரசர், ஒரு பெண்ணை வரவழைத்துப் பரிசோதிக்கக் கட்டளையிட்டார். அவள், குல் இள

வரசியைப் பரிசோதித்து, அரசர் நாயகமே, இவள் சரியான இளம்பருவக் கன்னிகையா யிருக்கிறாளென்றாள். அரசர் குல் இளவரசியைத் தனித்த ஒரு தலத்துக் கழைத்துபோய் அவளின் வரலாற்றைப்பற்றி விசாரித்தார். அவள் ஆதிமுதல் அந்தம் வரையில் தன் வரலாற்றை சவிஸ்தாரமாய்க் கூறினாள். அரசர், தன் புத்திரியின் செய்கையைப்பற்றி ஆச்சரியமும், சினமுங்கொண்டு, தன் புத்திரியைக் கழுவேற்றிக் கொன்று விட்டு, குல் இளவரசியைப்பார்த்து, இன்றுமுதல், நீயே யெனக்குப் புத்திரியா யிருப்பாயென்று கூறி, அந்தப்புரத்துக்கு அவளையனுப்பினார். இரவு பகலாய், அவள்பேரில் தன் புத்திரியைவிட ஆதிகமான கிருபை பாராட்டிவந்தார்.

குல் இளவரசியும், அவரைத் தந்தையாகப் பாவித்து மரியாதை புரிந்துவந்தாள். சிலநாளைக்குள் அவள் முகத்தில் பிரகாச முண்டாயிற்று. சரீரம் தெளிந்து பொன்னிறமாயிற்று. ஒருநாள அவள், ஸ்நானஞ் செய்துகொண்டிருந்தாள். திடீரென்று, அரசர் அங்குவந்து, அவளைக் கண்டுவிட்டார். அவளின் சரீரத்தின நிறம் அவருடைய வுணர்வைப் போக்கிற்று. தனங்கள் நெஞ்சைத் துளைத்துவிட்டன. விரகவேதனை மீறிற்று. உறுப்பினங்களில் விலவிலப்பும், விறைப்பு முண்டுபட்டன. புத்திரியென்று பேரிட்டுவிட்டு, பெண்சாதி யாக்கிக்கொண்டால் நம்மை வெட்கங் கெட்டவனென்று வுலகம் தூற்றாது விடாதே. இதற கென்ன செய்கிறதென்று பலவாறு சிந்தித்து, கடைசியில் மார்க்கபோதகரை யழைத்து, ஒரு பெண்ணை புத்திரி யென்றழைத்தபிறகு, அவளைக் கலியாணமுடித்துக்கொள்ள மார்க்க மிடங்கொடுக்குமோ வென்றுகேட்டார். அவர் தடையின்றிச் செய்துகொள்ளலாம் என்று மறுமொழி கொடுத்தார். அரசர், ஒரு பெண்பிள்ளையை, குல் இளவரசியிடத்திற் கனுப்பி இனிமேல் தன்னைப் பிதாவென்று கூப்பிடவேண்டாமென்றும், நீயே, என வீட்டுக்குத தலைவியும், எனக்குப் பக்கததுணைவியுமா யிருக்கப்போகின்றாயென்றும், சொல்லி வரச்செய்தார். அதுபோல்

அவள், வந்து கூறினாள். ஐயோ பரிதாபம். கொஞ்ச நாளாய் இவ்விதச் சங்கடத்தைவிட்டு நீங்கியிருந்த குல் இளவரசி, மறுபடியுமா நாம் சங்கடப்பட நேரிட்டதென்று மனங்கலங்கி, சற்றுநேரத்தின் பிறகு, தூது வந்தவளைப்பார்த்து, தாதியே, நீ என் பிதாவாகிய, உன் அரசரிடத்திற் சென்று, ஆண்பிள்ளைகளுக்கு வாக்குத்தத்தத்தை நிறைவேற்றுகிற குணமில்லையோ வென்றும், இந்தப்படிக்கான எண்ணமிருக்கிறபோது, என்னைப் புத்திரியென்று ஏன் ஒப்புக்கொள்ள வேண்டுமென்றும், இப்போது தங்கள் சொல்லுக்கு நான் வசப்பட்டிருந்த போதிலும், உலகம் நகைப்பதைப் பயப்படவில்லையாவென்றும், நான் கேட்டுவரச் சொன்னதாய் சொல்லென்றாள். தாதியானவள், அரசரிடத்தில், குல் இளவரசி கூறியவைகளை விபரமாய்க் கூறினாள். அரசர், இச்சொற்களைக் கேட்டவுடனே, அந்தப்புரத்துக்குவந்து, குல்இளவரசியைப்பார்த்து, பெண்ணே, உன்னை நான் பாரியாளாக்கிக்கொள்ள நம்மார்க்கம் இடங்கொடுக்கிறது. மார்க்கபோதகரிடத்தில் அவ்விஷயத்திற்காக, தஸ்தாவேஜியும் வாங்கியிருக்கிறேன். அதில் யாதொரு குற்றமும் அவமானமுமில்லையென்றார். குல் இளவரசி, எஜமானே, தாங்கள் நீதியுடையவர்களாயிருக்கிறீர்கள். எனக்கு நேரிட்ட கொலைத்தீர்ப்பை மாற்றித் தங்கள் புத்திரியைக் கழுவேற்றிக்கொன்றதே, தங்களின் நீதியை ஸ்திரப்படுத்தி நிற்கிறது. இப்போது பெண்டாள நினைக்கின்றீர்கள். நான் ஒருக்காலும் சம்மதிக்கமாட்டேன். என்னை வெறுமனே வும்பிக்காதீர்கள். என் உயிரைத் தாங்கள் காப்பாற்றியதற்குப் பிரதி வேண்டுமானால் நான் தங்களின் அடிமையாயிருந்து பணிவிடை புரிந்துவருகிறேன். இப்போது தாங்கள் சொல்லுகிற ஒரு விஷயத்தைத் தவிர, மற்ற கட்டளைக்கு நான் மாறு செய்தால் பாபிஷ்டியாவேன். என்று வெகு மரியாதையுடன் விடை கொடுத்தாள்.

அரசர், ஆ, என் பெண்ணே, நீ சொல்வதெல்லாம் சரியாயிருந்தாலும், உன்பேரில் நான் கொண்டிருக்கும் மோகத்தால்

சாகப்பார்க்கிற எனக்கு அவையெல்லாம் செவிபிலேறமாட்டா தாகையால் உன்னை நான் மணம்புரிவதைத்தவிர வேறுபேச்சில்லையென்பதை உறுதியாய் நம்பென்றார். குல் இளவரசி, தன் இடையில் மறைத்துவைத்திருந்த குற்றுடைவாளையெடுத்து அவருக்குக் காண்பித்து, தேவைப்படும்போது, இதனாலேயே, என் உயிரைப் போக்கி, என் மானத்தைக் காத்துக்கொள்வேனென்பதைத் தாங்கள் ஞாபகத்தில் வைத்திருங்களென்றாள். அரசர், மனவருத்தத்துடன் வெளிப்பட்டுப்போய், சில தாதிப் பெண்களிடத்தில், விதவிதமான விலையுயர்ந்த அருமையான நகைகளையும், கோடிக்கணக்கான திரவியங்களையும் கொடுத்து, இவைகளை நீங்கள் குல் இளவரசிக்குக்கொடுத்து, எவ்விதத்தாலாவது அவளை வசப்படுத்தி, என் மனப்பிணி நீங்கச்செய்யுங்களென்றனுப்பினார். அப்பெண்கள், குல் இளவரசியிடத்தில்வந்து பணத்தையும், நகைகளையும் கொடுத்து, எங்கள் எஜமானியே, தாங்கள், எங்களரசரின் பட்டத்தரசி யாகுங்கள். தாங்களல்லவோ, அவர்பேரில் ஆசைப்படவேண்டும். அவர் தங்கள்பேரில் இச்சைகொண்டு, இவ்வளவு பொருளையும் நகைகளையும் கொடுத்திருக்கிறது, எவ்வளவு பெரிய பாக்கியம். தாங்களும் எதுவரையில் பூலோக இன்பசுகத்தைப் பெறுமல் தனித்திருப்பீர்கள். ஒருமுறை, அந்த இன்பத்தைத் தாங்களனுபவித்தாலன்றி, அதின் குணம் இத்தகையென்று தெரியமாட்டாதென்று, அநேக மோகவார்த்தைகளாடினார்கள். குல் இளவரசி, தாதிப்பெண்களே, நீங்கள் எனக்கு மோகமூட்டப் பார்க்கிறீர்கள். உங்களுக்கே உங்களின் பேச்சுக்கள் தந்திரமாகத் தெரியும். நானோ; நீங்கள், அச்சத்தாலும், அறிவீனத்தாலும், பைத்தியங்கொண்டு புலம்புகிறதாக நினைத்துக்கொண்டிருக்கிறேன். ஆகையால், என் மூளையைக் கலக்காதீர்கள். என்னைக் கொல்லவந்திருக்கிறதானாலும், அதைத் தெளிவாய்ச் சொல்லுங்கள். மானத்தைவிட வுயிரைப் பெரிதாய் மதிக்கிறபிறவி நானல்ல. உங்களின் கபடவார்த்தைகளெல்லாம் என்னிடத்தில் பலிக்கமாட்டாது. போய்விடுங்களென்றாள்.

தாதிப்பெண்கள், கைசேதத்துடன், அரசர் சமூகத்தடைந்து, எஜமானே, எங்களாலானமட்டுக்கும் போதித்தோம். ஒருவருடைய சொல்லையும் அவள் கேட்கவில்லை. நாங்கள் திரும்பி வந்துவிட்டோம். தாங்கள் சகலத்திற்கும் எஜமானுயிருப்பதால் அவளை யென்ன செய்யத் தங்களுக்குப் பிரியமோ, அப்படியே செய்துகொள்ளலாமென்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்கள். அரசர், எதையோ தன் மனதில் நினைத்துக்கொண்டு, ஸ்நானஞ் செய்தார். மேன்மையான வுடைகளணிந்தார். வாசனை பூசிக்கொண்டார். தாடிவார்ந்து, கண்களில் அஞ்சனந் தீட்டிக்கொண்டார். பின்பு இளவரசியிருக்கும் அறைக்குள்வந்து, சந்தோஷக் குறிப்புக்காட்டி, அவளின் பாதத்தில் தன் தலையை வைத்துப் பணிந்தார். குல் இளவரசி, நெற்றியிற் புருவமேறக் கோபங்கொண்டு, எஜமானே, என் குற்றத்தை மன்னியுங்கள். இத்தலத்தைவிட்டு வெளிப்பட்டு விடுங்கள். முன்பேசிய பெண்ணென்னும் பேச்சை வாயிலெடுக்காதீர்களென்றாள். அரசர், அவளிலும் அதிக கோபமுடையவராய், ஏடி, என் கட்டளைக்கு மாறு செய்கிறவளே, நீ என்னென்னவோ புலம்புகின்றாயே. நீ, என் கையில் சிக்குண்டிருக்கிறதை அறியவில்லை போலிருக்கிறது. நான் உன்னை பலவந்தமாய்க் கிடத்தி மேலேறிக்கொண்டால் நீ என்ன செய்வாய் சொல்லென்றார்.

குல் இளவரசி ஏ, மார்க்கமுறைதவறிய மட்டியே. நீ, என்னபேச்சுப் பேசுகின்றாய்? உனக்கு வெட்கமும் உரோஷமும் இல்லையா? இவ்வுலகம் உயிரைக்காப்பாற்றுவதற்கு மட்டிலென்று நினைக்கின்றாய்? நான் என் சீவனை, மானத்துக்குப் பலியளித்து விட்டிருக்கிறேன். இது கத்தி. இது, கண்டம், எங்கே என்பேரில் உன் கையை நீட்டிப்பார். அடே, மடையா, இவ்வளவு துணிந்து பேச, எனக்கு இடங்கொடுத்தது நீயல்லவா? அத்துணிவுக்குத் துணையாயிருக்கிறது. இக்குற்றமுடையவாளின் பாக்கியமல்லவா? இதில்தான் மானமிருக்கிறது. இதிலதான் ப்ாபவிமோசன மிருக்கிறதென்று கடிந்து கூறினாள். அரசர்,

இச்சொற்களைக் கேட்டவுடனே, கோபமீறியவராகத் திரும்பி அரசாக்ஷிமண்டபத்தில் வந்துட்கார்ந்து, மந்திரிமார்களிடத்தில் அந்தப்புரத்தில் நடந்தவைகளைச் சொல்லிக்காட்டி, ஆலோசனை கேட்டார். மந்திரிமார்கள், எஜமானே, இவள் ஒரு பெண்பிள்ளை. இரும்பும், நெருப்பைக் கண்டால் இளகிப் போகிறது. இவளை சிறைசசாலையிலடைத்து கஷ்டப்படுத்தினால் திமிரடங்கி நம்முடைய சொல்லுக்கு வசப்படுவாள். அப்போது தங்கள் மனோபீஷ்டத்தை நிறைவேற்றிக் கொள்ளலா மென்றார்கள். அது அரசர் புத்திக்குச் சரியானதாய்க் காணப்பட்டமையால், குல் இளவரசியின் கால்களில் விலங்கிட்டு, சிறைச்சாலைக் கனுப்பினார். அங்கே, அவள், பகலெல்லாம் மவுனமுற்றிருப்பாள். இரவில் வாசனை கமழ்த்தப்பட்ட கூந்தலை விரித்துப்போட்டு, தன் பிரிய நேசராகிய ஹுர்முஜையும், தனக்கு நேரிட்டிருக்கும, துன்பங்களையும் நினைத்துப் புலம்பி ஓலமிடுவாள். அவள் படும் கஷ்டத்தையும், அவளின் புலப்பத்தையும், இத்தகையென்று கூற யாவராலுமியலாது. கல்மனமெல்லாம் கரைந்து நீராகு மென்பதில் சந்தேகமில்லை. இவ்வளவு கஷ்டத்துடன் சிறைச் சாலையிலிருந்து வந்தாள்.

——:(*):——

## 28-ம் அதிகாரம்.

### காவற்காரன் கடிதங் கொண்டுபோனது.

——:○:——

குல் இளவரசி, வெகுநாள்வரையில் சிறைச்சாலையில் கஷ்டத்துடன் காலம் போக்கி வந்தாள். ஒருநாளிரவில், அவளின் புலப்பம், அங்கு காவல்புரிந்துநின்ற, சற்குணசாலியாகிய ஒரு வயோதிபரின் காதில் விழுந்தது. அவளின் புலப்பம் நின்றபிறகு, அவர் இப்பெண் துன்பத்தில் சிக்குண்டவளாகவும், யார் பேரிலோ மோகமுற்றவளாகவுங் காணப்படுகிறாளென்று நினைத்து, இரக்கமுற்று குல் இளவரசியின் சமுகத்தடைந்து, மகளே, நீ ஏன் இவ்வளவுதூரம் துயரப்பட் டழுகின்றாய்? ஒரு

நாழிகை நேரமாவது நித்திரைபோகின்றுயில்லையே. ஒளிக்காமல் என்னிடத்திற் சொல்வையேயானால், ஒருக்கால், என்னால் உனக்குதவி கிடைக்கவுங் கூடுமென்று நினைக்கிறேனென்று வெகுவுருக்கமாய்க் கேட்டார். குல் இளவரசி, முதியவரே, தப்பிதமின்றிச் சிறைப்படுத்தப்பட்டிருக்கிற நான் அழாமலும், உயிரைப்போக்கத் துணியாமலு மிருக்கக்கூடுமா? வென்பதைத் தாங்களே யோசித்துப்பாருங்களென்றாள். விருத்தர், மகளே, நீயேன், இராஜபத்தினியாக மாட்டேனென்கிறாய்? அதில் உனக்கு நயமிருக்கிறபடியால் உன் பிடிவாதத்தை விட்டுவிடு, நீ அவருக்குப் பாரியாகப் பிணங்கினால் ஒருக்காலும் அவர் உன்னை விடப்போகிறதில்லை. துராகிருதப்புணர்ச்சிக் காரம்பித்து விட்டாரே யானால், அது காலாகாலமெல்லாம் அவமானமாகிறதை நான் பயப்படுகிறேனென்றார். குல் இளவரசி, விருத்தரே, இது கூடாத விஷயம். இதைப்பற்றி அதிகமாய் என்னிடத்தில் பேசவேண்டாம். நான் அழுதுகொண்டிருப்பதில் எனக்கு ஆறுதலிருக்கிறபடியால் தாங்கள் போய்விடுங்களென்றாள். விருத்தர், மகளே, தங்களுடைய பிடிவாதத்தைப் பார்த்தால், அது தங்களைச் சிறந்த ஒரு இராஜபுத்திரியாகக் காண்பிக்கிறது, ஆனதால், எங்களரசரின் பட்டத்தரசியானால் மெத்த வுத்தமம். அல்லவென்றால், என்னிடத்தில் தங்களின் அந்தரங்கத்தை வெளிப்படுத்துங்கள். என்னாலாகக்கூடிய வேலையாயிருந்தால் தடையின்றிச் செய்துவைக்கிறேன். நான் தங்களைப் புத்திரியாகப் பாவித்துவிட்டபடியால், என் விஷயத்தில் எவ்விதமான சந்தேகமும் வைக்கவேண்டாமென்றார்.

குல் இளவரசி, விருத்தரே, தாங்கள் என்னைப் புத்திரியென்று சொன்ன விஷயத்தில் நான் அதிக வெறுப்பும், அச்சமுமுடையவளா யிருக்கிறேன். உங்கள் அரசரும் அவ்வாறாகவே முறைகொண்டாடி, அப்பால் பெண்டாளத் துணிந்தாரென்றாள். விருத்தர், மகளே, நான் ஏழையாகவும், அறுபதுக்கு மேற்பட்ட வயதை யுடையவனாகவும், வாலிபதன்மை யிழந்

தவனுகவு மிருப்பதால் ஒருக்காலும் நான் அரசரைப்போ லாக மாட்டேன். தங்கள் காலடியில் சேவித்துக்கொண்டிருப்பேன். தாங்கள் தங்களின் காரியத்தை யெனக்குச் சொல்லுங்கள். அதற்குப்பிரதி யென்னுல் செய்யப்படுவதைப் பின்னுல் தாங்களே அறிந்து சந்தோஷப்படுவீர்கள். கடவுள் பேரிலும், அவரின் கட்டளையின் பேரிலும் சத்தியமாக நான் தங்களுக்கு உதவி செய்பவனு யிருப்பேனே யல்லாது, ஒருக்காலும் கெடுதி செய்கிறவனு யிருக்கமாட்டே னென்பதை நம்புங்கள். தங்கள் பேரில் என் மனம் மெத்தவும் உருக்கம் பாராட்டுகிறது. சீக்கிரம் சொல்லுங்களென்றுர். குல் இளவரசி, விருத்தரின், கிருபையான வார்த்தைகளைக் கேட்டு, இவர் நற்சிந்தை யுடையவராய்க் காணப்படுகிறுராதலால், இவர் மூலமாய் கடவுள் நமக்கு நலத்தைத் தருவாரென்று, தன் மனதை ஸ்திரப்படுத்திக்கொண்டு, விருத்தரே, தாங்கள், "ஹார்முஜ்" "குல்" என்பவர்களின் பேரையும், அவ்விருவர்களின் சங்கதிகளையுங் கேள்விப்பட்டிருக்கிறீர்களா வென்று கேட்டாள். விருத்தர், மகளே, அவ்விருவரின் பெயர்களும், சரித்திரங்களும், உலகத்திலுள்ள ஆண், பெண், வாலிபர், விருத்தாப்பியர், சிறுவர்கள் முதலான ஒவ்வொருவரின் நாவிலும் நடமாடிக்கொண் டிருக்கும்போது, நான் எவ்விதத்தில் அறியாதிருப்பேன். குல் இளவரசியைப் பிரேதப்பெட்டியிலிட்டு, சில மனிதர்கள், ஈரானுக்குக்கொண்டு போகிறபோது, கப்பலுடைந்து, பிரேதப்பெட்டி யெங்கேயோ மிதந்துக்கொண்டு போய்விட்டதென்றும், கடலில் ஆழ்ந்து விட்டதென்றும் சந்தேக முண்டுபட்டிருக்கிறது. ஹார்முஜ், அரசரின் மனிதர்களில் கோடிக்கணக்கானோர், அப்பெட்டியைத்தேடி, உலகத்தின் பலபாகங்களிலும் திரிந்துகொண்டிருக்கிறுர்கள். அவர்கள் போகாதவூர் ஒன்றேனுமில்லை. அவ்வளவு பிரயாசையெடுத்தும் ஒரு விதமான பலனையும் அவர்களடையவில்லை. அதனுல் "ஹார்முஜ்" மிகுந்தகவலை யடைந்தவரா யிருக்கிறுரென்று கேள்விப்பட்டிருக்கிறேனென்றுர்.

"குல் இளவரசி" இச்சமாச்சாரத்தைக் கேட்டவுடனே, தேம்பித்தேம்பி, வெகு நேரம்வரையில் அழுதுகொண்டிருந்து, பின்பு, விருத்தரைப்பார்த்து, என்பிதாவே! அந்த விதிகெட்ட, குல், என்பவள் நான்தான். ஹூர்முஜென்பவர் தான், என் பிரிய நேசர். அவரும் இரவுபகலாய், என்னை நினைத்து அழுது சஞ்சலப்பட்டு, உயிரிழக்குந்தறுவாயி லிருப்பாரென்பதில் ஐயமில்லை. எனக்கு, இறகிருந்தால் பறந்துபோய் அவருடன் சேர்ந்துக்கொள்வேன். என்று சவிஸ்தாரமாய் தன் வரலாற்றைக் கூறினாள். விருத்தர், குல் இளவரசியின் சமாசாரத்தைக்கேட்டு, அவள்பேரில், அதிக கிருபையுடையவராய், மகளே, தாங்கள் யாதொன்றையும் கவனிக்காமலும் கலங்காமலுமிருங்கள். இதோ, நான் ரோமாபுரிக்குப்போய், ஹூர்முஜ் அரசரிடத்தில் தங்களுடைய சங்கதியைத் தெரியப்படுத்திவிட்டு, அதி சீக்கிரத்தில் இங்குவந்து சேருகிறே னென்றார். குல் இளவரசி, பிதாவே, தாங்கள் கூறியபடி, சீக்கிறத்தில் பிரயாணத்துக்குத் தயார்ப்படுத்தும்படி மிகவுங் கேட்டுக்கொள்ளுகிறே னென்றாள். விருத்தர் அங்கிருந்து வெளிப்பட்டு, அரசர் சமுகத்தடைந்து, எஜமானே, என் புத்திரனுடைய விவாக முகூர்த்தகாலம் சமீபித்துவிட்டதால், நான் போய்வர வுத்திரவு கொடுக்க வேண்டுகிறேனென்றார். அரசர், காவற்காரரே, நீர், நல்ல கருமத்தை நாடிப்போகிறபடியால், நான் தடுக்கக்கூடாது. நீர் திரும்பிவருகிறவரையில் உம் சகோதரரை, உமக்கு பதிலாக வைத்துவிட்டு, சீக்கிறம் போய்வாருமென்று வுத்தரவளித்தார், விருத்தர், ஆனந்தமுற்றவராய், குல் இளவரசியிடத்தில் வந்து, விடைவாங்கிக்கொண்டு, தன் சகோதரர்வசம், தன் அலுவலை ஒப்பித்து, குல் இளவரசியின் கட்டளைப்படி நடத்திவரவும், அவளுக்கு யாதொரு இடைஞ்சலுஞ் சம்பவிக்காதபடிக்கு, வெகு ஜாக்கிறதையுட னிருந்து வரவும் வேண்டுமென்று, அவருக்கு சொல்லவேண்டிய முறைப்படி சொல்லிமுடித்தார்.

——:(*):——

## 29-ம் அதிகாரம்.

### விருத்தர் ரோமாபுரிக்குச் சென்று மீளல்.



விருத்தர், குல் இளவரசி யிடத்தில் விடை பெற்றுக்கொண்டு, பிரயாணமாகி, மாச்சீன் எல்லையைக் கடந்து, ரோமாபுரி யெல்லையிலாகி, எதிர்ப்பட்டவர்களிடத்தில் வழி கேட்டுக்கொண்டே போய்க்கொண் டிருக்கும்போது, ஒரு நாள், திடுகூருக ரோமாபுரி வாசி ஒருவரைக் கண்டு, அவரிடத்தில், ரோமாபுரி வழியைப்பற்றி விசாரித்தார். அவர் விருத்தரே, நீர் யார்? எதற்காக ரோமாபுரிக்குப் போகின்றீரென்று கேட்டார். விருத்தர், சகோதரரே, நான் குல் இளவரசியின் தூதன். மாச்சீனிலிருந்து, ஹாமுர்முஜ் அரசரிடத்துக்குப் போகிறேன். நான் வழிதப்பிக் கெட்டலையாதபடிக்கு, ரோமாசிக்குப்போகும் வழியைக் காட்டினல், நீர் எனக்குச்செய்த நன்றிக்குப் பிரதி, கடவுள் உமக்குச் செய்வாரென்ருர். அவர் ஆச்சரியமுற்று, விருத்தரே, நீர், குல் இளவரசியின் தூதர்தானு? அல்லது வேவு பார்க்க வந்தவரா? நிசத்தைச் சொல்லுமென்று கேட்டார். விருத்தர், சகோதரரே, பொய் சொல்வதில் என்ன பிரயோசனமிருக்கிறது? பொய் சொல்லவேண்டுமென்கிற அவசியந்தானென்ன? அதனல் ஆகப்போகிற தென்ன? ஒன்றுமில்லை. ஆதலால் உம்முடைய சந்தேகத்தை நீக்கி, எனக்கு வழிகாட்டுமென்ருர். அவர். விருத்தரை, குல் இளவரசியின், தூதர்தானென்று நம்பி, விருத்தரே, நானும், குல் இளவரசியைத் தேடிச் சென்று, வெறுமனே திரும்பிவருகிறேன். வாரும், நாமிருவரும் விரைந்து நடந்து, போவோமென்று விருத்தரைக் கூட்டிக்கொண்டு ரோமாபுரிக்கு வந்து சேர்ந்து, அவரை அரண்மனை வாசலில் இருக்கச் செய்துவிட்டு, தான் ஓடிப்போய், ஹாமுர்முஜ் அரசரைப் பணிந்து வணங்கி, எஜமானே, குல் இளவரசியின் தூதர் மாச்சீன் தேசத்திலிருந்து, தங்களைத் தெரிசிக்க வந்தி

ருக்கின்றார். இதோ அழைத்துக்கொண்டு வருகிறேன். எனக்கு தக்க வெகுமதியளிக்கக் கட்டளை யிடுங்களென்று கூறி வெளியில் வந்து விருத்தரை யழைத்துக்கொண்டு போய் ஹார்முஜ், அரசரின் சமுகத்தில் விட்டார்.

ஹார்முஜ், விருத்தரிடத்தில் சமாச்சாரங்களை விசாரித்தார். விருத்தர், தனக்குத் தெரிந்தவைகளை ஆதியோடந்தமாய் விவரித்துக் கூறினார். ஹார்முஜ், மனங்கசங்கியழுது, குல் இளவரசியின் தூதராகிய விருத்தரைக் கட்டியழுதுக்கொண்டிருந்தார் விருத்தர், எஜமானே, தங்களின் பிரியநேசியோ, காலவிரோதமென்னும் கிரகத்துடன் போராடிக்கொண்டு, மரணத்தறுவாயிலிருப்பதால், தாங்கள் தாமசப்படுத்தாதபடிக்கு, அவர்களை விடுதலாக்கிக்கொண்டு வருவதற்கான தந்திரோபாயத்தைக் கண்டுபிடித்து, அவ்வேலையை அதிகசீக்கிரத்தில் முடிக்கவேண்டுகிறேனென்றார். ஹார்முஜ், கடவுளைப்புகழ்ந்து, விருத்தரை வாழ்த்தி, அவருக்கு, கோடிதிரவியத்தை வெகுமதியாகக்கொடுத்தார். பின்பு, தான்மட்டில் மாச்சீன்தேசத்துக்குப் பிரயாணமாக நினைத்து, தன் சிநேகிதர்களை ஆலோசித்தார் அவர்கள், எஜமானே, சில துணைவர்களுடன் சென்று மாச்சீன் அரசனை வெட்டி யெறிந்துவிட்டு, குல் இளவரசியைக் கொண்டுவந்து சேருங்களென்றார்கள். சிலர், எஜமானே, அவருக்கு நிருபமெழுதுங்கள். அவர் தங்கள் கடிதத்தின் மரியாதைக்காக குல் இளவரசியைத் தடையின்றி இங்கனுப்புவாரென்றார்கள். விருத்தர், எஜமானே, தாங்கள் சேனாசமுத்திரத்துடன். அவர்மீது படையெடுத்து வருவதை அவர் அறிந்தபோது, சினங்கொண்டு, தன் பகைவர்களாகிய, உங்களுக்கு ஏதேனுங் கெடுதிசெய்யவே ஆரம்பிப்பார். கடிதமெழுதுவதும் சரியல்ல. ஆகையால், தந்திரமும் சற்குணமுமுடைய ஒரு மனிதனை, யென்னுடனனுப்புங்கள். தாங்கள், கடவுளின் கிருபையை ஆதரவு வைத்துக்கொண்டிருங்கள். கடவுளின் உதவியால், சிறைச்சாலையிலிருக்கிற, குல் இளவரசியை, எந்தவிதத்திலாவது, தங்கள் சமுகத்தில் கொண்டுவந்து சேர்க்கிறேனென்றார்.

அந்த யோசனையை, ஹாரூர்முஜ், ஒப்புக்கொண்டு, மங்கலவாக்கியை, விருத்தருடன் போய்வரக்கட்டளையிட்டார். அவர்களிருவரும், அஸ்வாரூடராகி, காடு, மலை, ஆறு, அருவி, முதலானவைகளையெல்லாங் கடந்து, மாச்சின்பட்டணம் வந்து சேர்ந்து, மங்கலவாக்கியை, தன்வீட்டில் வைத்துவிட்டு, தான்மட்டில் குல் இளவரசியிடத்திற்குவந்தார். சகலவிஷயங்களையும் அவளுக்குத் தெரியப்படுத்தினர். இளவரசி, மங்கலவாக்கியை சீக்கிரம் அழைத்துவாருமென்றாள். மகளே, சற்று பொறுதி செய்யுங்கள். இரவானவுடனே அழைத்துவருகிறேனென்று கூறிவிட்டு, அங்கிருந்து புறப்பட்டு, அரசரின் சமுகத்தடைந்து, வழக்கப்பிரகாரம், சேவகம் புரிந்துநின்றார்.

இரவானவுடனே, மங்கலவாக்கியை அழைத்துக்கொண்டு போய், குல் இளவரசியின் சமுகத்தில்விட்டார். மங்கலவாக்கி, குல் இளவரசியின் பாதம் பணிந்தெழுந்தார். அவள், பெருமூச்செறிந்து தாரைதாரையாய்க் கண்ணீர்வடிய அழுது, மங்கலவாக்கியே, எனக்கு மரணம் நெருங்கிவிட்டது. ஹாரூர்முஜ் அரசராகிய, என்பிரியநேசரின் சமாச்சாரத்தைச் சீக்கிரம் சொல்லுமென்றாள். அவர், என் எஜமானியே, அவரோ, இரவுபகல் இடைவிடாது, தங்களின் நினைவிலேயே காலத்தைப்போக்கி, பிணம்போன்றிருந்தார். இவ்விருத்தர், தாங்கள் சுகத்துடனிருக்கிறசெய்தியை சொன்னதின் பின்னால்தான், அவருக்கு வுணர்வுவந்ததென்றார். குல் இளவரசி, சகோதரரே, ஆயிரக்கணக்கான துன்பங்களைச் சுமந்து, என் மானத்தைக் காப்பாற்றிக்கொண்டு, இங்குவந்து சேர்ந்தேன். இபபோதும் அதற்காகவே இச்சிறைச்சாலையில் அடைப்பட்டிருக்கிறேனென்றாள்.

ஹாரூமுஜ் அரசரும், தங்களைத் தேடியலைந்து வெகு கஷ்டங்களையெலலாம் அடைந்தார். ஒரு மஹாத்துமாவின் உபதேசத்தால், தங்களின் சந்திப்புக் கிடைக்குமென்ற நம்பிக்கையுடன், ரோமாபுரிக்கு வந்திருக்கிறார். கடவுள், நமக்கு நல்லசாலத்தை கொடுப்பார். தாங்கள் கவலைப்படவேண்டாமென்றுமங்கலவாக்கி

கூறினர். இரவு குறுகிவிட்டபடியால், இதற்குமேலும் இங்கிருப்பது சரியல்லவென்று, விருத்தர் சொன்னர். மங்கலவாக்கி, இளவரசிபிடத்தில் விடைவாங்கிக்கொண்டு, விருத்தர் வீட்டுக்கு வந்துவிட்டார். இவ்விதமாக, ஒருவாரம்வரையில், மங்கலவாக்கி, இளவரசியிடத்துக்கு இராக்காலங்களில் போய்வந்துக்கொண்டிருந்தார். இளவரசி, சீக்கிரம் சிறைச்சாலையிலிருந்து தன்னை வெளிப்படுத்த, மங்கலவாக்கியையும், விருத்தரையும், அடிக்கடி கேட்டுக்கொண்டிருந்தாள். அவர்கள் சமாதானங்கூறிக்கொண்டிருந்தார்கள். ஒருநாள் அவ்விருத்தர், மகளே, தங்களை நான், இங்கிருந்து வெளிப்படுத்திக் கொண்டுபோய்விட்டதை, அரசர் அறிந்தால், இங்கிருக்கும் என் பெண்சாதி பிள்ளைகளை மெத்த இமிசைப்படுத்துவார். அல்லது வெட்டிப்போடுவார். அப்பழி என் தலைமீதிலாகும். ஆகையினலே, அவர்களைத் தூரமான ஒருவூரில் கொண்டுபோய் வைத்துவிட்டுத் திரும்பிவந்து, தங்களுடைய வேலையில் இடைக்கட்டிநிற்க நினைக்கிறேனென்றார். இளவரசி, பிதாவே, மெத்த நல்லகாரியம். அந்தப்படித்தான் செய்யவேண்டும். ஆனல் தாமசப்படுத்தாமல் அதிசீக்கிரத்தில் செய்துமுடித்துத் திரும்பவேண்டுமென்றாள்.

விருத்தர், அன்றைத்தினமே, தன் பெண்சாதி பிள்ளைகளை சமதானம் என்னும் ஊரில் கொண்டுபோய் வைத்துவிட்டுத் திரும்பி இளவரசி பிடத்தில் வந்தார். இளவரசி, ஆண்வேடம் பூண்டுக்கொண்டாள். அன்றிரவு நடுச்சாமத்தில் மூவரும் புறப்பட்டார்கள். முன்னல் விருத்தரும், நடுவில் குல் இளவரசியும், பின்னல், மங்கலவாக்கியுமாகக் குதிரைகளை வெகுவேகமாக நடத்தி, பொழுது புலருவதற்குள், நாற்பதின்காததூரம் வந்துவிட்டார்கள். பொழுதும் விடிந்தது.

விருத்தர், மற்ற இருவரையும் பார்த்து, நீங்கள் இவ்வாறாகவே, குதிரைகளைச் செலுத்திக்கொண்டுபோய், றேமாபுரி யெல்லையிலாகி, ஒரு விடுதியில் தங்கியிருங்கள். நான், என் பெண்சாதி பிள்ளைகளைப் பார்த்துவிட்டு, அங்குவந்து சேருகிறேன்.

ஒரு இரவுக்குமேல் நான் என் வீட்டில் தங்கியிருக்கமாட்டேனெ
ன்று கூறிப்போனார். இவர்களிருவரும், குதிரைகளை நடத்தி
இரண்டுமூன்று தினங்களுக்குள், மாச்சீன் எல்லையைக்கடந்து
சீனதேசத்தின் எல்லையிலானார்கள். அப்போது, மங்கலவா
க்கி, குல் இளவரசியே, நான் என் வீட்டைவிட்டு வெளிப்பட்டு
வருஷக்கணக்கிலாய்விட்டது. என் பெண்சாதி பிள்ளைகளின்
நினைப்பு எனக்குப் பெரிதாயிருக்கிறது. தாங்கள் சம்மதவாக்க
ளித்தால், ஒரு இரவு என் வீட்டில் தங்கியிருந்துபோக நாடுகி
றேனென்றார். குல் இளவரசி, மெத்த சந்தோஷம். உம் சித்
தப்படி செய்யுமென்றாள். மங்கலவாக்கி, இளவரசியுடன் தன்
வீட்டுக்குவந்து, அவளை ஒரு அறையில் ஒருவருக்குந் தெரியா
மல் ஒளித்துவைத்து, தான் வந்திருக்கிற செய்தியை ஒருவரும்
வெளியிற் பேசக்கூடாதென்று தன் வீட்டாரடங்கலுக்கும் கட்
டளையிட்டார்.

அப்படிக்கிருக்கும்போது, குல் இளவரசியைத் தேடிச் செ
ன்ற நீலமுகி, கடற்கரைத் தேசம் சிலவற்றிற் சென்றுபார்த்து
செய்தியகப்படாமல், யார் வாழ்ந்தாலென்ன? யார் கெட்டா
லென்ன? நாமேன வீண்கஷ்டமெடுத்துத் திரியவேண்டுமென்று
நினைத்துத் திரும்பி சீனதேசத்துக்கு வந்து, தன் வீட்டிலிருந்து
விட்டான். அவனுக்கும், மங்கலவாக்கிக்கும், நெருங்கிய நேச
மிருந்ததால், அவருடைய வீட்டாரிடத்தில் வந்து மங்கலவாக்கி,
ரோமாபுரியரசனின் சினேகிதராகிவிட்டார். பெண்சாதி பிள்ளை
களை நினைக்கிறவராகவுங்காணோம். அவர், இங்கு வருவாரென்ப
தும் நிச்சயமில்லையென்று சொன்னான். அவர்கள் கைசேதப்ப
ட்டவர்களாயிருந்தார்கள். நீலமுகி, அடிக்கடி மங்கலவாக்கிவீ
ட்டுக்கு வந்து, தன் சினேகிதர், வந்தாரா, ஏதேனும் அவரு
டைய செய்தி கிடைத்ததாவென்று விசாரித்துப்போவான். சில
சமயங்களில் தன் வேலைக்காரியை அனுப்பி விசாரித்துவருவான்.
மங்கலவாக்கி, வந்த அன்றைக்குத் திடுகூறாக, அவனுடைய தாதி
ஏதோ ஒரு விஷயத்திற்காக அங்குவந்து மங்கலவாக்கியின் செ

ய்தி யேதேனும் கிடைத்ததோ, என்றுகேட்டாள். அவர்கள், தாயே, அவருடைய செய்தி யாதொன்றுங் கிடைக்கவில்லை யென்றார்கள். ஆனால், அவர்கள் சந்தோஷமுடையவர்களாயிரு ப்பதைப்பார்த்து, மங்கலவாக்கி ஏதேனும் சங்கடத்திலகப்பட்டு வந்திருப்பாராதலால் நம்மிடத்தில் மறைக்கிறார்களென்று நினை த்து, தன் வீட்டுக்குத் திரும்பிவந்து, தன் எஜமானிடத்தில், அந்த நடப்பவைகளைச் சொன்னாள். அவனும் விரைந்துவந்து மங்கலவாக்கியின் தாயாரிடத்தில், என் சினேகிதர் வந்தாரோ வெனறு கேட்டான். அவள், ஒருவரும் வரவில்லையென்றாள். அவன், அம்மா தாயே, அவருக்கும் எனக்கும இடையிலுள்ள நேசபந்தம் இவ்வாறென்பதைத் தாங்களறிந்திருந்தும், ஏன் என்னிடத்தில் மறைத்துப்பேசுகிறீர்கள். அவருடைய வருகை யின் சந்தோஷத்தை நான் அடையாமல் ஏன் விலக்குகின்றீர்கள். என்னால் ஒருவிதமான கெடுதியும் வராது, உண்மையைச் சொல் லுங்களென்றாள்.

அவள் மங்கலவாக்கிக்கு, நீலமுகி, வந்திருக்கிறதைத் தெ ரிவித்தாள். அவர், நாம வநதது, அவனுக்கு எவ்வாறு தெரியும்? இனிமேல் காணாமலிருக்கவும் வாய்க்காதென்று. வெகுநேரம் ஆலோசித்து, கடைசியில் அவனைச்சந்தித்து சினேகிதரே, நீர், இங்கு எப்போது வந்தீரென்று கேட்டார். அவன், நான் பல தேசங்களிலுஞ்சென்று, சூல் இளவரசியைத் தேடித்தேடிக் கா லயர்ந்து, வெறுமனே திரும்பிவந்தேன். அதனால், ரோமாபு ரிக்குப்போக வெட்கமுற்றிருக்கிறேன். நீரும் என்னைப்போல வே திரும்பினீரா? சூலைக்கண்டுவந்தீரா, வென்றுகேட்டான். மங்கலவாக்கி, யாதொன்றையும் ஒளிக்காமல் கூறி, நாளை அதி காலையில் இளவரசியை அழைத்துக்கொண்டு, ரோமாபுரிக்குப் போகத் தயாராயிருக்கிறேன். உமக்கு என்னுடன் வரப்பிரிய மோ, அல்லது இங்குதானே இருந்துவிடப் பிரியமோ வென்று கேட்டார். அவன், சினேகிதரே, நான் உம்முடன் கூடவே வர நாடுகிறேன். பொழுது புலரமுன்னரே, நான் இங்குவந்து சேரு

கிறேன் என்று சொல்லிவிட்டு வீட்டுக்குப்போய், நாம் மங்கல வாக்கியுடன் சேர்ந்துபோனால், ரோமாபுரிச் சக்கரவர்த்தி, அவரை வாழ்த்துவார். நம்மைத்தூற்றுவார். நாமிருக்குந் தேசத திலேயே நமக்குக்கிடைக்கும் மரியாதையை, நாம் ஏன் கெடுத்துக்கொள்ளவேண்டும். நம் அரசரல்லவோ, நம்மைக் குல் இளவரசியின் படமெடுத்து வருவதற் கனுப்பினார். அதனாலல்லவோ நம்முடைய தரித்திரம் நீங்கி, செல்வமுண்டாயிற்று. இப்பவும் நமக்கு, மிகுந்த வெகுமதிகளைக் கொடுப்பார். ஹாா்முஜ்யார்? அவருக்கு நாம் உதவி செய்யவேண்டிய அகத்தியமென்ன? வென்று ஆலோசித்துக் கடைசியில், சீனத்தரசரிடத்துவந்து புன்சிரிப்புடன், தாங்கள் குல் இளவரசியின், மூகரூபப்படமெடுத்து வருவற்கென்னை யனுப்பினீர்கள். நான் அப்படத்துக்குடையவளைக் கொண்டுவந்திருக்கிறேனென்றான்.

அரசர், சந்தோஷமுற்று, பரிவார சகிதராய் வந்து, மங்கலவாக்கியின் வீட்டை, முற்றிக்கை செய்துநின்றார். மங்கலவாக்கி இது நீலமுகியின் வேலையேயல்லாது வேறல்லவென்று நினைத்து, குல் இளவரசியிடத்தில் வந்து, என் எஜமானியே, வரும்விதி யிராத்தரிக்காது. நம்முடைய காலவிரோதத்துக்கு மற்றவர்கள், என்ன செய்வார்கள். நாம், சினேகிதனாக நினைத்திருந்த பாதகனே, இந்த வேலையைச் செய்திருக்கிறான். இப்போது, நான் சீனத்தரசருடன் சண்டை செய்கிறேன். தாங்கள் உதவியாயிருங்கள். நான் படைக்களத்தில் கொல்லப்பட்டால், தாங்கள் எனக்காக, கடவுளிடத்தில் பாபமன்னிப்புக் கேளுங்களென்றார், இளவரசி, சகோதரரே, நீர் சண்டை செய்யவேண்டாம். எவ்விதத் தந்திரத்திலாவது, நீர், இங்கிருந்து வெளிப்பட்டு, ஹார்முஜிடத்தில் சேர்ந்து, இவ்விடத்திய சமாச்சாரங்களை அவருக்கறிவியும். நான், கபாடபந்தனஞ் செய்துக்கொண்டு, இங்கு தானே யிருக்கிறேன். நீர், படைக்களத்தில் இறந்துபோவீரேயானால், என்னுவடைய செய்தியை, ஹார்முஜுக்கு. அறிவிப்பார் ஒருவருமில்லை. நானும், அநியாயமாய் இறந்துபோவே

னென்றாள். இதுவும் நல்ல யோசனைதானென்று, மங்கலவாக்கி நினைத்து, ஒரு வேகமான் குதிரையின்மீதேறி நடத்திச்சென்றார், அவர், குதிரையைச் செலுத்திப்போகும் வேகத்தை, நீலமுகி, பார்த்தபோது, ஓஹோ, மோசம் வந்துவிட்டது. மங்கலவாக்கி. ஓடிப்போகிறான். அவன், ரோமாபுரிக்குச்சென்று, இவ்விடத்திய சமாச்சாரங்களை, ஹாருமுஜாக்குத் தெரிவிப்பானேயானால், அவர், கடல்போன்ற சேனையுடன் வந்து, நம்மைக் கருவறுத்திப்போடுவார். ஆகையால், அவனை விடாது பின் தொடர்ந்து பிடியுங்களென்று சப்தமிட்டான்.

சீனத்தரசரின், குதிரை வீரர்கள், மங்கலவாக்கியைப் பின் தொடர்ந்தார்கள். அவர், ஹாருமுஜிடத்திலிருந்து பழகியவரானதால், சத்ராதிகள்பேரில் அம்புமாரி பொழிந்துக்கொண்டும், கிட்ட நெருங்கியவர்களை, வாட்கிரையாக்கிக்கொண்டும், குதிரையைச் செலுத்திக்கொண்டுமிருந்தார். கடவுள், மங்கலவாக்கிக்கு நல்ல காலத்தைக் கொடுத்தார். நாற்பது, ஐம்பது, சீனர்கள் வெட்டுப்பட்டு மடிந்தார்கள். மற்றவர்கள் தட்டுக்கெட்டு பின் வாங்கி ஓடி, மங்கலவாக்கியின் வீட்டைச் சூழ்ந்து நின்றுக்கொண்டு, வீட்டுக்குள்ளிருப்பவர்களைக் கூவி, ஜனங்களே, குல் இளவரசியை விட்டுவிடுங்கள். உங்களின் சீவனைக்காப்பாற்ற வழி தேடிக்கொள்ளுங்கள். இல்லாதுபோனால், கதவை உடைத்துக்கொண்டு, உள்ளே நுழைந்துவிடுவோம். ஒவ்வொருவரையும் நூறுநூறு துண்டங்களாக வெட்டியெறிந்துவிடுவோம், என்று சப்தமிட்டார்கள்.

பெண்டுகளெல்லாம் பயந்து, குய்யோ முறையோவெனக் கூக்குரலிட்டழுதார்கள். குல் இளவரசி, அப்பெண்களுக்கெல்லாம் சமாதானஞ் சொல்லி, அழுகையை அமர்த்திவிட்டு, மதிலின்மேலேறி அவ்வீட்டைச் சூழ்ந்து நிற்பவர்கள்பேரில், சரமாரிபொழிந்தாள். பெண்பிள்ளையாயிருந்தும், அம்பெய்வதில் மஹா கூர்மையுடையவளாயிருந்தாள். கோடிக்கணக்

கான் சீனங்கள் அவளின் அம்புக்கிரையானார்கள். மீதியிருந்தவர்கள், நாம் இன்னமும் இங்குநின்றால், தடையின்றிக் கொல்லப்படுவோமென்று அஞ்சி, இருந்தவிடத்தின் தடந்தெரியாது ஒட்டம்பிடித்துவிட்டார்கள்.

நீலமுகி, சீனத்தாசரைப்பார்த்து, எஜமானே, குல் இளவரசி இவள்தான். ஒரு சிறு கத்தியைக் கையிற் பிடித்துக்கொண்டு, அனேக தலங்களில் தன் மானங் காத்துவந்திருக்கிறாள். மங்கலவாக்கி, யிறந்திருப்பானேயானால், இவள் தங்களுக்குப் பாரியாக யாதொரு தடையுமிராது. அவன், ரோமாபுரிக்குப் போயிருப்பதால், பின்னால் என்னவேடிக்கையை, கடவுள், காண்பிக்கின்றாரோ, தெரியாது. ஆகையால், தாங்கள், அவளுடன் இதமான வார்த்தைகளாடி, அவளை வசப்படுத்திப்பாருங்கள். அவள் சரிப்பட்டுவந்தால் உடனே, அந்த வேலையை முடித்துப் போடுங்கள். இதைவிட வேறு யோசனை யில்லையென்றான். உடனே அரசர் ஒரு பெண்பிள்ளையை, குல் இளவரசியிடத்தில் தூதனுப்பினார், இளவரசி, மருமொழி கொடுக்காமல் காலத்தை யெதிர் பார்த்தவளாகவேயிருந்தாள்.

நிற்க, குல் இளவரசிபேரில் இரக்கமும், பக்ஷமுமுடைய மங்கலவாக்கி, அழுதவராகவும், மனக்கலக்கமுற்றவராகவும், தன் குதிரையை விரைவாய்ச்செலுத்தி, சில வாரங்களுக்குப்பிறகு ரோமாபுரிக்குவந்து, சக்கரவர்த்தியிடத்தில், குல் இளவரசியின் சங்கதியை அறியப்படுத்தினார். சக்கரவர்த்தி. ஹாருமுஜாக்குச் சொன்னார். அச்சமையம், ஹாருமுஜ், தன்னுணர்வற்றவராயிருந்தார். சக்கரவர்த்திக்கும், அக்கினிப்பொறி தெறிக்கத்தக்க சினமூண்டது. உடனே, தன் சேனாவீரர்களுடன், சீனதேசத்தைநோக்கிப் பிரயாணமானார். ஈரானில், இராஜாதிகாரம் செலுத்திக்கொண்டிருந்த, சுஜான அரசர், இதைக் கேள்வியுற்று, தன் பரிவாரசகிதமாய் வந்து, சக்கரவர்த்தியாரின் படையிற்சேர்ந்தார். வெகு ஆரவாரத்துடன், இரு அரசரும், தங்கள் பரி

வாரசகிதமாக சீனதேசத்து எல்லைச்சராகத்தில் வந்து சேர்ந்தார்கள். குல் இளவரசியை, சிறைச்சாலையிலிருந்து வெளிப்படுத்திக்கொண்டு வந்து, இடைவழியில் தன் வீட்டுக்குப்போயிருந்த விருத்தரும், அப்படைக்கூட்டத்தில் வந்துசேர்ந்தார். அவரையும் கூடஅழைத்துக்கொண்டு எல்லைக்குள்ளாகி வசதியான ஒரு தலத்தில் கூடாரங்களடித்துத் தங்கினார்கள்.

உடனே, ரோமாபுரிச் சக்கரவர்த்தியார், ஒரு கடிதத்தில், அடே, புத்திகெட்ட, இழிகுலத்தரசனே, ஒரு துரோகியின் துற்போதனையில் சிக்குண்டு, சந்தோஷத்தால் பூரிப்படைந்து, ஏன் கண்கெட்டுப்போனாய். உன்னுடைய தராதரத்தை நீ உய்த்துணராது போன காரணமென்ன? போனதுபோகட்டும். உனக்கு, கெடுதி சம்பவிக்காதிருக்கவேண்டுமானால், வெகு சீக்கிரத்தில, குல் இளவரசியை, மரியாதையுடன், என்னிடத்திற்கனுப்பிவிடு. ஒருமணித்தியாலமேனும் நீ தாமதப்படுத்துவையேயானால், உன் படையடங்கலும் சங்கரிக்கப்படும். உன்னைத்தான் முந்தி வெட்டப்படுமென்பதை உறுதியாகநம்பென்றெழுதியனுப்பினார். சீனத்தரசர், நிருபத்தை வாங்கி வாசித்தார். அப்பவே அவருக்கு வயிறு பிடிங்கிக்கொண்டது. உடனே, குல் இளவரசியை, நவரத்தினங்களிழைத்த, தங்கச் சிவிகையிலேற்றி, சக்கரவர்த்தியின் சமுகத்துக்கனுப்பினார். அவளை சக்கரவர்த்தியார், தன் சுயபுத்திரியைப்போலவே, அதிகப்பிரியத்துடன் அங்கிகரித்துக்கொண்டார்.

பின்பு, சீனத்தரசரைப் பிடித்து வெட்டக் கட்டளைவிட்டார் நீலமுகியைச் சிறைப்படுத்தினார். மங்கலவாக்கியின் நன்றியறிதலுக்காக, அவரை வாழ்த்தி, அத்தேசத்துக்கு, அவரையே அரசராக்கினார். நீலமுகியை, மங்கலவாக்கியின் அரண்மனைக்கெதிரில், கழுவேற்றக் கட்டளையிட்டதுடன், தற்போது, நீர் இத்தேசத்திற்கு அரசரானீர். உம்முடைய பதவி, மேலோங்கிற்று. ஆகையால், நீர், மாச்சீன்தேசத்துக்குப் படையெடுத்துச்சென்று, பிள்ளையென்று கூறி பெண்டாளத்துணிந்த அரசனை

க்கொன்று, இவ்விருத்தரை அவ்வூருக்கு அரசராக்கும். நமக்குதவிசெய்தவர்களெல்லாரும் சௌக்கியத்துடனிருக்கவேண்டுமென்று, மங்கலவாக்கிக்கு, சக்கரவர்த்தி கூறினார். பின்பு, சக்கரவர்த்தியார், கூஜான் அரசரைப்பார்த்து, சகோதரரே, நான் என் தேசத்துக்குப்போகிறேன். நீர், உம்புத்திரியாகிய குல் இளவரசியை அழைத்துக்கொண்டு உம்முடைய ஊருக்குப்போய், கலியாணத்திற்கான சகல வேலைகளையுந் தயார்ப்படுத்திக்கொண்டிரும். சமீபத்தில், நான், ஹார்முஜை, மணக்கோலத்துடன் அங்கே கொண்டுவந்து விவாகமுடித்துவைக்கிறேன் என்றுசொல்லவேண்டியவைகளைச சொன்னார்.

கூஜான் அரசர், சக்கரவர்த்தியாரின் இனியவார்த்தைகளாலும், தன் புத்திரியைத்தெரிசித்த மகிழ்ச்சியினாலும், ஆனந்தசாகரத்தாழ்ந்தவராய், விடைபெற்றுக்கொண்டு, தன்பட்டணம் போய்ச்சேர்ந்தார். மங்கலவாக்கி, சக்கரவர்த்தியின் கட்டளைப்படி, நீலமுகியைக் கழுவிலேற்றிக் கொன்றுவிட்டு, சக்கரவர்த்தியிடத்தில் வந்து, எஜமானே, ஹார்முஜ் அரசரின் பொருட்டால், அடிமையாயிருந்த நான் அரசனானேன். கணக்கிலடங்காத கஷ்டங்களையெல்லாம், அனுபவித்த நான் அவர்களின் மணக்கோலம் பார்க்காதுபோனால், ஒருக்காலும் என் மனம் சமாதானமடையாதென்பது நிட்சயமென்றார். விருத்தரும், அவ்வாறே [illegible] விண்ணப்பஞ்செய்தார். அதற்கரசர், நான் [illegible] முடித்துக்கொண்டு, நீங்களிருவரும், ரோமாபுரிக்கு வந்து சேருங்களென்று, உத்தரவளித்தார். மங்கலவாக்கி, தனக்குப்பிரதியாய் ஒருவரை நியமித்து வைத்துவிட்டு, விருத்தரைக்கூட்டிக்கொண்டு, பரிவாரசகிதமாய், மாச்சீனபடைந்து, அவ்வூர் அரசருடன் யுத்தமாடி, அவரை வெட்டியெறிந்து, விருத்தரைச் சிம்மாசனத்திலேற்றினார். விருத்தர், தன் அதிகாரத்தை, பிரதி காரியஸ்தர்வசம் ஒப்பித்துவிட்டு, மங்கலவாக்கியுடன், ரோமாபுரிக்குப் பிரயாணமானார். சக்கரவர்த்தியார், மங்கலவாக்கியை, மாச்சீனுக்கனுப்பிவிட்டு, பிரயாண

மாய் ரோமாபுரி வந்து சேர்ந்து, ஹூர்முஜிடத்துக்குப்போனார். அவர், உசாரற்றவராயிருந்தார். சக்கரவர்த்தியார், ஹூர்முஜூக்கு அனேக சமாதானங்கூறி, மகனே, கடவுள் கிருபையால், சகல கஷ்டமும் நீங்கிப்போயிற்று. இனிமேல், யாதொன்றைப்பற்றியும் நீர் கவலைப்படவேண்டியதில்லை. உம்முடைய கல்யாணகாலமும் சமீபித்துவிட்டது. நீர் சந்தோஷத்துடனிருந்து, சரீரத்தை வலுப்படுத்திக்கொள்ளுமென்றார்.

——(*)——

## 30-ம் அதிகாரம்.

## குல் இளவரசியின் விவாகமும், ஹூர்முஜ அரசர் கதாந்தமும்.

——(*)——

சக்கரவர்த்தியார், யாதோர் குறைவின்றி, ரோமாபுரிக்கு வந்துற்றதாலும், ஹூர்முஜ் அரசரின் கல்யாணத்திற்கான சகல தளபாடங்களும் சேகரிக்கப்பட்டு வந்ததாலும் ரோமாபுரி முழுதும் ஏக ஆரவாரமாயிருந்தது. அதனால், படைப்பினங்களெல்லாம். அக்கல்யாணத்தின் ஆரவாரத்தைப்பார்க்க, அங்கலாய்த்துக்கொண்டிருந்தன வெண்மையாயிருந்த வானமும் பூமியும், குங்குமப்பூ நிறத்தையும் வாசத்தையும் படைத்தன. மண்மதனின் உதட்டில், சிரிப்பும் பரிகாசமுமாகவே யிருந்தது. ஏழைகள் வீட்டிலும், சீமான்கள் வீட்டிலும் பிறக்கும் குழந்தைகளெல்லாம், சிரித்த முகங்களுடனேயே பிறந்தன. மலராத புட்பங்களெல்லாம் மலர்ந்தன. ஆகாயத்திலும், பாதாளத்திலும், ஆரவாரமாகவே யிருந்தது. இராக்காலங்களில் ஏற்றப்பட்டிருந்த தீபங்களுக்குமுன்னால் வானம் ஒரு நக்ஷத்திரம்போன்று தோற்றிற்று. வீதிகளடங்கலும், சரிகைவேலைசெய்த இரத்தினக்கம்பளங்கள் விரிக்கப்பட்டன. மேற்கூரைகளெல்லாம், பொன்னூலிடையிட்ட போர்வையால் மூடப்பட்டன. குடைகொடி ஆலவட்டம் முதலிய விருதுகள், பலபாகங்களிலும் நாட்டப்பட்டன. எவ்விதமான குறைவுங்கூற வழியில்லாதபடிக்கு

வெகு அலங்காரமாய்ச் சிங்காரிக்கப்பட்டது. கணிதசாஸ்திரிகள், நல்லநேரத்தைக் கணக்கெடுத்துக் கூறினார்கள். ஹூர்முஜுக்கு, தங்கக்கடகமிட்டு, மணவுடை உடுத்தாட்டினார்கள். ரோமாபுரியின் எல்லாப் பிரஜைகளும், விலையுயர்ந்த பட்டுடையுடுத்தினார்கள். அரண்மனையிலுள்ள, சிறுவர்முதல் பெரியவரீறாக யாவரும், நவரத்தினாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டார்கள். விடியற்காலையில், ஈரானைநோக்கிப் பிரயாணமானார்கள். மேளவாத்திய கோஷ்டம் கடற்சத்தம்போன்று முழக்கப்பட்டது. வெகு ஆரவாரத்துடன், ஈரானுக்குச் சமீபத்தில் வந்துவிடுதிவிட்டிறங்கினார்கள்.

ஈரான் அரசர், தன் பரிவாரசகிதராய், மணமகனை யெதிர்க்கொண்டழைப்பதற்காக, முதலாம்விடுதிவரையில் வந்தார். அங்கிருந்து, யாவரையும் அழைத்துக்கொண்டு, ஆரோக்கியமண்டபத்துக்கு மீண்டார். அங்கே, யாவரும் எட்டுநாள்வரையிலிருந்தார்கள். ஒன்பதாநாள், அவர்களின் மார்க்கமுறைப்படி விவாகபந்தனமெழுதினார்கள். மனிதர்களும், இராக்கதர்களும், சுபசோபனங்கூறினார்கள். தேவகன்னிகைகள், மங்களவாழ்த்துப் பாடினார்கள். விவாகபந்தன மெழுதித்தீர்ந்தபிறகு, ஹூர்முஜ், அரண்மனைக்குள்ளே வந்தார். அங்குள்ள வாலிபப்பெண்களிற் சிலர், ஹூர்முஜைப் பரிகாசஞ்செய்தார்கள். சிலர், ரவிக்கைகளை யவிழ்த்துக்காட்டி, இவ்விதமான வஸ்துக்கல்லவோ, இவ்வளவு துன்பப்பட்டீரென்று கூறி நகைத்தார்கள். சிலர், ஆலாத்தியெடுத்தார்கள். சிலர், கையைப்பிடித்திழுத்தார்கள். சிலர், காலைப்பிடித்தார்கள். அவர்கள் செய்த பரிகாசங்களை யிம்மட்டென்றெழுதமுடியாது. கடைசியில், மணமகளையும், மணமகனையும், மறவணையிலிருத்தி, தலைகளில் கற்கண்டைச் சொரிந்தார்கள். செய்யவேண்டிய சடங்குகளெல்லாம் செய்துமுடிந்தபிறகு, இருவருமெழுந்து பள்ளியறைக்குள்ளானார்கள்.

ஹூர்முஜ், குல் இளவரசியைக்கண்டு நெடுநாளானபடியால், சகித்திருக்கமாட்டாமல், அவளை நெஞ்சோடணைத்து, முத்தமிட்டு, தன் துடைமேலிருத்தி, தேவையான தலங்களில்

கையை நீட்டினர். அவள் அதைத்தடுத்தாள். வெகு நேரம்வரையில கைச்சரசஞ் செய்துக்கொண்டிருந்ததால், ஹார்முஜூக்கு மோகமீறி வருப்படுத்த ஆரம்பித்தார். அப்போது, குல் இளவரசி, என் பிரியநேசரே, ஏன் அவசரப்படுகிறீர்கள்? சற்று பொறுங்கள். நாம் போய்வந்த சமாச்சாரங்களைப்பற்றிப் பேசிக்கொள்வோமென்றாள். "ஹார்முஜ்" பெண்ணே, அச்சமாசாரத்தைப் பேசக்கூடிய காலம் இதல்ல. கடவுள் முகத்துக்காக அதை யிப்பொழுது நினைப்பூட்டவேண்டாம். சந்தோஷமென்னுங்குடிப்பில் கவலையென்னும் உப்பைப் போடவேண்டாமென்றார்.

குல் இளவரசி, என் எஜமானே, தங்களின் அருமையான சீவன்பேரிற் சத்தியமாக, என் சரீரம் வலுவற்றிருப்பதால், நான் இறந்துபோவதைப் பயப்படுகிறேனென்றாள். ஹார்முஜ், பெண்ணே, நான் இவ்விதமான வார்த்தைகளை மெத்த அறிந்தவனென்றார். அவள், எஜமானே, சனங்களெல்லாம் விழித்துக்கொண்டிருக்கிறார்களே. அவர்களைப்பற்றி நாம் வெட்கப்படவேண்டாமோவென்றாள். ஹார்முஜ், பிரிவினையென்னுங்கவலை யெவ்வளவு காலமோ, நம்மைப் படுகுழியில் வீழ்த்திருந்தது. இப்பவாவது, சஞ்சலமென்னுங் கிணற்றைவிட்டு வெளிவரவேண்டாமோ வென்றார். அப்போது, குல் இளவரசி, ஹார்முஜின் மடியைவிட்டுந் தட்டிக்கொண்டு வெளிப்பட நாடினாள். இடையுந் துடையும், ஒன்றோடொன்று பின்னப்பட்டிருந்ததால், கூடாமற்போயிற்று. அதனால் இளவரசி, அழத்தொடுத்தாள். "ஹார்முஜ்" புதிய ஆயுதத்தால் பலமான வேலைசெய்ய ஆரம்பித்தார். இடையிலிருந்துவேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த மன்மதன், மோகபாணத்தை, குல் இளவரசிபேரில் மெல்லென வீசினான். அதனால் அவள், மோகலாகிரி கொண்டிருந்தாள். மலர்ந்த மொக்குபோன்றிருந்த, தலம், செங்குவளை மலர்போன்று மலர்ந்தது. ஹார்முஜூம், களைக்காதபடிக்கு வேலைசெய்தார். குல் இளவரசி, சஹித்தற்கியலாப் பரவசமுற்று, ஹார்முஜை நெருக்கினாள். ஹார்முஜ், புன்னகை நகைத்து, இறுகத்தழுவி

முத்தமிட்டார். சுக்கிலமும், சுரோணிதமும், ஒன்றோடொன்று முட்டிப்பாய்கிறவரையில், இருவருக்கும் ஒருவித வுணர்வு மில்லாதிருந்தது. கடைசியில், இருவரும், மிதமீறிய இன்பத்தை யனுபவித்துக் கீழிறங்கி யுட்கார்ந்தார்கள்.

பள்ளியறைக் கதவின் துவாரங்களாலும், பலகணிகளின் வீறற்களாலும், எட்டிப்பார்த்துக்கொண்டிருந்த, தாதிப்பெண்கள். கொஞ்சங்கொஞ்சமாய்ப் பரிகாசஞ்செய்ய ஆரம்பித்தார்கள். சில பெண்கள். வேலைமுடிந்துவிட்டது. சோபனங்கூறுங்களென்றார்கள். சிலர், கடவுளொருவரே, துதிக்குடையவர். துஷ்ட கிரகத்தின் கொடுமை தொலைந்ததென்றார்கள். சிலர், ஆ, கடவுளே, வைத்தகுறி, தப்பிப்போகவில்லையென்றார்கள். சிலர் இன்றுமுதல் ஒன்பதாமாதம், யாதொரு குறைவுமின்றி, இராஜகுமாரர் பிறப்பாரென்றாரகள். சிலர், அப்படியே ஆகக்கடவது, உங்கள் வாய்களில் கற்கண்டைப் போடுகிறோ மென்றார்கள். தாதிப்பெண்கள், பள்ளியறையின் வெளியிலிருந்து இவ்வாறும், இன்னும் வேறுவிதமாகவும் பேசிக்கொண்டிருந்தார்கள். (அவர்களிருக்கட்டும். பள்ளியறைக்குள் என்ன நடக்கிறதென்பதை, இன்னமும் கொஞ்சம் பார்ப்போம்.) உருசிகண்டபூனை,உறியைச் சுற்றுமென்னும், சுலோகத்துக்கிணங்க, ஒருமணி நேரத்தின்பிறகு, குல் இளவரசிக்குக் களைதீர்ந்து கருத்து வேறாயிற்று. ஹார்முஜுடன் பலவிதமான இன்பவார்த்தைகளாடினாள். உதட்டுடன் உதட்டைவைத்தாள். நெஞ்சுடன் நெஞ்சணைத்தாள். சப்ரகூடமஞ்சத்தில் சாய்ந்திருப்போம் வாருங்களென்று, ஹார்முஜைக் கூட்டிச்சென்றாள். இருவரும் காம்புகொய்த புட்பவிமானத்தில் சாய்ந்திருந்தார்கள்.

குல் இளவரசி, ஹார்முஜின் தொடைமேல் தனது தொடையைப்போட்டும், அணைத்தும், முகர்ந்தும். ஆசையை மூட்டினாள். அன்று விடிகிறவரையில் அந்தவேலையிலே யிருவரும் இரவைப் போக்கினார்கள். இடைக்கிடை, தாங்கள் போனவந்த சமாச்சாரங்களையும் ஒருவருக்கொருவர் விபரித்துக்கொண்டார்கள். பொழுது விடிந்ததும், வெளியில்வந்து, ஸ்நானபானஞ்செய்து, உடையணிந்தார்கள்.

ஹூர்முஜ், சபாமண்டபத்துக்கு வந்து, முதலில் தன் தந்தையாரையும், இரண்டாவதாக மாமனாரையும் பாதம்பணிந்து எழுந்துநின்றார். அவர்கள், ஹூர்முஜூக்கு, ஆலாத்தியெடுப்பித்து ஆசிகூறினார்கள். சிலகாலம் வரையில் சந்தோஷத்துடன் ஈரானிலிருந்தார்கள். பின்பு, அங்கிருந்து புறப்பட்டு, ரோமாபுரி வந்துசேர்ந்தார்கள். கடவுள் கிருபையால் சந்தோஷமாய் வாழ்ந்தார்கள்.

சிலநாளைக்குப்பிறகு, ரூம் இளவரசியின் உத்தரவுபெற்று; ஈரான் அரசரின் தங்கையாகிய, சந்திரவதனியையும் ஹூர்முஜ், கல்யாணமுடித்துக்கொண்டார். மூவரும் வெகு சந்தோஷத்துடன் காலங்கடத்திவந்தார்கள்.

ஆ, கடவுளே, அவர்களின் துற்காலத்தை நற்காலமாக்கியது போலும், அவர்கள் சுகமனுபவித்ததுபோலும் நானும், இதைப்படிப்பவர்களும் கேட்பவர்களும், நற்காலம் பெறவும், சுகமனுபவிக்கவும், கருணைபுரிவீராக.



